# ஜகத்குரு ஸ்ரீ ஆதிசங்கரர்

ஆர்.பி.வி.எஸ். மணியன்



**வர்ஷன் பிரசுரம்**
ப.எண் 15/4, பு.எண் 33/4
ராமனாதன் தெரு
தியாகராய நகர்
சென்னை – 600 017
தொலைபேசி: 24340599

முதற்பதிப்பு : டிசம்பர் 2012

இரண்டாம் பதிப்பு : **நவம்பர் 2014**



**விலை : ரூ.100/-**

| | | |
|---|---|---|
| ❖ TITLE | : | JAGADGURU<br>SRI AADI SANKARAR |
| ❖ AUTHOR | : | R.B.V.S. MANIAN |
| ❖ LANGUAGE | : | TAMIL |
| ❖ EDITION | : | FIRST EDITION,<br>DECEMBER 2012 |
| ❖ PAGES | : | 208 |
| ❖ PUBLISHED BY | : | VARSHAN PRASHURAM<br>Old No.15/4, New No.33/4,<br>Ramanathan Street,<br>T. Nagar, CHENNAI - 600 017. |
| ❖ PRICE | : | Rs.100/- |

---

Laser Tyepset at : LKM Computer Printers, Chennai-17
Phone : 9940682929

Printed at : Swathi Creations, Chennai - 5.

# சில வார்த்தைகள்

*ஆதி சங்கரரை அறியாதவர்கள் இல்லை. அவரை ஒரு மாமனிதராகச் சித்தரித்து அவரது அரிய செயல்களை ஒரு சமுதாயத் தொண்டனின் கண்ணோட்டத்தில் எழுதி யிருக்கிறேன்.*

*இதில் கூறப்பட்டுள்ள சில விஷயங்களை சிலர் ஏற்கலாம்; சிலர் ஏற்காமலும் இருக்கலாம்.*

*அவரவர் கோணத்தில் வரலாற்று நாயகர்களைக் காண்பதில் தவறில்லை. ஆனால் அவர்கள் எந்த அடிப்படை லக்ஷியங்களை மனதில் கொண்டு செயலாற்றினார்களோ அவற்றை உருமாற்றாமல் எழுதவேண்டும். அந்த நோக்கில் இந்த நூல் தடம் புரளாமல் எழுதப்பட்டுள்ளது.*

**ஆர்.பி.வி.எஸ். மணியன்**

# பொருளடக்கம்


| | | பக்கம் |
|---|---|---|
| 1. | அறிமுகம் . . . . . . . . . . . . . . . . . . . . . . . . | 5 |
| 2. | காலத்தை வென்றவரின் காலம் . . . . . . . . . . | 9 |
| 3. | சங்கரரின் ஜன்ம பூமி . . . . . . . . . . . . . . . . | 18 |
| 4. | தவம் செய்து வந்த தவப்பயன் . . . . . . . . . . . | 24 |
| 5. | சங்கரரின் பால பருவம் . . . . . . . . . . . . . . | 31 |
| 6. | வறுமையை விரட்டிய வள்ளல் . . . . . . . . . . . | 35 |
| 7. | தாயின் பணியில் தனயன் . . . . . . . . . . . . . | 45 |
| 8. | துறவு பூண்ட தனயன் . . . . . . . . . . . . . . . | 52 |
| 9. | அத்வைத குரு பரம்பரை . . . . . . . . . . . . . . | 63 |
| 10. | கோவிந்த தரிசனம் . . . . . . . . . . . . . . . . | 79 |
| 11. | காசியில் சங்கரர் . . . . . . . . . . . . . . . . . | 85 |
| 12. | புலையன் புகட்டிய பாடம் . . . . . . . . . . . . . | 93 |
| 13. | வியாசர் வந்தார் . . . . . . . . . . . . . . . . . . | 100 |
| 14. | குமரில பட்டரும் சங்கரரும் . . . . . . . . . . . . | 104 |
| 15. | மண்டனமிச்ரர் வீட்டில் . . . . . . . . . . . . . . | 113 |
| 16. | அமாருகன் உடலில் . . . . . . . . . . . . . . . . | 122 |
| 17. | காபாலிக வதம் . . . . . . . . . . . . . . . . . . | 134 |
| 18. | பேசாத சீடன் . . . . . . . . . . . . . . . . . . . | 143 |
| 19. | தோடகாஷ்டகம் . . . . . . . . . . . . . . . . . . | 149 |
| 20. | பஞ்சபாதிகா . . . . . . . . . . . . . . . . . . . . | 153 |
| 21. | தாயின் தாளில் . . . . . . . . . . . . . . . . . . | 157 |
| 22. | சங்கரரின் திக்விஜயம் . . . . . . . . . . . . . . | 162 |
| 23. | பஜகோவிந்தம் . . . . . . . . . . . . . . . . . . . | 166 |
| 24. | சர்வக்ஞ பீடம் . . . . . . . . . . . . . . . . . . | 171 |
| 25. | கயிலையில் சங்கரர் . . . . . . . . . . . . . . . | 176 |
| 26. | ஷண்மத ஸ்தாபகர் . . . . . . . . . . . . . . . . | 181 |
| 27. | சங்கரர் ஏற்படுத்திய மடங்கள் . . . . . . . . . . . | - 185 |
| 28. | சங்கரர் மறைந்தார் . . . . . . . . . . . . . . . . | 190 |
| 29. | இரண்டாவது சங்கரர். . . . . . . . . . . . . . . . | 195 |
| 30. | நிறைவாக ஒரு வார்த்தை . . . . . . . . . . . . . | 205 |



அத்தியாயம் - 1

# அறிமுகம்

மேலை நாட்டவர்க்கு ஆதிசங்கரரை அறிமுகப் படுத்துகிறபோது சகோதரி நிவேதிதை அவர்கள்,

"மேலை நாட்டினராகிய நமக்கு ஆதிசங்கரர் போன்ற ஓர் அரிய மஹானின் பெருமையை எண்ணிப் பார்ப்பது கூட கடினம்.

நாம் கிறிஸ்தவ சமயத்தைச் சார்ந்த எபலார்டு (Abelard) அவர்களின் அறிவுத் திறனையும், மார்டின் லூதர் அவர்களின் விடுதலை வேட்கையையும், வீர்யம் மிக்க ஆற்றலையும், இக்னேஷியஸ் லயோலா அவர்களின் அரசியல் நுண்ணுர்வையும், அஸிஸியைச் சார்ந்த புனித ஃப்ரான்ஸிஸ் அவர்களின் பக்தியையும் மிகவும் மகிழ்ச்சி யோடும் ஆச்சரியத்துடனும் நினைத்துப் பார்க்கிறோம்.

ஆனால், இவ்வத்தனை குணங்களும் ஒரு சேரப் பெற்ற ஓர் அரிய ஞானியை நம்மாலே கற்பனை செய்து பார்க்க முடியுமென்றால் அவர்தான் ஆதிசங்கரர்" என்று கூறியுள்ளார்.

இதைவிட யாராலும் ஆதி சங்கரரின் அருங்குணங் களை இத்தனை அழகாக சித்தரிக்கவே முடியாது.

ஆம்! ஆதிசங்கரர் பல்வேறு திறமைகள் ஒருங் கிணைந்த ஓர் அபூர்வ மனிதர்; ஆம், அவர் ஒரு மனிதர்தாம்!

தன்னுள்ளே உறைந்து கிடக்கும் தெய்வீகத் தன்மையை முழுவதும் வெளிக் கொணர்ந்து செயற்கரிய செயல்கள் பல புரிந்து தெய்வமாய் உயர்ந்து இறைவனோடு இரண்டறக் கலந்த முழு மனிதர்தான் ஆதிசங்கரர்.

இத்தனைக் குறுகிய கால ஆயுளில் இவ்வளவு காரியங்களை அவரால் எப்படித்தான் சாதிக்க முடிந்ததோ?

திகைப்பாகத்தான் இருக்கிறது.

ஆனால், உண்மையில் ஆதிசங்கரர் முப்பத்திரண்டே ஆண்டுகளில் நமது ஹிந்து சமுதாயத்திற்கு மூவாயிரம் ஆண்டுகளுக்குத் தேவையானவற்றைச் செய்து சென்றிருக் கிறார்.

சரியான காலக்கட்டத்தில் சரியான ஒரு ஆசார்யனாக சங்கரர் மட்டும் தோன்றியிருக்காவிட்டால் ஹிந்து தர்மம் இருந்த இடம் தெரியாமல் போயிருக்கும்.

அவரிடம் தான் எத்தனை எத்தனை திறமைகள் குடி கொண்டிருந்தன.

ஒருவர் எழுத்தாளராக இருந்தால் அவரிடம் பேச்சுத் திறமை இருப்பது அபூர்வம். நல்ல பேச்சாளராக இருக்கக்கூடிய ஒருவர் நல்ல எழுத்தாளராக இருக்க மாட்டார். எழுத்துத் திறனும், பேச்சு ஆற்றலும் ஒருவரிடம் இருந்தாலும் கவி புனையும் சக்தி அவரிடம் இருக்காது.

ஒரு கவிஞராகவும், நல்ல எழுத்தாளராகவும், நல்லதொரு பாடகராகவும், சிறந்த உரையாசிரியராகவும்,

ஒரு இயக்கத்தைத் தோற்றுவித்து வழி நடத்திச் செல்லும் தலைவராகவும், நூல் ஆசிரியராகவும், இந்நாடு முழுவதையும் பலமுறை சுற்றி வந்துள்ள ஓர் ஒப்பற்ற யாத்ரீகராகவும், ஆன்ம ஞானியாகவும் வாழ்ந்து அருந்தொண்டு ஆற்றிய ஆதிசங்கரரையன்றி வேறு யார் இன்றைய இளைஞர் சமுதாயத்திற்கு உணர்ச்சி ஊற்றாய்த் திகழ முடியும்?

நினைத்து நினைத்து ஆச்சர்யப்படும்படியாக அப்படி ஒரு ஸாதனை செய்திருக்கிறார்!

தம்முடைய ஆத்ம சக்தி, அறிவு சக்தி, வாத சக்தி ஆகியவற்றைக் கொண்டே ஒரு சாதாரணத் துறவி இப்படிச் செய்திருக்கிறார்.

ஆதிசங்கரர் புதினங்களில் வரும் ஒரு கற்பனை உருவம் அல்ல. அவர் ஒரு வரலாற்று நாயகர். மேலைநாட்டு வரலாற்று ஆசிரியர்களாலேயே ஒப்புக் கொள்ளப்பட்ட ஒரு வரலாற்று புருஷர்.

வீரமும், தீரமும் அறிவும் ஆற்றலும் இணைந்த ஒரு மாமனிதர்.



அவரது அதீதமான ஆற்றலையும், அற்புதச் செயல்களையும் மனதில் கொண்டு அவரை ஒரு அவதார புருஷராக வர்ணித்து — "அவர் சாக்ஷாத் பரமேசுவரனின் அவதாரமாக வந்தவர். அதனாலேயே அவர் இப்படிப்பட்டப் பன்முகத் திறமைகள் கொண்டவராக இருந்தார். ஆனால், நாமோ சாதாரண மனிதர்கள். அதனாலேயே நம்மால் அத்தகைய சாதனைகளைச் செய்ய இயலாது," என்று ஒதுங்கிவிடுவது நமக்கு நம்முள் உறைந்திருக்கும் தெய்வீக ஆற்றல் மீது நம்பிக்கை இல்லை என்பதைத்தான் தெளிவுபடுத்துகிறது.

ஆத்திகனாக இருப்பவன் அத்தகைய அரும்பெரும் காரியங்களைச் செய்தவர்களை அவதாரப் புருஷர்கள் என்று சொல்லி அவர்களை வணங்குவதோடு தன் வேலை முடிகிறது என்று நிறுத்தி விடுகிறான்.

நாத்திகனாக இருப்பவன் இவற்றையெல்லாம் சமயவாதிகள் எழுதி வைத்தக் கட்டுக்கதைகள் என்று ஒதுக்கித் தள்ளிவிடுகிறான்.

நம்மால் கற்பனை செய்து பார்க்க முடியாத அளவிற்கு அரிய பல செயல்களை செய்த பெரியவர்களை அவதார புருஷர்களாக்கி அர்ச்சனை செய்வது ஹிந்து மரபு.

அதனால்தான் அண்மைக் காலத்தில் வாழ்ந்த பெரியவர்களையும் அவதாரப் புருஷர்களாவே எண்ணிப் பார்க்கத் தூண்டுகிறது நமது மனம்.

லோகமான்ய பாலகங்காதர திலகரையும், மஹாத்மா காந்தியடிகளையும் நாம் அவதார புருஷர்களாகவே பார்க்கிறோம்.

ராமகிருஷ்ணரையும், ரமணரையும், விவேகானந்தரையும், அரவிந்தரையும் கூட நம்மால் அவதார புருஷர்கள் என்று எண்ணாமல் இருக்க முடியவில்லை.

சாதாரண மனிதன் தன்னுள்ளே உள்ள தெய்வீக சக்தியை முழுமையாகப் பயன்படுத்தித் தனக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் ஆயுள் காலத்தை மிக்கப் பயனுள்ளதாகச் செலவிட்டு, தன்னுள்ளே பொதிந்து கிடக்கும் அத்தனைத் திறமைகளையும் வெளிப்படுத்தி, இறுதியில் பிறப்பு இறப்பு என்கிற சுழலிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்ளும் ஆத்ம ஞானத்தைப் பெற முடியும்.

அப்படிப் பெற்றவர்கள்தாம் அவதார புருஷர்களாக மாறியிருக்கிறார்கள் என்கிற பேருண்மையை உணர்த்துவது தான் அம்மஹான்களின் வாழ்க்கை வரலாறுகள் யாவுமே!

அத்தகைய நோக்கில் ஆதிசங்கரரின் வாழ்வை அணுகுவோம்!





அத்தியாயம் - 2

# காலத்தை வென்றவரின் காலம்

ஆதிசங்கரர் முப்பத்திரண்டு ஆண்டுகள் மட்டுமே வாழ்ந்தார் என்பதில் எந்த ஸந்தேஹமும் இல்லை யென்றாலும்கூட, அவர் ஆற்றிய தொண்டுகளைப் பற்றி சர்ச்சையில்லை என்றாலும் கூட, அவர் வாழ்ந்த காலத்தைப் பற்றிய சர்ச்சை இன்றுவரை முற்றுப் பெறவில்லை.

சங்கரரின் காலத்தை நிர்ணயிப்பதில் வரலாற்று ஆசிரியர்களிடையே நிகழும் வாதப் பிரதிவாதங்கள், ஆதிசங்கரர் வாழ்வைப் படித்து நமது வாழ்வைப் பயனுள்ளதாக ஆக்கிக் கொள்ள நினைக்கும் சாதாரண மனிதர்களாகிய நமக்குத் தேவையற்றவையென்றாலும் அவ்வாதப் பிரதிவாதங்களில் ·சிலவற்றின் சுவையான அம்சங்களைப் பார்ப்பதில் தவறில்லை.

மேற்கத்திய வரலாற்று ஆசிரியர்கள் நிலை நாட்டிவிட்ட கிறிஸ்து சகாப்த ஆண்டுக்கணக்கீட்டைக்

கொண்டு நமது நாட்டின் தொன்மையான வரலாற்று நிகழ்வுகளை முடிவு செய்யும்போது சில சிக்கல்கள் இருந்தே தீரும்.

தொன்மைமிகு வரலாற்றைக் கொண்ட பாரத நாட்டில் பல்வேறு காலக்கட்டங்களை நிர்ணயிப்பதற்கு வரலாற்று ஆசிரியர்கள் நமது பண்பாட்டிற்கும் வரலாற்றுக்கும் சற்றும் ஒத்துவராத கிறிஸ்து சகாப்தத்தைப் பின்பற்றுவதுதான் நாம் காணும் பல்வேறு முரண்பாடுகளுக்கும் காரணம் ஆகும்.

சங்கரரின் காலத்தை நிர்ணயம் செய்வதிலும் முரண்பாடுகளுக்குக் காரணம் இந்த ஆண்டுக் கணக்கீட்டின் அவலம்தான்.

சங்கரர் தமது முப்பத்திரண்டு ஆண்டுகளில் செயற்கரிய செயல்களைச் செய்து விட்டுப் போய்விட்டார். தமது வாழ்க்கைக் குறிப்பு என்பதாக அவர் எதையும் விட்டுப் போகவில்லை.

அவர் மறைந்து பல நூறு ஆண்டுகளுக்குப் பின்னால் தான் பலர் அவரது வாழ்க்கை வரலாற்றை எழுதி யிருக்கிறார்கள்.

சங்கரரது வரலாற்றுத் தகவல்களை சேகரிப்பதில் அந்த வரலாற்றை எழுதியவர்கள் கஷ்டப்பட்டிருப்பார்கள்.

போக்குவரத்து சாதனங்களும், செய்தித் தொடர்பு சாதனங்களும் அதிநவீனமாக்கப்பட்டுள்ள இந்தக் காலத்திலேயே ஒரு நிகழ்வைப் பற்றி ஒரே விதமான விவரம் நமக்குக் கிடைப்பதில்லை.

அந்த நாளில் சில முரண்பட்டத் தகவல்கள் கிடைத்துள்ளதில் என்ன அதிசயம்?

இன்றைக்கு சங்கரரின் வரலாற்றை நாம் அறிந்து கொள்ள பெரிதும் உதவுவது அவரது வரலாற்றைப் பல்வேறு காலக்கட்டங்களில் தொகுத்து வழங்கியுள்ள சிலரது நூல்களேயாகும்.

சங்கரரின் சரித்திரத்தைச் சொல்லும் எல்லா நூல்களுக்குமே 'சங்கர விஜயம்' என்ற பொதுப் பெயர் உண்டு.

(1) சித்ஸுகாச்சார்யர் என்பவரது ப்ரஹத் சங்கர விஜயம் என்ற நூல் மிகப் பழமையான விஸ்தாரமான சங்கர விஜயம் ஆகும். இந்த நூல் இன்றைக்கு முழுமையாகக் கிடைக்கவில்லை. மற்ற புத்தகங்களில் இந்த நூலிலிருந்து மேற்கோள்கள் எடுத்துக் கையாளப்பட்டிருப்பதிலிருந்து இந்த நூலைப் பற்றித் தெரிய வந்திருக்கிறது.

(2) ஆனந்தகிரியின் ப்ராசீன சங்கர விஜயம். இந்த நூலும் இன்றைக்குக் கிடைக்கவில்லை.

(3) ஆனந்த கிரீய சங்கர விஜயம் என்பதாகவே ஒரு நூல் உள்ளது. இது ஆனந்தானந்த கிரி என்பவர் எழுதியதாகும்.

(4) வ்யாஸாசாலீய சங்கர விஜயம். இதனை எழுதியவர் சங்கராநந்தர் என்பவராகும்.

(5) ஆசார்ய சரிதம் என்ற பெயரில் அறியப்படும் கேரளீய சங்கர விஜயம். கோவிந்த நாதீயம் என்று இதுவே அதனை எழுதிய கோவிந்தநாதர் பெயரால் அறியப் படுகிறது.

(6) ராஜசூடாமணி தீக்ஷிதர் என்பவர் 'சங்கர அப்யுதயம்' என்ற சங்கர சரித்திரத்தை எட்டு ஸர்க்கங்களில் காவ்யமாக எழுதியிருக்கிறார். இவர் அப்பைய தீக்ஷிதரின் மைத்துனர் ஆவார்.



(7) வல்லீஸஹாய கஜி என்பவர் ''ஸ்ரீசங்கராச்சார்ய சம்பூ'' என்று செய்திருக்கிறார். இது கவிதையும் வசன நடையும் கலந்து கலந்து வரும் 'சம்பூ' காவ்ய நடையில் எழுதப்பட்டுள்ளது.

(8) சித்விலாஸர் என்பவர் 'விக்ஞான கந்தர்' என்பவரோடு நடத்திய உரையாடல் வடிவில் சித்விலாஸீயம் என்று ஒரு நூல் உள்ளது.

*(9)* ஸதாநந்தர் என்பவர் எழுதிய சங்கர திக்விஜய ஸாரம்.

*(10)* மாதவீய சங்கர விஜயம் என்ற நூல் மிகவும் ஆதாரப்பூர்வமானதாகக் கருதப்படுகிறது. இது கி.பி.1380ல் துறவியாகி ச்ருங்கேரி பீடத்தின் ஆசார்யராக இருந்து கி.பி.1386ல் காலமான வித்யாரண்யரால் எழுதப்பட்டது. இவரது பூர்வாசிரமப் பெயரே மாதவ என்பது. இவரது சகோதரர் ஸாயனாச்சார்யர்தான் ரிக்வேத பாஷ்யம் எழுதியவர் ஆவார்.

இந்த எல்லா சங்கர விஜய நூல்களிலுமே சங்கரர் தோன்றிய காலக்கட்டத்தின் சமுதாய சூழ்நிலை, அரசியல் ஸ்திரமின்மை, புறச்சமயத்தாக்கம், லோகாயத ரீதியான அவைதிக மார்க்கங்கள் மக்களை தவறான திசையில் இட்டுச் சென்ற விவரம் ஆகியவை இருந்தாலும் கலியுகத்தின் எத்தனாவது ஆண்டில் அவர் பிறந்தார் என்ற துல்லியமான விவரம் இல்லை. இதனாலேயே&

சிருங்கேரி பீடத்தின் ஆசாரியர் வரிசையைக் கொண்டு அம்மடத்தினர் சங்கரரின் காலத்தை கி.பி. 788 முதல் கி.பி.820 வரை எனக் கணக்கிட்டுள்ளனர்.

ஆனால், காஞ்சி காமகோடி பீடாதிபதிகளின் வரிசைப்படி சங்கரர் கி.மு.509ல் பிறந்திருக்க வேண்டும் என்று தெரிகிறது.

இது தவிர வேறு தேதிகளைக் கூறும் ஆய்வாளர்களும் உள்ளனர்.

இந்த இரண்டு பிரபலமான கால நிர்ணயங்களில் & அதாவது கி.பி.எட்டாம் நூற்றாண்டின் இறுதி, அல்லது கி.மு. ஐந்தாம் நூற்றாண்டின் தொடக்கம் ஆகியவற்றில் கிறிஸ்துவிற்கு முந்தைய காலத்தை ஏற்பதே சரியெனத் தோன்றுகிறது.

**கி.பி.எட்டாம் நூற்றாண்டை ஏற்க மறுக்கும் காரணங்கள்:**

- கி.பி. எட்டாம் நூற்றாண்டில் ஏற்கெனவே ஸிரியன் கிறிஸ்தவர்கள் கேரளத்தில் காலூன்றி விட்டிருந்தனர்.

இந்த மிலேச்சர்களைப் பற்றி சங்கரர் எந்தக் குறிப்பும் தரவில்லை.

❖ இந்தக் காலக்கட்டத்தில் இஸ்லாம் வட பாரத்தின் மீது சிந்து மாநிலத்தில் வேரூன்றிவிட்டது. இஸ்லாமியர் படையெடுப்பையும், இஸ்லாமிய மதத்தையும் பற்றி சங்கரர் எங்கும் ஏதும் குறிக்கவில்லை.

❖ சங்கரர் ப்ரம்மஸூத்ர பாஷ்யத்தில் பாடலிபுத்ர நகரைப் பற்றிக் கூறுகிறார். பாடலிபுத்ரம் கி.பி.750ல் வெள்ளத்தால் அழிந்தது. எனவே, அதற்கு முன்னதாகவே அவர் வாழ்ந்திருக்க வேண்டும்.

❖ கம்போடியா நாட்டுக் கல்வெட்டு ஒன்றில் சிவஸோமன் என்பவன் தன்னை பகவான் சங்கரரின் சீடனாகக் கூறிக் கொள்கிறான். இவன் இந்த்ரவர்மன் வம்சத்தில் வந்தவன் எனவும் கி.பி.876&887ல் வாழ்ந்ததாகவும் தெரிகிறது.

ஆனால், இங்கு குறிக்கப்படும் பகவான் சங்கரர் ஆதி சங்கரராக இல்லாமல் காஞ்சி காமகோடி பீடத்தின் முப்பத்தெட்டாவது பீடாதிபதியான அபிநவ சங்கரராக இருக்கலாம் என நம்புவதற்கு இடம் இருக்கிறது.

❖ ஸௌந்தர்ய லஹரியின் 75வது சுலோகத்தில் சங்கரர் குறிக்கும் 'திராவிட சிசு' என்ற ஒரு வார்த்தையை வைத்துக் கொண்டு அச்சொல் திருஞானசம்பந்தரைக் குறிப்பதாகவும், ஆகவே, ஆதிசங்கரர் திருஞான சம்பந்தருக்கும் பின்னால் வாழ்ந்திருக்க வேண்டும் என்று முடிவு கட்டுவாரும் உண்டு.

ஆயினும் இது தவறானது.

சங்கரர் தமது சிவானந்த லஹரியில் கண்ணப்ப நாயனாரைக் குறிக்கிறார். சிவபுஜங்க ஸ்தோத்திரத்தில் சுந்தரமூர்த்தி நாயனாரையும் சிறுத்தொண்டரையும் குறித்திருக்கிறார். இவற்றையெல்லாம் ஆதாரமாகக் கொண்டு சங்கரரின் காலத்தை நாம் தள்ளிக் கொண்டே போக முடியாது.

❖ சங்கரரின் சமகாலத்தவரான குமரிலபட்டரின் காலமும் சரியாக நிர்ணயிக்கப்படவில்லை. எனவே அவரது காலத்தைக் கொண்டு சங்கரரின் காலத்தை நிர்ணயிப்பது சரியல்ல.

ஆசார்ய சங்கரரின் காலம் கி.மு.500ஐ ஒட்டியது என்பதை த்வாரகா பீடம், பூரி பீடம், ஜ்யோஷி பீடம், காஞ்சி மடம் ஆகியவை ஏற்றுக் கொண்டுள்ளன.

துவாரகா பீடத்தில் பத்தொன்பதாம் நூற்றாண்டில் பீடாதிபதிகளாக இருந்த ஒருவர் 'விமர்சா' என்ற புஸ்தகத்தில் சங்கரரது பிறப்பு கி.மு.509ல் நிகழ்ந்தது என்று எழுதியிருக்கிறார்.

அந்த பீடத்தின் மடாதிபதிகள் வரிசைக்கிரமத்தில் பார்த்தாலும் சங்கரர் வாழ்ந்தது கி.மு.509க்கும் கி.மு.477க்கும் இடைப்பட்டக் காலத்தில்தான் என்பது நிரூபணமாகிறது.

பூரி ஜகந்நாதத்தில் சங்கரர் ஸ்தாபித்த கோவர்த்தன பீடத்தினரும் அவரது காலம் கி.மு. 6&5 நூற்றாண்டு என்றே சொல்லுகிறார்கள்.

❖ பத்ரிநாத்தில் சங்கரர் ஏற்படுத்திய மடத்திற்கு ஜ்யோஷி மடம் என்று பேர். அந்த மடத்தினர் "மடானுசாஸனம்" என்பதாக ப்ரசுரம் ஒன்றை 1946ல் வெளியிட்டிருக்கிறார்கள்.

அதிலும் சங்கரரது பிறப்பை கி.மு.509ல் நிகழ்ந்ததாகவே காட்டியுள்ளார்கள்.

நாட்டின் வெவ்வேறு மூலைகளில் உள்ள ஒன்றுக்கொன்று ஏறத்தாழ 1500 கிலோ மீட்டர்களுக்கு மேல் தள்ளியுள்ள இந்த மடங்களில் அவற்றை ஸ்தாபித்த மூலபுருஷர்களின் காலம் கிறிஸ்து சகாப்தத்திற்கு ஐநூறு வருஷம் முன்னால் என்று ஒருமித்த கருத்தாகச் சொல்லி இருப்பதை கவனித்தால் இதுவே சரியானது என்று புலனாகும்.

காலங்கடந்து நிற்கும் கருத்துக்களைத் தந்த சங்கரரின் காலத்தைப் பற்றி ஆராய்ச்சி செய்வதை விட்டு விட்டு அவரது கருத்துக்களில் கவனம் செலுத்துவதே புத்திசாலித்தனம் என்று எண்ணுகிறேன்.

அவர் ஆற்றிய அருந்தொண்டுகள் அவரது காலத்தில் வாழ்ந்த சமுதாயத்தினருக்கு மட்டுமல்லாமல், இன்றும், இனி என்றும் நமக்குப் பயன் அளிப்பதாக அமைந்துள்ளன.

அவர் வாழ்ந்த காலத்தின் சமுதாயச் சூழ்நிலையை ஒரு கணம் மனக்கண்முன் கொண்டு வந்தால் நாம் காண்பது என்ன?

சங்கரர் பிறந்தபோது பாரதநாடு ஓர் இருண்ட காலக் கட்டத்தைக் கடந்து கொண்டிருந்தது என்று சொல்வது மிகையாகாது.

அரசியல் ரீதியாக நாடு பல சிறு பகுதிகளாக சிதறுண்டு குறுநில மன்னர்கள் தமக்குள் ஒற்றுமையின்றி சண்டையிட்டு வந்தனர். அகில பாரத அளவில் சக்ரவர்த்தி என்பதாக யாரும் இல்லை.

சமுதாய ரீதியாக ஜாதிகள் பல்கிப் பெருகி தமக்குள் மோதிக் கொண்டு இருந்தன.

எண்ணற்ற ஸம்பிரதாயங்கள் புற்றீசல்கள் போல தோன்றியிருந்தன. இவை மக்களை சரியான ஆன்மிகப் பாதையில் செல்ல முடியாதபடி தடுத்து வந்தன.

பல்வேறு சங்கர விஜய நூல்களிலும் சங்கரர் பிறந்த காலக்கட்டத்தில் ஏறத்தாழ 72 துர்மதங்கள் ஜனங்களைக் கலக்கிக் கொண்டிருந்தன என்ற தகவல் தரப்பட்டுள்ளது.

இந்த எழுபத்திரண்டு மதங்களுக்கும் பெயர் தெரியாவிட்டாலும் நாற்பது நாற்பத்தைந்து மதங்களின் பெயர்களை அறிய முடிகிறது.

சங்கர விஜய நூல்களில் அநேக மதங்களின் பெயர்களைச் சொல்லி அவற்றையெல்லாம் அவர் நிராகரணம் செய்தார் என்று கூறப்பட்டுள்ளது.

ஹிரண்ய கர்ப்ப மதம், இந்த்ர மதம், குபேர மதம், மன்மத மதம், யம மதம் என்றெல்லாம் கூட இவர்கள் ஒவ்வொருவரையும் முழு முதல் தெய்வமாக வைத்து மதங்கள் இருந்திருக்கின்றன.

பித்ருக்களை வழிபடும் மதம், பூத வேதாளங்களைக் குறித்த மதம், குணங்களே கடவுள் என்று வழிபடுவது,

காலமே கடவுள் என்று வழிபடுவது என்றெல்லாம் விசித்திரமான மதங்கள் இருந்திருக்கின்றன.

இவை தவிர இன்னதுதான் ஸித்தாந்தம் என்று பூர்ணமாகத் தெரிந்த ஒரு இருபது இருபத்தைந்து மதங்கள் இருந்திருக்கின்றன.

காபாலிகம், காளாமுகம், பைரவம் என்றெல்லாம் ஒரு பக்கம் கொடூரமான உபாஸனைகள் புத்துயிர் பெற்றிருந்தன. சக்தி உபாஸனையில் வாமாசாரம் என்பதாக ஆபாசமான அனுஷ்டானங்கள் தலை தூக்கின.

புத்த மதமும், ஜைன மதமும் சவச் சுமைகளாக அரசியல் ஒட்டுண்ணிகளாக சமுதாயத்தின் மீது தொத்திக் கொண்டிருந்தன.

புத்த விஹாரங்கள் ஆன்மிக கேந்திரங்களாக இல்லாமல் அரசியல் சதிகளின் பிறப்பிடங்களாக விளங்கி வந்தன.

அப்போதைய பாரதத்தின் நிலை எப்படி இருந்தது என்றால் பூரணமான வைதிக மதம் மிகவும் க்ஷீணித்துப் போயிருந்தது, வைதிகம் என்ற போர்வையில் தாந்த்ரிக மதங்களும், வேதம், பகவான் என்ற இரண்டையும் அடியோடு தள்ளிவிட்ட அவைதிக மதங்களும் நாட்டில் மலிந்திருந்தன.

ஆக்க ரீதியில் மக்களை அழைத்துச் செல்ல ஆன்மிகத் தலைவர்கள் யாருமே இல்லை.

சமுதாயத்தை உய்விக்க ஒருவன் பிறக்க மாட்டானா என்று நல்லவர்கள் ஏங்கிக் கொண்டிருந்தனர்.

அத்தகைய காலம் வேண்டிப் பிறந்த ஆன்மிகத் தலைவர்தான் சங்கரர்.

சமுதாயத்தின் சோதனைக் காலக்கட்டங்களில் பிறப்பவர்களுக்குச் சில விசேஷப் பொறுப்புணர்வுகள் இருக்க வேண்டும்.

ஒரு சமுதாயம் அரசியல் அடிமைத் தளையில் சிக்குண்டு கிடக்கும்போது பிறக்கும் மக்களுக்கு

அந்நாட்டிற்கு அரசியல் விடுதலை வாங்கித் தர வேண்டிய விசேஷப் பொறுப்பு உண்டு.

அதுபோலவே அஞ்ஞான இருளில் ஆழ்ந்து கிடக்கும் சமுதாயத்தில் ஞான ஒளியைத் தோற்றுவிக்கும் பொறுப்பை அத்தகைய சமுதாயத்தில் பிறக்கும் யாரேனும் ஏற்றே தீர வேண்டும்.

சமயத் துறையிலும் ஆன்மிக வாழ்விலும் சமுதாயத்திற்கு வழிகாட்டும் மிகப் பெரிய பொறுப்புடன் சங்கரர் பிறந்தார்.

அப்பெரும் பொறுப்பினைச் சிறுவயதிலேயே உணர்ந்து அதனை நிறைவேற்ற வல்லவனாகத் தன்னைத் தயார் செய்து கொண்டார். அதற்குத் தேவையான அனைத்துப் பயிற்சிகளையும் முறையாகப் பெற்றார்.





அத்தியாயம் - 3

# சங்கரரின் ஜன்ம பூமி

சங்கரர் பிறந்த சிற்றூர் காலடியாகும். இது இன்றைய கேரள மாநிலத்தில் ஆலவாய் (Alway) புகைவண்டி நிலையத்திலிருந்து ஆறு மைல் தூரத்தில் உள்ளது.

இன்றைய கேரளத்தின் மாநில மொழி மலையாளம். ஆகவே கேரளத்தில் பிறந்த சங்கரரின் தாய்மொழி மலையாளமாகத்தான் இருக்கும் என்று நாம் நினைப்போம்.

மலையாள மொழி ஆயிரம், ஆயிரத்திருநூறு வருடங்கள் முந்தித்தான் தோன்றியது. அதற்கு முன்னதாக அந்தப் பகுதியில் வாழ்ந்த மக்கள் தமிழே பேசி வந்தனர்.

இன்றைக்கு கேரளம் தனி மாநிலமாகத் திகழ்கிறது. ஆனால், அந்த மாநிலம் உருவான காலக்கட்டத்தில் தமிழகத்திற்கு அண்மையில் தமிழகத்தை ஒட்டி இருந்ததால் தமிழக அரசர்களே அங்கும் ஆட்சி செலுத்தினர்.

தமிழகத்தை முன்னாளில் சோழ, சேர, பாண்டிய மன்னர்கள் ஆண்டது நமக்குத் தெரியும். அதில் சேர வம்சத்தவர்கள் ஆண்டது இந்தப் பகுதியில்தான். சில நேரங்களில் சேரர்கள் கை தாழ்ந்தபோது சோழர்களோ, பாண்டியர்களோ இந்தப் பகுதியைத் தங்கள் ஆட்சியின் கீழ் கொண்டு வந்ததும் உண்டு. தெய்வத்தமிழ் என்றே சொல்லும்படியான நல்ல தமிழில் திருமுறையும், ப்ரபந்தமும் பாடிய சேரமான் பெருமாள் நாயனாரும், குலசேகராழ்வாரும் மலையாளத்தை ஆண்ட தமிழ் மன்னர்களே.

ஆகவே சங்கரர் தமிழ்தான் பேசியிருப்பார் என்பதில் எந்த சந்தேகமும் இல்லை.

இன்றைக்குக் கேரள மாநிலம் என்று அறியப்படுகிற பகுதி ஒரு காலத்தில் பரசுராம க்ஷேத்திரம் என்று அறியப்பட்டது.

மலையாள தேசம் தோன்றிய வரலாற்றைக் கூறும் "கேரளோத்பத்தி" என்ற நூலில் கூறப்பட்டுள்ள விஷயங்களை ஆதாரமாகக் கொண்டு சில விஷயங்களைப் பார்ப்போம்.



பரசுராமர் தன் தந்தையின் உயிரைப் பறித்த கார்த்தவீர்யார்ஜுனனின் குடும்பத்தைப் பூண்டோடு ஒழித்தார். ஆனாலும் ஆத்திரம் அடங்கவில்லை.

க்ஷத்ரிய வம்சத்தை வேரும் வேரடி மண்ணும் இல்லாமல் செய்துவிட வேண்டும் என்ற ஒரு வெறி.

21 தலைமுறை க்ஷத்ரிய வம்சத்தை அழித்துத் தன் ஆத்திரத்தைத் தீர்த்துக் கொண்டார். தேசத்தை ஆள்பவர்கள் இல்லை என்ற ஒரு நிலை உருவாயிற்று.

கச்யப ப்ரஜாபதி என்பவரிடம் தான் வென்ற பூமியை தானம் செய்துவிட்டு புதிதாக வசிக்க நிலம் ஒன்று தேடினார்.

மேற்கு கடலில் இருந்த ஜலத்தை வற்றச் செய்து வடக்குத் தெற்காக பல மைல் தூரம், அதைவிடக் குறைவாக கிழக்கு மேற்காக கடல் ஜலத்தை வற்றச் செய்து நிலப்பகுதி ஒன்றை உருவாக்கினார்.

கடல் ஆழத்திலிருந்து இந்த பூமி வெளிவந்தது. இதன் இந்தப் பகுதியில் மேற்குத் தொடர்ச்சி மலை. மலையை ஒட்டிய கடல் ஆழத்திலிருந்து வெளிப்பட்ட பூமி மலையாளம் என்று பெயர் பெற்று, மலை + ஆழம் = மலையாளம் ஆயிற்று. கடல் உள்வாங்குவது என்று சொல்வார்களே அப்படி ஒன்று நிகழ்ந்தது என்று வைத்துக் கொள்ளலாம். ஆங்கிலத்தில் இதனை (Reclamation Bay) என்று கூறுவதுண்டு.

மும்பை நகரில் நாரிமன் பகுதியில் இப்படிக் கடலிலிருந்து ஒரு பகுதியை மீட்டு அடுக்குமாடிக் குடியிருப்புகளை அமைத்திருக்கிறார்கள் என்பது நமது காலத்து வரலாற்று உண்மை.

இப்படிக் கடலிலிருந்து நிலத்தை மீட்டது என்பதெல்லாம் புராணப் பொய் என்பதாக நாம் நினைத்து விடக்கூடாது.

பரசுராமரால் உருவாக்கப்பட்ட இந்தப் பிரதேசத்திற்கு பரசுராம க்ஷேத்திரம் என்று பெயர் அமைந்தது.

இந்தப் புதிய நிலப்பரப்பில் நமது தேசத்தில் பிற பகுதிகளிலிருந்து வேத ப்ராம்ணர்களைக் குடியேறச் செய்தார்.

இந்த நிலப்பகுதிக்கு அருகிலிருந்த தமிழகம், கர்நாடகம் கொங்கண தேசம், ஆந்திரம் ஆகியப் பகுதிகளிலிருந்து ப்ராம்மணர்கள் குடியேறினார்கள்.

புதிய நிலப்பரப்பின் சீதோஷ்ணநிலை ஒத்துக் கொள்ளாமல் சில ப்ராம்மணக் குடும்பங்கள் திரும்பிச் சென்றதும் உண்டு.

பூர்வீகத்தில் இங்கு குடியேறிய ப்ராம்மணர்கள் அவரவர்களது தேச ஆசாரத்தோடேயே வாழ்ந்தனர்.

அதாவது இன்றைக்கு 2500 ஆண்டுகளுக்கு முன்னால் வரை, அதாவது ஆதிசங்கரர் பிறந்த காலத்தில் அந்தந்த குல ஆசாரமே பின்பற்றப்பட்டு வந்தது.

பின்னாளில் ஏறத்தாழ கடந்த 1500 ஆண்டுகளுக்குள்தான் இவர்களது ஆசார வ்யவஹாரங்களில் மாற்றம் ஏற்பட்டு நம்பூதிரி ப்ராம்ணர்கள் என்ற புதிய சமுதாயம் ஏற்பட்டது.

அதாவது ஆதிசங்கரர் காலத்தில் நம்பூதிரிகள் என்ற வகுப்பே கிடையாது.

ஆதிசங்கரது பெற்றோரும் சரி, அவரும் சரி அப்பட்டமான தமிழ் ஸ்மார்த்த ப்ராமணர்களே.

இவர்களது முன்னோர்கள் தமிழகத்தின் சோழ தேசப் பகுதிகளிலிருந்து குடியேறிவர்கள். குறிப்பாக கும்ப கோணம் பகுதியிலிருந்து வந்தவர்கள். சோழ தேசத்து ப்ராம்மணர்களை சோழியர்கள் என்று கூறுவதுண்டு.

பிற்காலத்தில் நம்பூதிரிகளாக இவர்கள் உருமாற்றம் பெற்ற போது சிலர் தங்களை இந்தக் குலத்தவர்கள் என்று சொல்லிக் கொள்ள மனை, இல்லம் என்ற தமிழ் சொற்களையே பயன்படுத்தி உள்ளனர்.

ஆதிசங்கரர் சார்ந்திருந்த குடும்பத்தவர்கள் பின்னாளில் நம்பூதிரிகளாக மாறியபோது தங்களை ‘கைப்பள்ளிமனா’ என்று அழைத்துக் கொண்டு இருந்திருக்கின்றனர். இதனாலேயே ஆதிசங்கரரையும் நம்பூதிரி என்பதாக சிலர் நினைத்துக் கொண்டு இருக்கின்றனர்.

தமிழர்கள் எங்கு சென்று குடியேறினாலும் தங்கள் ஊர்ப் பெயர்களையும், தங்கள் ஊர்க் கோயில்களையும் அங்கு எடுத்துச் செல்வது மரபு.

இன்றைக்கு திருச்சூர் என்று வழங்கும் கேரளத்து நகரம் இன்றும் சிவபுரம் என்றே அறியப்படுகிறது.

கும்பகோணத்துக்கு தென் கிழக்கில் மூன்று மைல் தூரத்தில் உள்ள சிவபுரத்துக்காரர்கள் தாம் பரசுராம

க்ஷேத்திரத்துக்குக் குடி பெயர்ந்தபோது அங்கே ஒரு சிவபுரத்தை உருவாக்கி அதுவே திருச்சிவப்பேரூர் ஆகி இன்று திருச்சூர் என்று திரிந்திருக்க வேண்டும்.



ஒருக்கால் இந்த சிவபுரத்து ப்ராம்மணக் குடும்பம் ஒன்றில் தான் ஆதிசங்கரர் பிறந்திருக்கிறார்.

கும்பகோணத்தை அடுத்துள்ள சிவபுரத்தில் உள்ள ஈசுவரனுக்கு சிவகுருநாதர் என்றே பெயர். ஆதிசங்கரரின் தந்தையின் பெயரும் சிவகுரு என்பதாகும்.

காலடியில்தான் அதுவும் இந்த இடத்தில்தான் சங்கரர் பிறந்தார் என்பதை நிரூபிக்க கைப்பள்ளிமனை நம்பூதிரி வம்சத்தினர் ஆர்யம்பாவின் இல்லத்தில் தினசரி விளக்கேற்றி வந்தனர்.

ஆனாலும் ஆதிசங்கரரின் ஜன்மஸ்தலம் காலடி என்பது 1905 வரை வெறும் சப்த மாத்திரமாகத்தான் இருந்தது. ஸ்ரீ சிருங்கேரி சாரதா பீடத்தின் 33வது பீடாதிபதியாக விளங்கியவர் ஸ்ரீ சச்சிதானந்த சிவாபிநவ நரஸிம்ஹ பாரதி ஸ்வாமிகள் ஆவார்.

இவர்களின் அருளாட்சிக் காலம் 1879 முதல் 1912 வரையாகும்.

1905ல் இந்த மஹான் ஸ்ரீ சிருங்கேரி மஹா ஸந்நிதானமாக இருந்த காலத்தில் இவரது உத்தரவின் பேரில் நடுக்காவேரி ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகள் சங்கரர் ஜனித்த வீட்டை உள்ளூர்வாசிகளின் உதவியோடு கண்டுபிடித்தார்.

அந்த இடம் அப்போது கைப்பள்ளி மனா நம்பூதிரிகள் வசம் இருந்தது.

1904ஆம் ஆண்டு புராதனச் சின்னங்களைக் கண்டறிந்து அவற்றைப் பராமரிக்கும் வண்ணம் Ancient Monuments Preservation Act என்கிற சட்டத்தினை அப்போதைய வைஸ்ராய் கர்ஸான் கொண்டு வந்தார். இந்த சட்டத்தின் துணை கொண்டு ஸ்ரீ ச்ருங்கேரி மஹா ஸந்நிதானத்தின் ஆக்ஞைப்படி திருவாங்கூர் ஸமஸ்தான மஹாராஜா ஸ்ரீ ராம வர்ம குலசேகரரர் அவர்கள் இந்த நிலத்தை (கைப்பள்ளி நம்பூத்ரி பேரில் பட்டாவாகி தெக்கே மடம் சுவாமியார் பொறுப்பில் இருந்த குண்டக்கரா புரையிடம் இலக்கம் 115 என்ற நிலப் பகுதிதான் சங்கரர் பிறந்த வீடு இருந்த இடம், சங்கரரது தாயார் உடல் தஹனம் செய்யப்பட்ட இடம்) கைப்பள்ளி மனா குடும்பத்தினரிடமிருந்து வாங்கி ஸ்ரீ சிருங்கேரி மடத்திற்குத் தந்தார். இவ்விடம் தற்போது ஸ்ரீ சிருங்கேரி மடத்தின் ஆதீனத்தில் உள்ளது.

1910ஆம் ஆண்டு பிப்ரவரி 21ஆம் தேதி காலடி க்ஷேத்ரத்தில் ஸ்ரீ சங்கரர் ஆலயம், ஸ்ரீ சாரதா ஆலயம் ஆகியவற்றின் கும்பாபிஷேகங்கள் முறைப்படி ஸ்ரீ சச்சிதானந்த சிவாபிநவ நரஸிம்ஹ பாரதி ஸ்வாமிகளின் பொற்கரங்களால் திவ்யமாக நடந்தேறின.

இந்தக் கும்பாபிஷேகத்தின் நூற்றாண்டு விழாவும் அண்மையில் 2010ஆம் ஆண்டு மே மாதத்தில் தற்போதைய சிருங்கேரி பீட மஹா ஸன்னிதானம் ஸ்ரீ பாரதி தீர்த்த ஸ்வாமிகளின் முன்னிலையில் நடந்தேறியுள்ளது. காலடிக்கு ஒரு காலத்தில் ஸஷாமம் என்ற பெயரே இருந்திருக்கிறது.

சங்கரர் வாழ்வில் நிகழ்ந்த ஒரு சம்பவத்தாலேயே இந்த ஊருக்கு காலடி என்ற பெயரே உண்டாயிற்று என்பர்.



அத்தியாயம் - 4

# தவம் செய்து வந்த தவப்பயன்

ஆதி — சங்கரரின் முன்னோர்கள் காலடியில் குடியேறியிருந்தனர். ஆதிசங்கரரின் பாட்டனார் வித்யாதிராஜர் ஆவார். இவர் ஆத்ரேய கோத்ரத்தைச் சேர்ந்தவர். இவரது உத்தம புத்திரனே சிவகுரு என்பவர் ஆவார். அவர் வைதீக நெறி பிறழாத அந்தணர்.

இவர் தம் அன்பு மனையாளாக ஆர்யாம்பா என்பவரை அடைந்தார்.

சிவகுரு — ஆர்யாம்பா தம்பதியினருக்கு நெடுங் காலத்திற்கு மக்கட்பேறு வாய்க்கவில்லை.

திருச்சூர் சென்று வடக்குநாதன் கோயிலில் பஜனம் இருந்தால் குழந்தை பெற வாய்ப்புண்டு என்று ஆர்யாம்பா நினைத்தாள்.

கணவரோடு திருச்சிவப்பேரூராம் திருச்சூரில் ஒரு மண்டலம் தங்கியிருந்தாள். அதிகாலையில் எழுந்து நன்னீராடி வடக்குநாதனை வலம் வந்து வழிபட்டு வெறும் பால் மட்டுமே அருந்தி விரதம் இருப்பதே பஜனம் ஆகும். இதனை பயோ விரதம் என்று பகர்வதும் உண்டு.

ஒரு மண்டலம் என்பது 48 நாட்களாகும். இந்த ஒரு மண்டல காலத்திற்கு அப்படி என்ன சிறப்பு என்றால் கிரஹங்கள் ஒன்பது, ராசிகள் பன்னிரண்டு, நக்ஷத்திரங்கள் இருபத்தேழு. இவை எல்லாம் வான் மண்டல வட்டப் பாதையில் இடம் பெற்றிருக்கின்றன. இவைகளின் கூட்டு எண்ணிக்கை 48. இவைகள் அவரவர் ஜாதகத்தில் அமைந்திருப்பதற்கேற்ப அவரவர் வாழ்வில் சில தாக்கங்கள், பாதிப்புகள் ஏற்படுகின்றன. எனவே இவற்றை யெல்லாம் படைத்து, நம்மையும் படைத்துள்ள பரமனை நாற்பத்தெட்டு நாட்கள் (ஒரு மண்டலம்) முறையாக வழிபட்டால் — அந்தப் பரம்பொருளின் அருளால் இந்த வான் மண்டலத்து க்ரஹ தேவதைகள் நமக்கு நல்லதே நடக்க அனுக்ரஹிப்பர்.

திருச்சூர் சிவாலயத்தில் உள்ள இறைவனுக்கு வடக்குநாதன் என்றும், வ்ருஷாசலேச்வரர் என்றும் பெயர்கள் உண்டு. கயிலை வடக்கே இருப்பதால் இங்கே கயிலைநாதனை வடக்கு நாதன் என்கிறார்களோ என்னவோ?

இந்த இறைவன் பனிலிங்கமாக இல்லாமல் பசுநெய் லிங்கமாக பசு நெய்யால் முழுக்காடப் பெற்று பசுபதீச்வரன் காட்சியளிக்கிறார். இவர் மிகுந்த வரப்ரஸாதி.

இந்த ஆலயத்தில் தம் கோரிக்கைகள் நிறைவேற பக்தர்கள் பஜனம் இருப்பது இன்றும் தொடர்கிறது.

பெரும்பாலான மஹான்களின் வரலாற்றை எடுத்துக் கொண்டால் அவர்களது பெற்றோர்கள் பல காலம்

குழந்தைப் பேறு இன்றித் தங்களுக்கு ஒரு நல்ல மகன் பிறக்க மாட்டானா என்று ஏங்கித் தவமிருந்து பின்னர் குழந்தை பிறப்பதாகக் காண்கிறோம்.

இதன் தாத்பர்யம் என்ன தெரியுமா?

கணவனும் மனைவியும் காமவயப்பட்டுப் புணர்ந்து, அதன் மூலம் கருத்தரித்து குழந்தைகள் பிறந்தால் அப்படிப் பிறக்கிற குழந்தைகள் எதிர்காலத்தில் நல்ல குடிமகன்களாக வரமாட்டார்கள்.

தாம்பத்ய உறவின் ஆரம்ப நாட்களில் நடக்கும் இத்தகைய தவறுகளால் பிறக்கிற குழந்தைகள் தறுதலைகள் ஆவதற்கும் வாய்ப்புகள் அதிகம்.

ஆனால், ஆன்மிக நெறிப்படி வாழ்வு நடத்தும் தம்பதியர் புத்ரோத்பத்திக்காக மட்டும் அனுமதிக்கப்பட்ட நாட்களில் தாம்பத்ய உறவு கொண்டு, அதுவும் தங்களுக்கு நல்ல மகன் பிறக்க வேண்டும் என்ற உயரிய சிந்தனையோடு உடல் உறவு கொண்டு பிறக்கிற குழந்தைகள் பின்னாளில் மக்கள் "இவர் தந்தை எந்நோற்றார் கொல்?" என்று புகழும்படி அரிய பெரிய சாதனைகளைப் புரிவார்கள்.

தவம் செய்து பெறும் குழந்தைகள் மட்டுமே சமுதாயத்திற்குப் பயன்படும் நல்லோர்களாக வளர்வர்.

இவ்விஷயத்தை இல்லறத்தார் மனத்தே இருத்திக் கொள்ள வேண்டும்.

## கனவில் கடவுள்

பஜனம் இருந்து வந்த சிவகுரு — ஆர்யாம்பா தம்பதியரின் கனவில் ஒரே நேரத்தில் இறைவன் தோன்றி —

"நல்லறிவும், நற்குணங்களும் நிறைந்த, சமுதாயத் திற்குப் பயன்பட வல்ல ஆனால், குறைந்த ஆயுள் கொண்ட ஓர் ஆண் மகவு வேண்டுமா? அன்றி அறிவற்ற, துர்க்குணங்கள் நிரம்பிய நீண்ட ஆயுள் கொண்ட பல குழந்தைகள் வேண்டுமா?" என்று கேட்டான் என்பது புராணச் செய்தி.

உடனே கணவன் — மனைவி இருவருமே தத்தம் கனவில் தோன்றிய தெய்வத்திடம், "வேண்டத்தக்கது அறிவோய் நீ; வேண்டியது முழுதும் தருவோய் நீ; ஆகையால் உலகிற்கும், எங்களுக்கும் எது நன்மை பயக்கும் என எண்ணுகிறாயோ — அது உனது திருவுளப்படியே ஈடேற வேண்டும்," என்று அந்த வடக்குநாதன் தாள்களில் வீழ்ந்து வணங்கினர். கடவுள் மறைந்தார்.

கனவும் கலைந்தது. கனவு நனவாகும் நன்னாளும் நெருங்கியது.

இதுபோன்ற நிகழ்ச்சிகளைப் பல மஹான்களின் வரலாறுகளில் நம் முன்னோர் எழுதி வைத்துள்ளனர். இதன் உட்பொருள் என்னவாக இருக்கும்?

இல்லறம் ஏற்போர் காம உணர்ச்சிகளால் மட்டும் தூண்டப்பட்டு அதன் விளைவாகக் குழந்தைகளைப் பெற்றுக் கொள்ளக்கூடாது.

தவம் செய்து தூய வாழ்வு நடத்தி அதன் பின்னர் தரத்தில் தங்களை விட உயர்வான நல்ல குழந்தைகளைப் பெற்றுக் கொள்ள வேண்டும்.

அவை எண்ணிக்கையில் குறைவாக இருந்தாலும், அதிக ஆண்டுகள் வாழாவிடினும் தன் வாழ்நாளில் சமுதாயத்திற்குப் பயன்படும் மக்களாக விளங்கும்படி செய்வது பெற்றோர் கடமை.

ஒரு மனிதன் எத்தனை ஆண்டுகள் வாழ்கிறான் என்பது முக்கியமல்ல. அவன் எப்படி வாழ்கிறான் என்பதுதான் முக்கியம்.

வேதநூற்பிராயம் நூறு (சரியாகச் சொல்ல வேண்டுமானால் 120 ஆண்டுகள்) வாழ்ந்த ராமனுஜரும் செயற்கரிய செய்த மஹானாகத் தான் வாழ்ந்தார். அதில் கால் பங்கு காலம் கூட வாழாத ஆதிசங்கரரும் ஒப்பற்ற மஹானாகத் திகழ்ந்தார்.

மஹாபாரதத்தில் வரும் வரி இங்கு நினைவிற் கொள்ளத்தக்க ஒன்று.

முஹூர்த்தம் ஜ்வலிதம் ச்ரேயோ
ந து தூமாயிதம் சிரம்

"நெடுநேரம் புகைந்து கொண்டு இருப்பதை விட நொடிப் பொழுதேனும் ப்ரகாசித்து மறைந்து விடுவது மேல்."

விரைவில் ஆர்யாம்பாள் கருவுற்றாள்.

நந்தன வருஷம் வைகாசி மாதம் சுக்ல பக்ஷத்துப் பஞ்சமி திதியில் புனர்வஸு நக்ஷத்திரத்தில் ஞாயிற்றுக் கிழமையன்று ஆண் குழந்தை பிறந்தது.

ஞாயிற்றுக் கிழமை ஸூர்யனுக்குரிய தினம். ஸூர்ய கிரணங்கள் மனிதனின் உடலில் நாடி நரம்புகளை வீர்யத்துடன் செயல்பட வைக்கின்றன.

ஞாயிறு அன்று பிறந்த இந்த குழந்தை வாழ்நாள் முழுவதும் வீர்யத்துடன் செயல்பட்டது.

ஜாதக ரீதியாக பார்த்தால் இந்தக் குழந்தை ஜனித்த நேரத்தில் குரு உச்சஸ்தானத்தில் இருந்தார். ஸூர்யனுடன் புதன் சேர்ந்திருந்தான். வாழுங்காலமெல்லாம் புகழோடு விளங்குவான் என்பதற்கு இது அறிகுறி. பன்னிரண்டில் சந்திரன் நான்கில் சனி; ஏழில் குஜன்; ஒன்பதில் சுக்ரன். சனியிலிருந்து ஒன்பதாம் இடத்தில் சந்திரன். இது இந்த ஜாதகக்காரன் ஒரு சில ஆண்டுகளே வாழ்வான் என்பதற்கான அறிகுறி.

குழந்தை ஜனித்தவுடன் செய்ய வேண்டிய ஜாதகர்ம ஸம்ஸ்காரம் செவ்வனே நடந்தது.

பதினோராவது நாள் புண்யாஹவாசனம் பண்ணி நாமகரணம் செய்தார் சிவகுரு.

பெயர் வைப்பதில் இரண்டு முறைகள் உண்டு.

ஒன்று, ஏதோ பெயர் சொல்லி அழைக்க வேண்டும், அடையாளம் காட்ட வேண்டும் என்பதற்காக வைக்கப்படும் பெயர். அது 'ரூடி' எனப்படும். அதாவது அடையாளப் பெயர்.

இன்னொன்று, அர்த்தபுஷ்டியோடு, காரண, கார்ய, குண விசேஷங்களைக் குறிக்கும் காரணப் பெயர். இது 'யோகம்' அல்லது 'யௌகிகம்' என்படும்.

"சங்கரம் லோக சங்கரம்" என்னும் படியாக பின்னாளில் உலகோர் போற்றும் வண்ணம் உலகத்திற்கு நன்மை செய்ய வந்து பிறந்திருந்த குழந்தைக்கு மிகவும் பொருத்தமாக சங்கரன் என்று பெயர் சூட்டினர்.

எந்த தெய்வத்தின் அனுக்ரஹத்தால் இந்தக் குழந்தை பிறந்ததோ அந்த தெய்வத்தின் பெயர்களில் ஒன்று இந்த சங்கர நாமம்.

யஜுர் வேதத்தின் நடுநாயகமாகத் திகழும் சதருத்ரீயத்தில் எட்டாவது அனுவாகத்தில் வரும் பஞ்சாக்ஷர மந்த்ரத்தோடு இணைந்து வரும் பெயர் இது.

சங்கரருக்கு அவர் அப்பா வைத்த பெயர் ரூடி, யௌகிகம் என்ற இரண்டுமாகி விடுகிறது.

உலகிற்கு நல்லதைச் செய்யப் போகிறவர் என்பதற்காக அப்பா அவருக்கு சம்&கரர் என்கிற அர்த்தத்தில் சங்கரர் என்று பெயர் சூட்டினார் என்பது ஒருபுறம் இருந்தாலும் அவர் பிறந்தது இன்ன மாதம், இன்ன பக்ஷம், இன்ன திதி என்று ஸங்கேதமாக காட்டுகிற விதத்திலும் இன்ன அக்ஷரங்கள் இருக்க வேண்டும் என்றும் தேர்ந்தெடுத்து வைத்தார். அந்த எழுத்துக்களை இணைத்துப் பார்த்தால் சங்கர என்றாகிவிட்டது.

அதாவது சிவகுரு "கடபயாதி ஸங்க்யை" முறையில் தனது குமாரனுக்குப் பெயர் சூட்டினார்.

கடபயாதி ஸங்க்யை என்றால் க, ட, ப, ய என்ற எழுத்துக்களிலிருந்து ஆரம்பித்து ஒவ்வொரு எழுத்துக்கும் ஒரு எண்ணிக்கை ஸங்கேதம் கொடுத்திருப்பார்கள்.

ஒரு குழந்தை பிறக்கும் மாதம், பக்ஷம், திதி ஆகியவற்றை கடபயாதி ஸங்க்யையில் குறிப்பிட்டு அந்தக் குழந்தைக்கு நாமகரணம் செய்வது சில குடும்பங்களில் வழக்கமாகும்.

சிவகுரு தனக்குப் பிறந்த செல்வக் குமரனுக்கு இந்த முறையில் பேர் வைக்க முடிவு செய்தார்.

சிவகுருவுக்கு புத்ரன் ஜனித்தது வைகாசி, அதாவது இரண்டாவது மாதம். பக்ஷம் என்று எடுத்துக் கொண்டால் சுக்ல பக்ஷம். அதாவது முதலாம் பக்ஷம். திதி என்று எடுத்துக் கொண்டால் பஞ்சமி. அதாவது ஐந்தாவது திதி.

அதாவது, 2—1—5. இதைத் தலைகீழாக்கிப் பார்த்தால் 5—1—2. 5ஐக் குறிக்கும் எழுத்து ச. (ய, ர, ல, வ, ச) 1ஐக் குறிக்கும் எழுத்து க. 2ஐக் குறிக்கும் எழுத்து ர. (ய, ர, ல, வ, ச) அதாவது ச—க—ர. இடையில் மெய் எழுத்தான 'ங்' ஐச் சேர்த்தால் சங்கர.

எனவேதான் சங்கரன் என்ற பெயரைத் தன் குழந்தைக்கு சிவகுரு சூட்டினார்.



சங்கரர் "பால போத ஸங்கரஹம்" என்று ஒரு சிறிய உபதேச நூலை அருளியிருக்கிறார். இதிலே சிறுவர்களும்கூட புரிந்து கொள்ளும் விதத்தில் அத்வைத ஸாதனையின் அங்கங்கள் என்ன என்றும் அதிலே சொல்லியிருக்கிறார்.

ஒரு சிறுவனுக்கு அவன் கேட்கும் கேள்விகளுக்கு அவனது குரு பதில் சொல்வதுபோல இந்த நூல் அமைந்துள்ளது.



அத்தியாயம் - 5

# சங்கரரின் பால பருவம்

சிவகுரு தம்பதியினர் தங்களுக்குக் காலம் கடந்து பிறந்த பிள்ளையை சீராட்டி செல்லம் கொடுத்து வளர்த்தாலும், சங்கரர் பால்யத்திலேயே அதி மேதாவியாக விளங்கினார்.

மூன்றாவது வயதிலேயே தனது தாய் மொழியிலும் அக்கம் பக்கத்தில் வசித்தவர்கள் பேசிய த்ராவிட பாஷைகளிலும் நல்ல தேர்ச்சி பெற்றதோடு ஸம்ஸ்க்ருத ஞானமும் கைவரப் பெற்றார். இதை வெறும் கட்டுக்கதை என்று தள்ளிவிடுவதற்கில்லை.

இன்றைக்கும் கூட செய்தித்தாள்களில் குழந்தை களின் அதிமேதாவித்தன சாதனைகளைப் பற்றி செய்திகள் வந்த வண்ணம் உள்ளன. சில குழந்தைகளின் அபார

ஞாபக சக்தி, கூட்டல், கழித்தல் திறன், திருக்குறளைத் தலைகீழாக ஒப்புவிப்பது, நாடுகளின் தலைநகரங்களின் பெயர்களைச் சொல்வது என்று பல செய்திகள் அவ்வப்போது வந்த வண்ணம் உள்ளன.

சங்கரர் காவ்யங்கள், நாடகங்கள் என்று ஸ்ம்ஸ்க்ருதத்தில் பல விஷயங்களை குருகுல வாஸம் செய்யப் போவதற்கு முன்னதாகவே கற்றுக் கொண்டு விட்டார்.

ஏறத்தாழ மூன்றாம் வயதில் சங்கரர் வாழ்வில் ஒரு அதிசய சம்பவம் நடந்ததாக செவிவழிச் செய்தியாக பலரும் கூறிவருகிறார்கள்.

இதற்கு மாதவீய சங்கர திக் விஜயத்தில் எந்த ஆதாரமும் இல்லை.

நூல்களில் சில விஷயங்கள் குறிப்பிடப்படா விட்டாலும் காலங்காலமாக மரபு வழியாக வரும் செய்திகளை ஆதாரமற்றவை என்று நாம் தள்ளிவிடுவதற்கு இல்லை.

காலடியை ஒட்டி ஒரு அக்ரஹாரம். அக்ரஹாரத்தை க்ராமம் என்று சொல்லும் பழக்கம் இன்றைய கேரளத்திலும் அன்றைய சேர தேசத்திலும் உண்டு.



மாணிக்க மங்கலம் என்று அந்த க்ராமத்திற்குப் பெயர். அங்கு பகவதி அம்பலம் ஒன்று உண்டு. காத்யாயனியோ, அன்னபூரணியோ பகவதிதேவியாக வழிப்படப்பட்டு வந்தாள்.

சிவகுருவின் முன்னோர்கள் இந்தக் கோயிலில் அன்றாடம் பூஜை செய்து வந்திருக்கின்றனர்.

சிவகுருவும் தினசரிக் கடமையாக இந்தப் பூஜையைச் செய்து வந்தார்.

ஒரு சமயம் சிவகுரு வெளியூர் செல்ல நேர்ந்தது. மூன்று வயது கூட நிறையாத சங்கரர் அப்பா இல்லாத நாளில் பாலைக் கிண்ணத்தில் எடுத்துக் கொண்டு அந்த

அம்பலத்தில் உள்ள தேவிக்குப் பூஜை செய்ய சென்றிருக்கிறார்.

பூஜை முடிந்து நைவேத்யம் செய்யும்போது "க்ஷீரம் நிவேதயாமி" என்று சொல்லி கண்களை மூடியவாறே அம்பிகையை தியானித்திருக்கிறார்.

கண்களைத் திறந்து பார்த்தால் பாத்திரத்தில் பால் இல்லை.

அவர் அப்பா எப்போதும் நிவேதனம் பண்ணிய பாலை அம்பாள் ப்ரஸாதம் என்று கொண்டு வந்து கொடுப்பது வழக்கம்.

ஆனால், இப்போதோ பால் மாயமாய் மறைந்து விட்டது. நைவேத்யம் செய்த பின்னால் அந்தப் பாலைப் பருகலாம் என்றிருந்த பாலகனுக்கு அதிர்ச்சி. பசியால் அழத் தொடங்கினான்.

நாமெல்லாம் தினமும் இறைவனுக்கு நைவேத்யம் செய்வதே இறைவன் அதை உண்ண மாட்டான் என்கிற திடமான நம்பிக்கையால்தான்.

நாம் நைவேத்யம் செய்பவற்றை இறைவன் உண்ணத் தொடங்கி விட்டால் நிவேதனம் செய்வதையே அடியோடு நிறுத்திவிடுவோம்.

அழத் தொடங்கிய சங்கரர் முன்னால் அம்பிகை தோன்றினாள்.

கிண்ணத்தில் பாலை நிரப்பி அவரைப் பருகச் செய்தாள்.

அதி மேதாவிக் குழந்தையாக சங்கரர் எப்படி விளங்கினார் என்பதை விளக்குவதற்கு அம்பிகை தந்த ஞானப் பாலைப் பருகியதே காரணம் என்று சொல்ல வந்த மரபுவழிச் செய்தியாக இருக்கலாம்.

ஆனால், இதற்கு சங்கரரின் ஸௌந்தர்ய லஹரியில் வரும் ஒரு வரி அகச்சான்றாகவும் உள்ளது.

ஸௌந்தர்ய லஹரியில் 75வது பாடல் அது. அந்த சுலோகத்தின் பொருள்:

"அம்மா உன் முலைப்பால் ஞானம், கருணை ஸௌந்தர்யம், இன்னும் என்னவெல்லாம் மிக உயர்ந்ததோ

அத்தனையும் பிறப்பிக்கும் உன் ஹ்ருதயத்திலிருந்தே ஸமுத்ரமாகப் பெருகுகிறது.

அது அறிவு, கலை இவற்றுக்குத் தெய்வமான ஸாக்ஷாத் ஸரஸ்வதியின் ஸாரமேதான். அந்த ஞானப் பாலை நீ அந்த த்ரவிட சிசுவிற்கு ஊட்டினாய். அந்தக் குழந்தை ப்ரௌட கவிஞர்களுக்கெல்லாம் மேலே மனஸை ஆகர்ஷிக்கிற கவியாக ஆகிவிட்டது.

இந்த சுலோகத்தில் வரும் 'த்ரவிட சிசு' என்ற வார்த்தை சங்கரரையே குறிப்பதாக ஸௌந்தர்ய லஹரியின் ப்ரஸித்த பாஷ்யங்களான "லக்ஷ்மீ தரா" "ஸௌபாக்ய வர்தநீ" "அருணாமோதிநீ" ஆகிய நூல்களில் விளக்கப்பட்டுள்ளது.

லக்ஷ்மீதராவில் த்ரவிட சிசு என்பதற்கு த்ராவிட தேசத்தில் அவதாரம் பண்ணிய குழந்தையான இந்த **'ஸ்தோத்ர கர்த்தா'** என்று சொல்லி இருக்கிறது. வேறு சில பாஷ்யங்களில் நான் மேலே சுட்டிக் காட்டியிருக்கும் சம்பவமே விவரிக்கப்பட்டிருக்கிறது.

தம்மை நேரடியாகக் குறிப்பிடாமல், 'த்ரவிட சிசு' என்று மூன்றாம் மனிதராக (Third Person) கவிநயத்தோடு கூறியிருப்பது சங்கரரின் விநயத்தையே காட்டுகிறது.

இவ்வளவு அதிமேதாவிக் குழந்தையை அதி பால்யத்திலேயே யமனுக்கு வாரிக் கொடுத்துவிடுவோமோ என்ற அச்சம் சிவகுருவின் மனதில் இருந்து கொண்டே இருந்தது.

பிள்ளைக்குக் கொள்ளி போடும் கொடுமை நிகழாமல் பகவான் தன்னை அவனது பாதாரவிந் தங்களில் விரைவிலேயே சேர்த்துக் கொண்டுவிட வேண்டுமென்று ப்ரார்த்தித்துக் கொண்டே இருந்தார். புத்ர சோகத்திலிருந்து தான் தப்பித்துவிட வேண்டு மென்று அவர் துடித்த துடிப்பு வீண்போகவில்லை.

பகவான் சிவகுருவின் ப்ரார்த்தனைக்குச் செவி சாய்த்தார்.

சங்கரருக்கு நான்காவது வயது நடந்து கொண்டிருக் கும்போதே சிவகுருவிற்கு சிவலோக ப்ராப்தி கிட்டியது.

அத்தியாயம் - 6



# வறுமையை விரட்டிய வள்ளல்

சிவகுருவின் மறைவு ஆர்யாம்பாவிற்கு அதிர்ச்சியைத் தந்தது. ஈடுகட்ட இயலாத பேரிழப்பிலிருந்து மீள்வது அவளுக்கு மிகவும் கடினமாக இருந்தது. ஆனால், தந்தை தன் ஆயுட் காலத்திலேயே தனது மகனுக்குச் செய்ய நினைத்திருந்த உபநயன ஸம்ஸ்காரத்தைத் தான் நிறைவேற்ற வேண்டியது தனது கடமை என்று நினைத்தாள் ஆர்யாம்பா.

கணவரின் வருஷாப்தீகம் நிறைவுற்றவுடனேயே சங்கரருக்கு உபநயனம் செய்விக்க ஏற்பாடு செய்தாள்.

ப்ராம்மண வர்ணத்தவர்க்கு உபநயன ஸம்ஸ்காரம் கர்ப்பாஷ்டமத்தில் செய்ய வேண்டும் என்பது சாஸ்திர விதி.

அதாவது கர்ப்ப காலத்தையும் சேர்த்து எட்டாவது வயதில், அதாவது பிறந்த ஏழு வயது இரண்டு மாதம் ஆனவுடன் செய்ய வேண்டும்.

ஆனால் ஆர்யாம்பாவோ சங்கரரின் ஐந்தாவது வயதிலேயே உபநயன ஸம்ஸ்காரத்தைச் செய்து வைத்து விட்டாள்.

உப என்றாள் 'ஸமீபத்தில்' 'அருகில்' என்று பொருள். நயனம் என்றால் 'அழைத்துப் போவது'.

எதற்கு அருகில் அல்லது யாருக்கு அருகில்.

குருவுக்கு அருகில் அதாவது குருகுலத்தில் கொண்டு சேர்ப்பது. அந்த குருகுல வாஸத்திற்கான பூர்வாங்க ஸம்ஸ்காரமே உபநயனம்.

குருகுல வாஸக் கல்வி முறை இன்றைக்குப் பலரும் கொண்டு வர விரும்பும் சமச்சீர் கல்வி முறையே ஆகும்.

ஒரே விதமான பாடசாலை சூழலில் ஒரே விதமான தரத்தில் அனைவருக்கும் எவ்விதக் கட்டணமும் இன்றித் தரப்பட்ட அற்புதமான கல்விமுறை.

வித்யா விநய ஸம்பன்ன:

என்ற வாக்கியப்படி மாணவனுக்கு நல்ல பணிவுப் பண்பு ஏற்பட சில நியதிகள் உண்டு.

பணக்கார வீட்டுப் பிள்ளைகளும், ஏழை வீட்டுப் பிள்ளைகளும் ஒரே கூரையின் கீழ் ஒரே ஆசிரியரின் கீழ் கல்வி பயின்ற காலத்தில் அனைவருக்கும் சில தினசரிப் பணிகள் விதிக்கப்பட்டிருந்தன.

காட்டிற்குப் போய் விறகு வெட்டிக் கொண்டு வருவது, செடிகளுக்கு நீர் பாய்ச்சுவது, பூப்பறித்து மாலை தொடுப்பது, காய்கறி நறுக்குவது, பாடசாலையைத் தூய்மையாக வைத்திருக்க பெருக்கி மெழுகுவது என்று

ஏராளமான வேலைகளை மாணவர்கள் பகிர்ந்து கொண்டு செய்வர்.

இத்தகைய அன்றாடப் பணிகளில் ஒன்று அக்கம் பக்கத்தில் உள்ள வீடுகளுக்கு பிக்ஷைக்குச் செல்வது.

சங்கரரும் உபநயனத்திற்குப் பின்னால் காலடி அருகிலேயே ஒரு பாடசாலையில் குருகுல வாஸம் செய்யச் சென்று விட்டார்.

அந்தக் காலக் கல்வி தனி மனிதனுக்கும், சமுதாயத்திற்கும் பயன்படக்கூடிய முறையில் அமைந்திருந்தது.

தான் கற்கும் கல்வி மற்றவர்களின் நலனுக்காக, குறிப்பாக ஏழைகளின் துயர் துடைப்பதற்காக இருக்க வேண்டும் என்று விரும்பினர் நம் முன்னோர்.

ஒரு மாணவனுக்கு சமூக ப்ரக்ஞை இருக்க வேண்டும். அந்த சமூகப்ரக்ஞையை உருவாக்கக் கல்வி சமுதாயத் தோடு தொடர்புடையதாக இருப்பதோடு தன்னைச் சுற்றி வாழும் மக்களின் வாழ்க்கை நிலையை மாணவர்கள் உணர்ந்து இருக்க வேண்டும் என்ற நல்ல எண்ணத்தில் குருகுல வாசத்தின்போது அவர்கள் பிக்ஷைக்குச் செல்ல வேண்டும் என்ற நியதி இருந்தது. பிக்ஷைக்குச் செல்வது வறுமையின் காரணமாக அல்ல.



தன்னடக்கம், செருக்கின்மை, எளிமை, பிறர் துயர் உணரும் பெருமனம். இவற்றை ஒரு மாணவன் பெறுவதற்காகத்தான் அவனை பிக்ஷைக்கு அனுப்பி வைத்தனர்.

செல்வந்தர் வீட்டு மாணவன் ஆனாலும் சரி அல்லது ஏழையின் மகனாக இருந்தாலும் சரி எல்லோரும் பிக்ஷைக்குச் செல்ல வேண்டும்.

பிக்ஷைக்குச் செல்வது தேசிய மரபு. பிக்ஷைக்குப் போவதற்கும், பிச்சை எடுப்பதற்கும் வித்தியாசம் உள்ளது.

வறுமையின் காரணமாக, சோம்பலின் காரணமாக பிச்சையெடுப்பது இழிவான செயல்.

சங்கரர் குரு குலத்தில் சேர்ந்தவுடன் அவர் முதன் முதலாக பிக்ஷைக்குச் செல்லும் நாள்.

குரு குலத்திற்கு அருகில் இருந்த வீடு ஒன்றின் முன்னால் போய் ''**பவதி பிக்ஷாம் தேஹி**'' என்று குரல் கொடுத்தார்.

அன்று துவாதசி. ஹிந்துக்கள் வழக்கமான நேரத்திற்குச் சற்று முன்னதாகவே உணவருந்தும் பாரணை நாள். ஏகாதசி அன்று உண்ணாமல் இருந்து துவாதசி அன்று விரதத்தை முடிக்கும் நாள்.

சங்கரர் பிக்ஷைக்குச் சென்ற வீடு அயாசகன் என்ற பரம தரித்ரவானான ப்ராம்மணனின் இல்லம். பூர்வ ஜன்ம வினைப் பயனால் மிகுந்த ஏழ்மை நிலையில் இருந்தான் அந்த வேதியன்.

சங்கரர் பிக்ஷைக்குச் சென்றிருந்த நேரத்தில் அந்த வேதியன் துவாதசி பாரணைக்காக ஏதாவது உணவு கிடைக்குமா என்று வயல்வெளிப் பகுதியில் இறைந் திருக்கும் தானியங்களைச் சேகரிக்கச் சென்றிருந்தான்.

வீட்டில் இருந்த வேதியனின் மனைவி சங்கரரின் குரல் கேட்டு வெளியே எட்டிப் பார்த்தாள்.

பால் வடியும் அந்த பாலகனின் முக தேஜஸ் கண்டு, அவரது கண்களில் தெரிந்த தெய்விக ஒளியையும் கண்டு அவருக்கு எதைக் கொடுப்பது என்று புரியாமல் தயங்கித் தடுமாறினாள் அந்த இல்லத்தரசி.

வறுமையில் வாடிக்கொண்டிருந்த அக்குடும்பத்தினர் உண்பதற்கு ஏதுமின்றி பல நாட்களாக பட்டினியால் வருந்திக் கொண்டிருந்தனர்.

வறுமையால் வாடுவோருக்கு ஏகாதசி விரதம் அனுஷ்டிப்பதில் சிரமம் ஏதுமில்லை. ஆனால், துவாதசி

விரதம் அனுஷ்டிப்பது மிக மிகக் கடினம். ஏனெனில், அன்று ஏதேனும் சாப்பிட்டே ஆக வேண்டும்.

மஹாதேஜஸ்வியான அந்த ப்ரஹ்மச்சாரி பிள்ளைக்கு எதனை பிக்ஷையாகத் தருவது?

தனது வீட்டு வாசலுக்கே வந்து பிக்ஷ கேட்கும் மாணவனுக்கு "இல்லை போ" என்று சொல்வதற்கு அவள் மனம் இடந்தரவில்லை.

வாயைத் திறந்து 'இல்லை' என்று சொல்வதற்கு அவசியமே கிடையாது. மூன்று முறை கேட்டும் இல்லத்தரசி பிக்ஷ இடாவிட்டால் தானாகவே அந்த ப்ரஹ்மச்சாரி அடுத்த வீட்டுக்குப் போய்விடுவான்.

பிக்ஷயிடுவதற்கு ஏதாவது கிடைக்குமோ என்று தேடித் தேடி பார்த்தாள். ஒன்றுமே கிடைக்கவில்லை.

துவாதசி விரதத்தன்று சாப்பாட்டில் சேர்த்துக் கொள்ள எப்போதோ சில நெல்லிக்காய்களை ஏதோ ஒரு மாடத்தில் வைத்திருந்தாள் அவள். அது ஞாபகத்திற்கு வந்ததும் அதையாவது சங்கரருக்குத் தர எண்ணி உள்ளே விரைந்தாள்.



ஒரு புரையில் கை வைத்ததும் உலர்ந்து வற்றிப் போன நெல்லிக்காய் ஒன்று அகப்பட்டது.

போயும் போயும் காய்ந்து போன இந்த நெல்லிக் காயையா அந்த தேஜஸ்வீ பாலகனுக்குப் போடுவது?

சற்றுத் தயங்கினாள்.

“பவதி பிக்ஷாம் தேஹி”—

இரண்டாவது முறையாக சங்கரர் குரல் கொடுத்தார்.

பிக்ஷைக்குச் செல்பவர்கள் எந்த இல்லத்திற்குச் சென்றாலும் மூன்றே மூன்று முறை “பவதி பிக்ஷாம் தேஹி” என்று குரல் கொடுக்க வேண்டும். மூன்று முறை உச்சரிப்பதற்குள் அந்த வீட்டினர் வந்து பிக்ஷையிடாவிடில் அடுத்த வீட்டிற்குச் சென்றுவிட வேண்டும். இதுதான் பிக்ஷா நியதி.

வயிற்றுப் பசிக்காக பிச்சையெடுப்பவர்கள் இல்லத்தரசி வெளியே வந்து இல்லையென்று சொல்லி விரட்டுகிறவரை வீட்டு வாசலை விட்டு நகர மாட்டார்கள்.

மூன்றாவது முறையாக ‘பவதி பிக்ஷாம் தேஹி’ என்று சங்கரர் கூறுவதற்கு முன் இந்தக் காய்ந்த நெல்லிக்காயை பிக்ஷையாகத் தந்துவிடுவது என்ற தீர்மானத்தோடு வாசலுக்கு விரைந்தாள் அவள்.

தனது இனிய குரலால் மூன்றாம் முறையாக ‘பவதி பிக்ஷாம் தேஹி’ என்று சங்கரர் குரல் கொடுப்பதற்கும் அப்பெண்மணி அந்த உலர்ந்து போன நெல்லிக்காயை அவரது பாத்திரத்தில் இடுவதற்கும் சரியாக இருந்தது.

அவமானம் அவளைப் பிடுங்கித் தின்றது. சங்கரரின் முகத்தைப் பார்க்கவே கூச்சமாக இருந்தது. தலையைக் குனிந்து கொண்டே நின்றாள் அம்மாது.

தனது பிக்ஷா பாத்திரத்தில் விழுந்த நெல்லிக் கனியைப் பார்த்த சங்கரர் அத்தாயின் முகத்தை நிமிர்ந்து நோக்கினார். அவளது விழியோரங்களில் கண்ணீர் கட்டி நின்றது.

நெல்லிக்கனியையும், அத்தாயையும் மாறி மாறிப் பார்த்தார் சங்கரர்.

இதையும் விடக் கொடூரம் என்ன தேவை?

வறுமையே வடிவெடுத்து நின்ற அவ்வனிதையைப் பார்த்தபோது இத்தனை ப்ரயத்க்ஷமாக தாரித்திரியத்தின் தரிசனம் கிடைக்கும் என்று எதிர்பார்க்கவில்லையே என்று விசனப்பட்டார் சங்கரர்.

ஏழையாக இருந்தாலும் அந்த ஏந்திழையாளின் மனசு எத்தனை விசாலமானது?

த்வாதசியன்று போஜனத்தில் அவசியம் சேர்ப்பதற்கு என்று வைத்திருந்த ஒரே ஒரு காய்ந்து போன நெல்லிக்கனியையும் வீட்டு வாசலுக்கு வந்து 'பிக்ஷாம் தேஹி' என்று கேட்டுவிட்ட பாலகனை வெறும் கையோடு அனுப்பக்கூடாது என்பதில் இருந்த அக்கறையால் தனக்குத் தந்து விட்டதை எண்ணி எண்ணி வியந்தார்.

அவர் உள்ளம் ஊமையாய் அழுதது.

"நான் கற்கப் போகும் கல்வியின் உத்தேசமே சமுதாய மக்களின் மேம்பாட்டுக்கு பயன்படுத்துவதற்குத்தானே?

என்னால் இச்சமுதாயத்தின் வறுமையை முழுமையாகப் போக்கடிக்க முடியாமல் இருக்கலாம். ஆனால், குறைந்த பக்ஷம் இந்த ஒரு குடும்பத்தின் வறுமையையாவது விரட்ட முடிய வேண்டும்."

இந்தக் குடும்பத்தின் ஏழ்மை நிலை அகல வேண்டும் என்று ப்ரார்த்திப்பதைத் தவிர என்னால் வேறு என்ன செய்ய முடியும்?

உணர்ச்சிகள் பீறிட்டுக் கண்களில் நீர் ததும்பத் திருமகளை தியானிக்கத் தொடங்கினார்.

அனைவருக்கும் வாரி வழங்கும் வல்லமை படைத்தவள் அவள் ஒருவள் தானே?

அவரது உள்ளத்து உணர்ச்சிகள் எல்லாம் உருப் பெற்று ஒரு கவிதை வடிவில் வெளிப்பட்டது.

சங்கரரின் வாக்கிலிருந்து வந்த முதல் ஸ்துதி இதுதான்.

அந்த ஏழை ப்ராம்மணப் பெண்மணிக்காக மஹாலக்ஷ்மியை ப்ரார்த்தித்து அவர் பாடிய

ஸ்தோத்திரமே ''கனக தாரா ஸ்தவம்'' என்பதாக இன்று அறியப்படுகிறது.

"அங்கம் ஹரே: புலக பூஷண மாச்ரயந்தீ" என்று தொடங்கிய கவிதை மடல் மடலாக விரிந்தது.

பரம தேஜஸ்வியான இந்த பாலகனின் கவிதை அந்தப் பூமகளை வாய் திறக்க வைத்தது.

"அப்பா குழந்தே! இந்த தம்பதிகள் பூர்வ ஜன்மத்தில் செஞ்சிருக்கிற கர்மாவின் பலன்தான் இப்படி அவர்கள் தரித்திரர்களாக இருக்கிறார்கள். அவாளுடைய கர்ம பலன் தீருகிறவரை நான் ஒன்றும் செய்வதற்கில்லை."

சங்கர பாலகன் தனது கோரிக்கையில் விடாப் பிடியாக இருந்தான். "தாயே! நீ சொல்வது போல இவர்கள் பூர்வ ஜன்ம பாபத்தினால்தான் ஏழைகளாக இருக் கிறார்கள் என்றே வைத்துக் கொள்வோம்.

அந்த தரித்திர நிலையிலும் இந்த சாதாரண குடும்ப ஸ்த்ரீக்கே எத்தனை கருணை இருந்தால் எனக்கு இந்த நெல்லிக் காயைத் தந்திருப்பாள்?

நீயோ ஜகன்மாதா. உன் கருணாகடாக்ஷத்துக்கோ அளவே இல்லை. உன்னுடைய கடைக்கண் பார்வை இவர்கள் மீது பட்டால் இந்த தம்பதியரது பூர்வ ஜன்ம பாப கர்ம பலன்கள் எல்லாம் பொசுங்கி விடாதா?

சங்கரரின் வாதத்தைக் கேட்டு வாயடைத்துப் போனாள் வரலட்சுமி.

இந்தக் குழந்தையின் கவிதை முடியட்டும் என்று காத்திருந்தது போல இவர் பாடிய ஸ்தோத்திர முடிவில் தங்கத்தாலான நெல்லிக்கனிகளாகவே அந்த வீட்டின் உள்ளேயும் வெளியேயும் வர்ஷித்து விட்டாள்.

இந்தப் பாடலில் 21 சுலோகங்கள் உள்ளன.

அதில் எட்டாவது சுலோகத்து வரிகள்தாம் சங்கரரிடம் லக்ஷ்மி பேசியதற்கு அகச்சான்றுகளாக உள்ளன.

**தத்யாத் தயானு பவனோ த்ரவிணாம்பு தாராம்**
**அஸ்மிந் அகிஞ்சந விஹங்க சிசௌ விஷண்ணே |**

துஷ்கர்ம கர்மம் அபநீய சிராய தூரம்
நாராயண – ப்ரணயிநீ நயநாம்பு வாஹ: ||

தாயே! உன் தயைக் காற்று கடாக்ஷ மேகத்தை அடித்துக் கொண்டு வந்து த்ரவின தாரையை இந்த துஷ்கர்மக்காரர்கள் குடும்பத்தில் வர்ஷிக்கட்டும்.

இந்தப் பாடலில் சங்கரர் அந்த ஏழைக் குடும்பத்திற்காகத்தான் மஹாலக்ஷ்மியைப் பிரார்த்தித்தார் என்பதற்கு ''அஸ்மின் அகிஞ்சன விஹங்க சிசௌ விஷண்ணே'' என்ற வரி சாக்ஷியாக நிற்கிறது.

தாரித்ய நிவ்ருத்தி என்று உலகியல் வாழ்வுக்கான பொருளை வேண்டுகிறார்போல வேண்டும்போதே கர்ம நிவ்ருத்தி, பாப நிவ்ருத்தி என்பதான ஆத்ம ஸம்பந்தமான வேண்டுதலையும் இந்த சுலோகத்தில் கலந்து கொடுத்து விட்டார் ஆதி சங்கரர்.

ஏழை பெண்மணியின் கண்ணீர் தாரை கண்டு மனம் பொறாமல் சங்கரர் கவிதை மழை பொழிய அதனால் மனம் இளகிய மஹாலக்ஷ்மி கனகதாரையைக் கொட்டி விட்டாள்.

அதனாலேயே இந்த ஸ்தோத்திரத்திற்கு கனகாதாரா ஸ்தோத்ரம் என்றே பெயர் நிலைத்து விட்டது.

ஒரு காலத்தில் சங்கரர் அருளால் தங்க நெல்லிக்கனி மழை பொழிந்த குடும்பத்தினரின் வம்சாவளியினர் குடும்பம் இன்றும் 'ஸ்வர்ணத்து மனை' என்றே அழைக்கப் படுகிறது.

காலடிக்குக் கொஞ்ச தூரத்தில் உள்ள பழம் தோட்டம் கிராமத்தில் இந்தக் குடும்பத்தினர் வசிக்கின்றனர்.

சங்கரரது ஆன்மிக படைப்பு இலக்கியங்களில் முதலாவதான கனகதாரா ஸ்தவம் என்ற இந்தக் கவிதையே சங்கரரது சமுதாய அக்கறையையும் அவர் ஒரு குடும்பத்து ஏழ்மையைப் போக்க எடுத்துக் கொண்ட முயற்சியையும் வெளிப்படுத்துகிறது.

சங்கரர் வாழ்வில் நிகழ்ந்த இந்த சம்பவத்தை அவருக்கு 2500 ஆண்டுகளுக்குப் பின்னால் வாழ்ந்த விவேகானந்தரின் உபதேசத்தின் பின்னணியில் பார்க்க வேண்டும்.

"கோடானு கோடி மக்கள் பசியிலும் அறியாமையிலும் மூழ்கியிருக்கின்றனர். அவர்களுடைய செலவில் கல்வி பெற்றுக் கொண்டு, அவர்களுக்காக ஒரு சிறிதும் கவலைப்படாமல் இருக்கும் கல்வி கற்ற மனிதன் ஒவ்வொருவனையும் தேசத் துரோகியென்றே நான் கருதுகிறேன்.

Feel. Feel from the Bottom of your heart. What your intellect can do? It will go a few steps and it will stop there. Feel Feel from the bottom of your heart.

அறிவில் என்ன இருக்கிறது? அது சில அடி தூரம் சென்று நின்று விடும். அடுத்தவருக்காக உன் உள்ளத்தின் அடி ஆழத்திலிருந்து இரக்கப்படு."

எத்தனை உயர்ந்த சிந்தனை. நாம் பிறருடைய துன்பத்தைக் கண்டு பரிதாபப்பட வேண்டும். எவ்விதத்திலேயும் அத்துயரை நீக்க வேண்டும். பிறருக்கு இரக்கப் படாத மனிதன் சமுதாயத்திற்கு ஒரு சுமையே.

அடுத்தவர் துன்பத்தைப் போக்க வேறு எதுவும் செய்ய இயலாவிட்டாலும் குறைந்தபக்ஷம் அவர்களுக்காக ப்ரார்த்தனை செய்யலாமே.

''யாவர்க்குமாம் பிறர்க்கு இன்னுரைதானே'' என்ற திருமூலர் வாக்கும், ''அதுவுமற்றவர் வாய்ச்சொல் அருளீர்'' என்ற பாரதியின் வாக்கும் இதைத்தானே சொல்கின்றன.

ஆழ்மனதிலிருந்து அந்தரங்க சுத்தியோடு செய்யப் படும் எந்த ப்ரார்த்தனையும் நிச்சயமாக அடுத்தவர் துயரை நீக்குமன்றோ.

வருந்திய உயிரைக் கண்ட போதெல்லாம் வருந்தும் உயர்ந்த உள்ளம் கொண்ட சங்கரரின் உண்மையான நேர்மையான இரக்கமே அக்குடும்பத்தின் வறுமையை விரட்டியது என்பதில் ஐயமில்லை.

அத்தியாயம் - 7



# தாயின் பணியில் தனயன்

கற்க வேண்டியவற்றைக் கற்றுவிட்டு குருகுல வாஸம் முடிந்து வீடு திரும்பினார் சங்கரர்.

வாழ்வில் தாம் என்ன செய்ய வேண்டும் என்பதை அவர் முன்னரே முடிவு செய்திருந்தார்.

வாழ்வில் தாம் கொண்டிருந்த லக்ஷ்யம் நிறைவேறத் தேவையான பயிற்சிகளையும் கலைகளையும் நன்கு பெற்றுக் கொண்டு விட்டார்.

வாழ்வில் ஒருவன் தான் செய்ய நினைக்கும் பணிக்குத் தன்னை இளமையிலேயே தயார் செய்து கொள்ள வேண்டும். வாழ்வின் உஷக்காலத்தில் அதற்கான பயிற்சிகளைப் பெற வேண்டும். அதனாலன்றோ நம்முன்னோர் "இளமையிற் கல்" என்றனர்.

உடல், அறிவு, மனம் ஆகியவவை ஒரு குறிப்பிட்ட வயதுக்குப் பின் நாம் நினைக்கிறபடி வளைந்து கொடுப்பதில்லை. ஒரு குறிப்பிட்ட ஒழுங்கு முறை, கட்டுப்பாடு ஆகியவற்றிற்குக் கட்டுப்படுவதில்லை.

தியானம் ஆகட்டும், யோகாஸனம் ஆகட்டும், சாஸ்திரங்களை ஸ்வாத்யாயம் செய்வதாகட்டும். இவையெல்லாமே ஒரு குறிப்பிட்ட வயஸுக்கு மேலே அவ்வளவு எளிதாக கைகூடுவதில்லை.

எனவேதான் நம்முன்னோர் வாழ்வில் ஆரம்ப கட்டத்திலேயே உடல், அறிவு, மனம் ஆகியவற்றை பண்படுத்தும் ப்ரம்மச்சர்ய ஆசிரமத்தை அமைத்துத் தந்துள்ளனர்.

தனது வாழ்க்கை லக்ஷியத்தை அது குறித்துத் தான் எடுத்துள்ள முடிவைத் தாயாரிடம் உரிய காலத்தில் எடுத்துச் சொல்லி அதற்கான அனுமதியைப் பெற வேண்டும். அந்த உரிய காலத்தை எதிர்நோக்கிக் காத்திருந்தார் சங்கரர்.

தாய் தன்னைப் பிரிந்து ஏறத்தாழ மூன்று ஆண்டுகள் தனியாக வாழ்ந்திருக்கிறாள். ஏற்கனவே கணவனை இழந்து நிற்கும் காரிகை அவள். இப்போது பிள்ளையையும் பிரிந்து இருந்ததால் ரொம்பவே நொடிந்து போயிருந்தாள்.

எனவே அவள் மனதுக்கு ஹிதமாக, தாயாருக்குப் பலவிதங்களிலும் உதவியாக இருக்கத் தொடங்கினார் சங்கரர்.

ஒரு மகன் தன் தாயாருக்கு எப்படியெல்லாம் பணிவிடை செய்ய வேண்டும் என்பதை நமக்கு உணர்த்துவது போல அவரது செயல்கள் அமைந்து இருந்தன.

பெற்றோருக்குப் பணிவிடைகள் செய்வதற்கு உதாரண புருஷர்களாக ச்ரவண குமாரனையும், புண்டலீகனையும் தான் சொல்வார்கள்.

ஆனால், அவர்களுக்கு எந்த விதத்திலும் குறையாமல் சங்கரரும் தன் தாயாருக்குப் பணிவிடைகள் செய்தார்.

ஆனால், அவரது வாழ்க்கை லக்ஷியம் அவரை எங்கோ அழைத்துச் செல்ல வேண்டியிருந்ததால் தாயாருக்கு உடன் இருந்து பணிவிடை செய்யும் பாக்கியம் அவருக்கு நீண்ட காலத்திற்கு நீடிக்கவில்லை.

கனகதாரையைத் தனது கவிதா சக்தியினாலும், ஆன்ம பலத்தாலும் சங்கரர் நிகழ்த்திய செய்தி நாடெங்கும் காட்டுத்தீ போல பரவியிருந்தது.

சங்கரரின் மேதா விலாசமும் நாடெங்கும் அறிந்த ஒன்றாக இருந்தது. எனவே அவரை சந்திக்க நாட்டின் பல பாகங்களிலிருந்தும் அறிஞர்களும், ஞானிகளும் வந்த வண்ணம் இருந்தனர்.

தன் மகனை ஈன்றபோது அடைந்த சந்தோஷத்தை விட, அதுவும் பல ஆண்டுகள் புத்ர பாக்கியம் இல்லாமல் இருந்து அப்புறம் தவம் இருந்து சங்கரரை ஈன்றபோது அடைந்த மகிழ்ச்சியை விடப் பன்மடங்கு சந்தோஷத்தை, தன் மகனைச் சான்றோன் என்று பலராலும் சொல்லக் கேட்டு ஆர்யாம்பா அடைந்தாள்.

மகனது பணிவிடைகளாலும் அவனது புகழாலும் புளகாங்கிதம் அடைந்து இருந்தாள்.

உடல் அசதி ஆர்யாம்பாளைத் தனது அன்றாட ஆன்மிக சாதனைகளிலிருந்து கொஞ்சமும் விலக்கி வைக்க முடியவில்லை.

அதிகாலையில் எழுந்து தனது இல்லத்திற்கு வெகு தூரத்தில் ஓடிக் கொண்டிருந்த பூர்ணா நதியில் ஸ்நானம் செய்யப் போவதாக இருக்கட்டும், விரதங்களை அனுஷ்டிப்பதாக இருக்கட்டும் & ஒன்றையுமே செய்யாமல் விட்டதில்லை.

கணவன் மறைந்ததும் மனது பலவீனப்பட்டுப் போய்விட்டது. பிள்ளை குரு குலம் போனதும் அவனது பிரிவாற்றாமையினால் இன்னமும் அதிக பலவீனம்.

பிள்ளை திரும்பி வந்ததும் தனக்கு பாதி பலம் திரும்ப வந்து விட்டது என்றே நினைத்தாள் ஆர்யாம்பா.

ஆனால், அவன் தன்னிடத்தில் நிலைத்து இருப்பானா?

மனதின் அடி ஆழத்தில் "உன் மகனுக்குக் குறைந்த வயஸுதான்" என்று பகவான் கனவில் எப்போதோ கூறியது உறுத்திக் கொண்டேயிருந்தது.

ஒரு நாள் ஸ்நானத்திற்காக பூர்ணா நதிக்குப் போய்க் கொண்டிருந்தவள் வழியில் தடுமாறி விழப் போனாள். நல்லவேளை, அம்மாவோடு தினசரி ஆற்றுக்குக் குளிக்கப்போகும் பழக்கத்தை ஏற்படுத்திக் கொண்டிருந்த சங்கரர் கூட இருந்ததால். தாங்கிப் பிடித்துக் கொண்டு விட்டார்.

அம்மாவை நதி ஸ்நானத்திற்குப் போகாதே என்று சொல்லவும் முடியாது. அம்மாவுக்குத் தள்ளாமை வந்து விட்டதால் இவ்வளவு தூரம் தினசரி நடப்பதும் சாத்தியமில்லை.

நடப்பதற்கான தெம்பு அம்மாவுக்கு இருக்க வேண்டும் என்று பகவானிடம் ப்ரார்த்திப்பதா? அல்லது அந்த நதியையே திசை மாற்றி தன் வீட்டுக்குப் பக்கத்தில் ஓடப் பண்ணுவதா?

மனதில் பெருங்குழப்பம்.

ஊருக்குத் தள்ளி வெது தூரத்தில் ஓடும் நதியை தனது ஊரை ஒட்டி ஓடும்படி செய்து விட்டால் எல்லோருக்குமே உபயோகமாக இருக்குமே.

நதியின் திசையை மாற்றி அமைக்கும்படி ப்ரார்த்திப்பதே எல்லா ஜனங்களுக்கும் நன்மை தரும் என்று நினைத்தார்.

இதயப்பூர்வமான அவரது ப்ரார்த்தனை பலனளித்தது.

பூர்ணா நதி காலடிக்குள் நுழைந்தது.

நதியின் போக்கு மாறி வெள்ளம் ஊருக்குள் வந்தபோது வழியில் இருந்த கிருஷ்ணர் கோயில் நீரில் மூழ்கிவிட்டது.

காலடியில் கிராமத்தின் காலடியிலேயே நதி ஓடத் தொடங்கியதால் ஊர்மக்கள் சந்தோஷப்பட்டனர்.

சங்கரர் வீட்டுக் கொல்லைப் புறத்திலேயே பூர்ணா நதி ஓடத் தொடங்கியதால் தாயாருக்கு ஸ்நானத்திற்குப் போக நடக்க வேண்டிய அவசியமே இல்லாமல் போயிற்று.

சங்கரர் நதியையே திருப்பிவிட்ட செய்தியும் நாடெங்கும் பரவியது.

இன்றைக்கு காலடியில் இந்த நதி ஓடுவதை நாம் யார் வேண்டுமானாலும் பார்க்கலாம். ஒரு காலத்தில் இதே நதி வேறு ஒரு தடத்தில் ஓடியதற்கானச் சான்றாகத் தடயங்கள் தெரிகின்றன.

இது நிலவியல் நிபுணர்கள் விஞ்ஞானப்பூர்வமாக ஏற்றுக் கொண்டுள்ள உண்மை.

சாதாரணமாக நதிகள் தங்கள் போக்கை அவ்வப்போது மாற்றிக் கொள்வது பல நாடுகளில், பல நதிகளின் போக்கில் நாம் காணக்கூடியதுதான்.

பூர்ணா நதியின் போக்கும் அப்படி இயல்பாகவே மாறி காலடிக்கு அருகில் வந்திருக்கலாம்.

ஆனால், அது சங்கரரின் ப்ரார்த்தனையினால்தான் நடந்தது என்பதையும் மறுப்பதற்கில்லையல்லவா?

சங்கரரைப் பற்றிய செய்திகள் அந்தப் பகுதியை ஆண்டு வந்த மன்னன் ராஜசேகரன் காதுகளுக்கும் எட்டியது.

தனது ப்ரதான அமைச்சரை அனுப்பி சங்கரரை உரிய மரியாதைகளுடன் அரண்மனைக்கு அழைத்து வருமாறு பணித்தான்.

ப்ரதான அமைச்சர் நேரில் வந்து எவ்வளவோ மன்றாடியும் கூட அரண்மனைக்கு வர மறுத்து விட்டார் சங்கரர்.

''கோவணம் கட்டிய இந்த ப்ரம்மச்சாரிக்குப் பட்டாடைகளால் பயன் என்ன? காலால் நடந்து சென்று வீடு வீடாக "பவதி பிக்ஷாம் தேஹி" என்று பிக்ஷை ஏற்று வாழும் ப்ரம்மச்சாரிக்கு பட்டத்து யானையின் மேல் பவனி ஏன்? மன்னரது அன்பான அழைப்பினை ஏற்க

நான் ஏற்றிருக்கும் இந்த ஆசிரம நெறிமுறைகள் என்னை அனுமதிக்கவில்லை."

பிரதான அமைச்சர் பதில் ஏதும் பேசாமல் திரும்பிச் சென்றார்.

ப்ரம்மச்சாரியாக தனது சொந்த க்ரஹத்தில் வசித்த சொற்ப காலத்தில் தினசரி பிக்ஷாச்சர்யம் செய்துதான் சங்கரர் சாப்பிட்டு வந்தார்.

பணக்கார வீட்டுப் பிள்ளை என்ற ஹோதாவில் பிக்ஷாச்சர்யம் செய்வதை அவர் கேவலமாகக் கருதவில்லை.

பிரதான அமைச்சர் கொண்டு வந்த சங்கரரது தகவலைக் கேட்டு அவரை நேரில் தரிசிக்கக் காலடிக்கே புறப்பட்டு வந்தான் மன்னன் ராஜசேகரன்.

பண்பும், புலமையும் மிக்க ராஜசேகரன் தான் இயற்றியிருந்த மூன்று நாடக காவ்யங்களை சங்கரருக்குப் படித்துக காட்டி அவரது அபிப்ராயத்தைக் கேட்டான்.



மன்னனது புலமைச் செறிவு அவனது நாடகங்களில் மிளிர்வதைக் கண்ட சங்கரர் அவனது இலக்கியத் திறமையை வாய் திறந்து மனதாரப் பாராட்டினார்.

அவனது புலமைக்குத் தனது பரிசாக ஏதாவது வரம் அளிக்க விரும்புவதாகச் சொன்னார்.

வறண்டு கிடக்கும் நிலத்தின் மேல் பொன் மாரி பொழிந்தது போல மகிழ்ந்தான் மன்னன்.

அவன் உள்ளத்தில் நெடுநாளைய வேதனை ஒன்று இருந்தது. மகப்பேறு இல்லையே என்ற மனக்குறை. மனக்குறை நீங்க மகிழ்வுடன் வரம் தந்தார் சங்கரர்.

மன்னன் கொண்டு வந்திருந்த பொன்னையும், மணியையும், நவரத்தினங்களையும் ஏற்றுக் கொள்ள மறுத்து அவற்றைத் தேவையுள்ள க்ரஹஸ்தர்களுக்கு வழங்கும்படி கூறினார்.

காலடியில் பூர்ணா நதி வெள்ளப் பெருக்கால் சிதிலமடைந்து போயிருந்த ஸ்ரீ கிருஷ்ணர் ஆலயத்தை புணருத்தாரணம் பண்ணச் சொன்னார். மன்னனும் சங்கரரது வேண்டுகோளை ஏற்று ஆலயத்தைப் புதுப்பித்துத் தந்தான்.

அந்த க்ருஷ்ணன் கோயில் இப்பவும் காலடியில் இருக்கிறது. ஆற்றுப் படுகையிலிருந்து கொஞ்சம் மேடான பூமியில் இருக்கிறது.



மனஸ், கர்மேந்த்ரியம் ஐந்து, ஞானேந்த்ரியம் ஐந்து ஆகியவற்றை கூட்டினால் பதினொரு இந்த்ரியங்கள் என்றும் சொல்வதுண்டு.

ஏகாதச ருத்ரர்கள் என்று ஈசுவரனுக்கு பதினொரு ரூபங்கள் இருப்பது இந்தப் பதினொரு இந்த்ரியங்களின் அதிதேவதைகளாகும். ஏகாதசிப் பட்டினி என்பதே தத்வார்த்தத்தில் ஏகாதச இந்த்ரியங்களுக்குத் தீனி போடாமல் வைப்பதுதான்.

இந்த பதினொரு இந்த்ரியங்களில் பதினொன்றாவதாக உள்ள மனஸை வென்றுவிட்டால் பாக்கிப் பத்து இந்த்ரியங்களும் தானாக அடங்கிவிடும்.



அத்தியாயம் - 8

# துறவு பூண்ட தனயன்

சங்கரரிடத்தில் துறவு மேற்கொள்வதற்கான மனோநிலை மேலோங்கி வளர்ந்து வருவதைத் தாய் ஆர்யாம்பா கண்டு கொண்டு விட்டாள்.

பிள்ளைக்குக் கல்யாணம் பண்ணிப் பார்க்க வேண்டும் என்ற ஆவல் ஒருபுறம். மகனுடைய ஆயுள் எப்போது முடியுமோ என்ற அச்சமும் கவலையும் இன்னொருபுறம்.

குறைந்த வயதோ, நிறைந்த வயதோ, பகவான் அதைப் பாத்துப்பார். நான் ஒரு தாயாக அவனுக்கு விரைவிலேயே திருமணம் செய்து வைத்துவிடவேண்டும் என்று எண்ணி உறவினர்களிடம் இது குறித்துப் பேசத் தொடங்கினாள்.

தாயார் மனஸைப் புரிந்து கொண்டார் சங்கரர்.

அம்மா அவசரம் அவசரமாக கல்யாணத்திற்குப் பெண் பார்க்கும் படலத்தைத் தொடங்கி விட்டதைக் கண்டதும் மனதில் பயம் குடிகொண்டு விட்டது.

தன் மனஸில் இருப்பதை அம்மாவிடம் எப்படி யாவது சொல்லிவிட வேண்டும் என்று துடித்தார்.

"அம்மா! நீயும் எல்லாத் தாய்மார்களைப் போலவும் சாதாரண மனுஷியா என்ன? நான் செய்ய வேண்டிய வேலைகள் ஏராளம் காத்திருக்கும்போது நான் எப்படியம்மா உன்னுடன் இங்கேயே இருக்க முடியும்?

கல்யாண பந்தத்தில் என்னைச் சிக்க வைத்து விடாதே. என்னைப் பிரியக்கூடாது என்று நீ நினைக்கிறாய். தாய்ப் பாசத்தினைக் கொண்டு என்னைக் கட்டிப் போட பார்க்கிறாய்.

தாய், பிள்ளை, கணவன் மனைவி என்ற உறவுகள் எல்லாமே அநித்யமானவை தானே அம்மா. எத்தனையோ ஜன்மாக்களில் நாம் எத்தனையோ பேருக்கு தாயாக இருந்திருப்போம்; பிள்ளையாக இருந்திருப்போம்; கணவனாகவோ, மனைவியாகவோ இருந்திருப்போம்.

என் அப்பா நம்மைவிட்டுப் போய்விட்டார். அதை நம்மால் தடுக்க முடிந்ததா? அம்மா!

கடலில் மிதக்கின்ற இரண்டு கட்டைகள் ஒரு நேரத்தில் ஒன்று சேர்வதுபோல நாம இரண்டுபேரும் இந்த ஜன்மாவில அம்மாவும் பிள்ளையுமா சேர்ந்திருக்கோம். என்றாவது ஒரு நாள் கடலில் சேர்ந்த கட்டைகள் வேறொரு அலை வந்து தாக்கும்போது எப்படிப் பிரிந்து விடுமோ அப்படி நாமும் ஒரு நாளைக்குப் பிரிஞ்சு தானேம்மா ஆகணும்?

எல்லா உறவுகளுமே ஒரு மனிதனுடன் சிறிது காலம் சேர்ந்து இருந்துவிட்டு பிறகுப் பிரிந்து விடுகின்றன. பிரிவு என்பது மட்டுமே எல்லா உறவுகளுக்கும் நிச்சயமான ஒன்று.

எனக்கு க்ருஹஸ்த வாழ்க்கையில கொஞ்சம்கூட ஆசையில்ல. நீ என்னை ஸந்நியாஸியாகப் போக விட்டுடேன்"

"இந்த மாதிரியெல்லாம் விரக்தியா வேதாந்தம் பேசாதேடா. நம்ம குல தர்மப்படி வித்யாப்பியாஸம் முடிஞ்சவுடனே கல்யாணம் பண்ணிக்கிறது தாண்டா

முறை. உலகத்தில எல்லாரையும் போல நீயும் கல்யாணம், குழந்தை குட்டினு இருக்கிறதுதாண்டா எனக்கு சந்தோஷத்தை தரும்.

வயசான காலத்தில நீ என்கூட இல்லாம எங்கேயோ போயிட்டியானா நான் என்னடா பண்ணுவேன்? அம்மாக்கோசரமாவது நீ கல்யாணம் பண்ணிக்கோடா."

தாயாரின் இந்தப் புலம்பலைக் கேட்டதும் சங்கரர் மேற்கொண்டு விவாதம் பண்ண விரும்பவில்லை.

பிள்ளையின் மௌனத்தை சம்மதமாக எடுத்துக் கொண்டு விட்டாள் ஆர்யாம்பா.

சங்கரருக்கு ஏற்ற பெண் ஒருத்தியைத் தேடுவதில் இன்னும் அதிக முனைப்புக் காட்டினாள்.

நம் நாட்டில் காலங்காலமாக நமது தாய்மார்கள் செய்து வந்ததையே ஆர்யாம்பாளும் செய்ய நினைத்தாள்.

யாரேனும் ஒருவன் சமுதாயத் தொண்டு, சந்நியாச வாழ்வு என்று பேசி வந்தானானால் அவனுக்குத் திருமணம் செய்து வைத்துவிட்டால் அவனது எண்ணம் எல்லாம் மாறிவிடும் என்பது அவர்கள் நம்பிக்கை.

அதனால்தான்—

"ஒரு கால் கட்டுப் போட்டால் எல்லாம் சரியாகி விடுவான்" என்று திருமணத்தை மனிதனின் சுதந்திரத் திற்குப் போடப்படும் தடையாகச் சொல்லுகிறார்கள்.

நாடகம் ஒன்றை நடத்தியாவது அம்மாவிடமிருந்து தான் துறவியாவதற்கு அனுமதி வாங்கிவிடத் துடித்துக் கொண்டிருந்தார் சங்கரர்.

ஏதோ ஒரு கார்யத்தை சாதிக்க வேண்டும் என்று வருகிற எல்லா ஜீவன்களின் வாழ்க்கையிலும் தங்கள் சொந்த பந்தங்களை என்றாவது ஒருநாள் விட்டு விலகித்தான் ஆகவேண்டும்.

ராமர் கொஞ்ச காலம் தசரதருடைய மகனாக அரண்மனையில் வசித்தார். ஆனால் தன் வாழ்வின் நோக்கம் ராக்ஷஸர்களை வதம் செய்வது என்று உணர்ந்தபின், அது அயோத்தியில் இருந்துகொண்டு

சாத்தியமில்லை. என்று தெரிந்து கொண்டு வனவாஸத்துக்குப் போய்விட்டார்.

கிருஷ்ணனும் யசோதையின் இல்லத்தில் கோபியர்களின் அன்புக்குரிய சிறுவனாக சிலகாலம் இருந்தாலும், கொடுங்கோலன் கம்ஸனை அழிக்கும் காலம் வந்தபோது, தன் அன்புக்குரியவர்கள் அத்தனைபேரும் அழுது துடித்தபோதும் அவர்களை விட்டு நிரந்தரமாக நீங்கிப் போனான்.

சிவகுரு — ஆர்யாம்பாளின் தவத்தின் பலனாக சங்கரர் பிறந்திருந்தாலும் பிரியவேண்டிய வேளைவந்து விட்டபோது பிரிந்துதானே ஆக வேண்டும்.

ஒரு பிள்ளை தாயார் அனுமதி இல்லாமல் சந்நியாஸியாகக் கூடாது.

எப்படியாவது அம்மாவின் சம்மதத்தைப் பெற்றுவிட வேண்டும்.

அன்று வழக்கம்போல அன்னையுடன் கூட அருகில் ஓடிக்கொண்டிருந்த பூர்ணா நதிக்கு நீராடச் சென்றார் சங்கரர்.

அன்னை ஸ்நானம் முடித்துக் கரையேறினாள்.



ஆற்றின் நடுவில் குளித்துக் கொண்டிருந்த சங்கரர் திடீரென்று அலறத் தொடங்கினார்.

"அம்மா, அம்மா" என்று கூக்குரலிட்டார் சங்கரர்.

"அம்மா! என் காலை முதலை ஒன்று கவ்விக் கொண்டிருக்கிறது. ஐயகோ! அது என் காலை கொஞ்சம் கொஞ்சமாக இழுத்துக் கொண்டிருக்கிறது"

சங்கரரது அலறல் கேட்டு அன்னையும் அழத் தொடங்கினாள்.

பேதை! அவளது சிந்தனைகூட மரத்துப் போய் விட்டது. திடீரென்று அந்த ஆற்றில் என்றும் இல்லாத திருநாளாக இன்றைக்கு முதலை எப்படி வந்தது என்ற ஆராய்ச்சியில் எல்லாம் இறங்கும் நிலையில் அவள் இல்லை.

தாய் உள்ளம் பரிதவித்தது. ஏற்கெனவே கணவனை இழந்துவிட்டோம், ஒரே பிள்ளை அதுவும் ஸத்புத்ரன். அவனுக்கு ஒரு ஆபத்து என்றால் ஒரு பெண்ணுக்கு எப்படி இருக்கும்?

பிரமை பிடித்து நின்று கொண்டிருந்த தாயிடம் சங்கரர்,

"அம்மா! நீ மட்டும் மனம் வைத்தால் இந்த முதலையின் மரணப் பிடியிலிருந்து நான் தப்பிக்க முடியும்".

"அபலையான நான் எப்படியடா உன்னைக் காப்பாற்ற முடியும்?"

"முதலை வாயிலிருந்து மீள்வதற்கு ஒரே வழிதான் இருக்கிறது. முதலையின் மூலம் சாவு ஏற்பட்டால் அது துர்மரணம் ஆகிவிடும். அபம்ருத்யுவினால் நான் ஆவியாக அலையும் துர்ப்பாக்கியம் நிகழும். உனக்கும் பிள்ளை உயிரோடு இருந்து கொள்ளிபோடும் பாக்யம் இல்லாமல் போய்விடும்.

இந்தக் கஷ்டங்களிலிருந்தெல்லாம் மீள எனக்கு ஒரு வழி தோன்றுகிறது. ஆனால் அதற்கு நீ சம்மதிக்க வேண்டும்.

“தாயே, நமது சாஸ்திரங்கள் சந்நியாஸ ஆசிரமத்தை ஏற்றுக் கொள்பவன் புனர்ஜன்மம் எடுப்பதாகக் கூறுகின்றன.

ஸந்நியாஸி ஆகிறவன் இந்த உலகத்தைப் பொறுத்தவரை இறந்தவன் போலத்தான்.

அப்போது ப்ராரப்த வசத்தால் இந்த முதலை மூலம் ஏற்படக்கூடிய துர்மரணமும் விலகி விடும்.

சந்நியாஸம் வாங்கிக் கொண்டபின் நான் உன்னோடு நம் அகத்தில் இருக்க முடியாவிட்டாலும் எங்காவது இவ்வுடலோடு கூட உயிர் வாழ்ந்து கொண்டிருப்பேன்.

ஒருத்தன் துறவை மேற்கொண்டால் அவனுடைய இருபத்தோரு முன் தலைமுறைக்காரர்களுக்கு ஸத்கதி கிடைத்து விடும். அதனால் உனக்கும் அப்படிக் கிடைக்கும்.

நான் ஸந்நியாஸம் வாங்கிக் கொண்ட பின்னாலும் இந்த முதலை என் காலை விடாமல் என்னை விழுங்கி விட்டாலும் அப்படி ஏற்படும் சாவு துர்மரணம் ஆகாது. நான் ஆவியாய் திரிய வேண்டிய அவசியம் இல்லை.”

ஆர்யாம்பாளுக்கு என்ன சொல்வது என்ன செய்வது என்றே புரியவில்லை.

“நான் ஸந்நியாஸம் வாங்கிக்க நீ அனுமதி கொடும்மா.”

“சங்கரா, நீ சந்நியாஸியாக வாழ்ந்தாலும் எங்காவது சுகமாக இருந்தால் சரி. நீ துறவியாக உலவும்போது உன்னை என்றாவது ஒரு நாள் சந்திக்கும் வாய்ப்பாவது கிட்டும். நீ இறந்து விட்டால் அதுவும் நடவாதே. உனக்கு எப்படித் தோன்றுகிறதோ அப்படியே பண்ணிக்கோ”

வேதனையும் விசித்திரமுமான சூழ்நிலையில் அன்னையிடமிருந்து அனுமதி வாங்கிக் கொண்டு ப்ரைஷ மந்திரத்தை உச்சாரணம் பண்ணி ஸந்நியாஸம் வாங்கிக் கொண்டார் சங்கரர்.

இப்படிப்பட்ட ஸந்நியாஸம் மேற்கொள்வதற்கு “அத்யாதுர ஸந்நியாஸம்” என்று பெயர்.

ஒரு பெரிய விபத்து ஏற்பட்டு சீக்கிரமே மரணம் ஸம்பவிக்கலாம் என்று இருக்கும்போது சட்டென்று தானே ப்ரேஷ மந்திரத்தை ஜபித்து குரு இல்லாமலேயே ஸந்நியாஸம் வாங்கிக் கொள்ள சாஸ்திரம் அனுமதிக்கிறது.

இதனை ஆபத் ஸந்நியாஸம் என்றும் சொல்வார்கள்.

சங்கரர் இப்போது மேற்கொண்ட ஸந்நியாசம் இந்த வகையைச் சேர்ந்ததுதான்.

ஸந்நியாஸம் வாங்கிக் கொள்வதில் வேறு இரண்டு முறைகளும் உள்ளன.

க்ரம ஸந்நியாஸம் என்பது ஒன்று. குருவின் அனுமதியோடு பித்ருகர்மாக்களை நிறைவாகச் செய்து விட்டு விரஜ ஹோமம் செய்து குருமுகமாக ஸந்நியாஸம் வாங்கிக் கொள்வது க்ரம ஸந்நியாஸம்.

க்ருஹஸ்தாச்ரமத்தை முறையாக அனுஷ்டித்து அதன்பின் ஸந்நியாஸம் மேற்கொள்வதுதான் க்ரம ஸந்நியாஸத்தின் கீழ் வரும்.

ஆனால் சில திருமடங்களில் நிர்வாகப் பொறுப்பை ஏற்கச் செய்ய அந்தந்தத் திருமடத்தின் சம்பிரதாயத்திற் கேற்ப வேத பாடசாலையில் பயின்று கொண்டிருக்கும் காலத்திலேயே கூட ஸந்நியாஸம் தருவது தற்கால மரபில் உள்ளது. இதுவும் க்ரம ஸந்நியாஸமே.

நோய்வாய்ப்பட்டு மரணத்தை எதிர்நோக்கிக் காத்திருக்கும்போது வாழ்க்கையில் விரக்தி ஏற்பட்டு ஸந்நியாஸம் மேற்கொள்வோரும் உண்டு.

அல்லது வாய்த்த மனைவி சரியில்லாமல் விரக்தி ஏற்பட்டு வைராக்யம் முதிர்ந்து ஸந்நியாஸம் மேற்கொள் வோரும் உண்டு.

இதில் விராஜஹோமம், ச்ராத்த கர்மாதிகள் இருக்காது, இருந்தாலும் குருமுகமாகவே இந்த ஸந்நியாஸ தீக்ஷை வழங்கப்படும். குரு பக்கத்தில் இல்லாத பக்ஷத்தில் குருவை மானஸீகமாக தியானித்து ப்ரைஷ மந்திரம் சொல்லி ஸந்நியாஸம் வாங்கிக் கொள்ளலாம்.

இது ஆதுர ஸந்நியாஸம் எனப்படும்.

ஆதுரஸ்ய து ஸந்யாஸே ந விதி: நைவ ச க்ரியா: |
ப்ரஷ மாத்ரம் ஸமுச்சாய ஸந்யாஸம் தத்ர பூரயேத் இதி ||

என்ற தர்மசாஸ்திர வாக்கியப்படி இது அனுமதிக்கப் படுகிறது.

முதலை வாயிலிருந்து மீண்டு கரையேறி வந்த சங்கரரிடம்,

"வீட்டுக்குப் போகலாம் வா" என்று அழைத்தாள் தாய்.

"அம்மா! நீ என்ன சொல்லுகிறாய்? சற்று முன்பு தானே நான் சந்நியாசியாவதற்கு நீ அனுமதித்தாய்.

துறவியாகிவிட்ட எனக்கு இவ்வுலகமே வீடுதான்.

இவ்வுலகத்திலுள்ள எல்லாப் பெண்களுமே தாய்தான். நீ ஒருத்தி மட்டுமே எனக்குத் தாயல்ல. ஆயினும் பல காலம் தவமிருந்து என்னைப் பத்து மாதம் சுமந்து பெற்ற உனக்கு நான் கடமைப்பட்டுள்ளேன்.

ஆகவே நான் உன்னை நிராதரவாக விட்டுவிட்டுப் போய்விடுவதாக நீ பயப்படவேண்டாம். நமது உறவினர்கள் நமது குடும்பத்தின் சொத்து பத்துகளை நிர்வகிப்பதோடு உன்னையும் நன்றாகப் பார்த்துக் கொள்வார்கள்

நீ எப்போதாவது என்னைப் பார்க்க ஆசைப்பட்டு நினைத்துக் கொண்டாலே போதும். நான் ஓடோடி வந்து உன் பக்கத்தில் நிற்பேன்.

உனது அந்திமக் காலத்தில் உன்னருகே இருந்து நீ இப்பூதவுடலை நீத்த பின்னர் செய்ய வேண்டிய அந்திமக் கிரியைகளை நான் செய்வேன். இது சத்தியம்.

நான் பாரதநாடு முழுவதும் வேதநெறியைத் தழைத்தோங்கச் செய்து உத்தம துறவியாக வாழ்ந்து நமது மூதாதையரின் இருபத்தோரு தலைமுறையினர் நற்கதியடையும்படிச் செய்வேன். இதற்கு நீ ஆசியளித்தருள வேண்டும்."

இந்த இடத்தில் சங்கரர் தாயாரை த்ருப்தி படுத்த அந்திமக் கார்யத்தைச் செய்ய வருவேன் என்று

சொல்லவில்லை. உண்மையிலேயே ஆத்மார்த்தமாகச் சொன்னார்.

ஆதிசங்கரருக்கு முன்னதாக வரலாற்றில் இடம்பெற்ற ஸந்நியாஸிகள் யாரும் இருந்ததாகத் தெரியவில்லை.

துவாபரயுகத்தோடு ரிஷிகளின் பாரம்பரியம் முடிந்து போய்விடுகிறது.

ரிஷிகளில் ஸந்நியாஸம் ஸ்வீகரித்துக் கொண்டவர்கள் என்பதாக யாரும் இல்லை.

யாக்ஞவல்கியர் ஸந்நியாஸம் பெற்றுக் கொண்டதாக வரலாறு உண்டு.

அத்வைத குரு பரம்பரையிலும் சுகர் வரையில், சுகர் உள்பட எவருமே ஸந்நியாஸ ஆச்ரமிகளாக இருந்ததில்லை.

சங்கரரின் பரம குருவான கௌடபாதரும், குருவான கோவிந்த பகவத்பாதரும்தான் விதிமுறைப்படி ஸந்நியாஸம் வாங்கிக் கொண்டு சாஸ்த்ர ரீதியாக அந்த ஆச்ரம நியமங்களைக் கடைப்பிடித்தவர்கள்.

ஸந்நியாஸ உபநிஷத் என்பதாகவே ஒரு நூல் உண்டு. இதில் ஸந்நியாஸிகளில் எத்தனை விதங்கள் உண்டு என்பது தரப்பட்டுள்ளது.

சுகரிடமிருந்து கௌடர் ஸந்நியாஸம் பெற்றார். ஆனால் சுகரோ ஸந்நியாஸம் மேற்கொள்ளாத அவதூதர். ஸந்நியாஸ தீக்ஷை கொடுக்கும் அதிகாரம் அவர்களுக்கு உண்டு.

அண்மையில் ஸ்ரீராமகிருஷ்ணர் காவி வஸ்திரம், முண்டிதம் என்பதாக எதுவுமே இல்லாத பரமஹம்ஸர். ஆனால் அவர் நரேந்திரன், ராகால் முதலானவர்களுக்கு ஸந்நியாஸ தீக்ஷை தந்தார்.

குடீசதுர், பஹூதகர், ஹம்ஸர், பரமஹம்ஸர் என்று ஸந்நியாஸிகளில் நாலு வகை உண்டு. அத்வைத ஸந்நியாஸிகள் நாலாவதான உத்தமப் பிரிவைச் சேர்ந்தவர்கள்.

ஸந்நியாஸ ஆசிரமத்தில் தாயாருக்கு அவரது மரணத்துக்குப் பின் அக்னி கார்யம் செய்யும் அதிகாரம்

கிடையாது. அக்னி ஸம்பந்தம் எதுவுமே ஸந்நியாஸிக்குக் கூடாது. அதனால்தான் ஸந்நியாஸிகள் தங்கள் சரீரத்தை உகுத்த பிறகு அந்த சரீரத்தை அக்னிக்கு இரையாக்காமல் பூமியில் புதைப்பது.

அப்படியிருக்க சங்கரர் தாம் ஒரு துறவியான பின்னரும் தாய்க்கு அந்திமக் கிரியை செய்ய முன்வந்தது தன் தாயின் விருப்பத்திற்கு அவர் கொடுத்த முக்கியத் துவத்தைக் காட்டுவதோடு, அந்தக் காலத்திலேயே சமுதாய நெறிமுறைகளைப் புரட்டிப்போடும் புரட்சிவாதியாகவும் அவர் திகழ்ந்ததை எடுத்துக் காட்டுகிறது.

ஆனால் ஆதிசங்கரர் மரபில் வந்த எந்தப் பீடத்து ஸந்நியாஸியும் தாய்க்கு அந்திம ஸம்ஸ்காரம் செய்யும் உரிமை பெற்றிருந்ததாகத் தெரியவில்லை.

இதற்கு ஒரு காரணமும் இருக்கலாம். சாதாரணமாக எந்தப் பீடத்திற்கும் பீடாதிபதியாக நியமிக்க ஒருவரை ஸந்நியாஸம் மேற்கொள்ளச் செய்யும் போது, குடும்பத்தில் மூத்த மகனையோ, அல்லது ஒரே பிள்ளையையோ தேர்ந்து எடுப்பதில்லை என்ற நியதியே ஆகும்.

ஒருவன் ஸந்நியாஸி ஆனபின் தன் தந்தைக்கு நமஸ்காரம் செய்யும் மரபு கிடையாது. ஸந்நியாஸி ஆகிவிட்ட மகனை தந்தை வணங்க வேண்டும் என்பதும் மரபு.

ஆனால், தாயின் விஷயத்தில் அம்மாவை ஸந்நியாஸி வணங்க வேண்டும். அம்மா ஸந்நியாஸியை நமஸ்கரிக்கக் கூடாது.

ஸந்நியாஸியையும் குடும்பஸ்தனாக சித்தரிக்கும் நீலகண்ட தீக்ஷிதரின் வைராக்ய சதக சுலோகம் ஒன்றே இருக்கிறது.

"பிக்ஷையிடும் பெண்மணியர் யாவரும் துறவிக்குத் தாய்மாரேயாவர்; குருவே தந்தையாவார்; சீடர்கள் யாவரும் பிள்ளைகளே; தனிமையில் இன்பம் காண ஹேதுவாக உள்ள சாந்தியே மனைவியாவாள்" என்று அர்த்தமாகும் அந்த சுலோகம் இதோ.

பிக்ஷா–ப்ரதா ஜநந்ய: பிதரோ குரவ: குமாரகா: சிஷ்யா: |
ஏகாந்த–ரமண–ஹேது: சாந்திர்&தயிதா விரக்தஸ்ய ||

ஆர்யாம்பா தனது மகனுக்கு ஸந்நியாஸியாவதில் இருந்த மன உறுதியையும், அவன் கூறுவதில் உள்ள தர்ம நியாயத்தையும் உணர்ந்து ஆசியளித்தாள்.

இங்கு சமுதாய சமயப் பணிக்கு வரும் இளைஞர்களுக்கு ஒரு பாடம். தாய் தந்தையரிடம் சொல்லாமல் கொள்ளாமல் ஓடிப்போய் துறவியாவதோ அன்றி சமுதாயத் தொண்டனாக மாறுவதோ கோழைத்தனம் ஆகிவிடும்,

பெற்றோரிடம் தனது மனோ விருப்பத்தை எடுத்துச் சொல்லி அவர்கள் ஆசியைப் பெற்று, அவர்கள் அப்படியும் அனுமதி தர மறுத்தால், தனது மனோதிடத்துடன் கூடிய முடிவைச் சொல்லி, தான் எடுத்துள்ள நல்ல முடிவின்படி துணிவோடு செயல்படவேண்டும்.

சங்கரர் ஏற்கெனவே ஸந்நியாஸத்தை ஸ்வீகரித்துக் கொண்டுவிட்டாலும் தக்க ஒரு குருவை நாடி முறைப்படி ஸந்நியாஸ தீக்ஷை பெற விரும்பினார்.



ஜுகுப்ஸா

நம்மைச் சறுக்கிவிடக்கூடிய ஸகல இன்ப நுகர்ச்சிப் பொருள்களையும் வெறுத்து ஒதுக்கினால்தான் ஆத்மாவை ரக்ஷித்துக் கொள்ள முடியும்.

பிற்பாடு அன்புருவம் ஆவதற்கே முதலில் வெறுப்புணர்ச்சி ஏற்படுத்திக் கொள்ள வேண்டும்.

இதற்கு 'ஜுகுப்ஸா' என்று பெயர்.



அத்தியாயம் - 9

# அத்வைத குரு பரம்பரை

காலடியில் பூர்ணா நதி வெள்ளத்தால் பாதிக்கப் பட்ட ஆலயத்தை மன்னன் ராஜசேகரனின் திரவிய பலம் கொண்டு புணருத்தாரணம் செய்தார் சங்கரர் என்ற தகவலை ஏற்கெனவே பார்த்தோம்.

குருகுல வாஸத்திற்குப் பின்னால் சங்கரர் தாயாரோடு இருந்தது ஒரு சில மாதங்களே என்பதால், மன்னர் வந்து சங்கரரை தரிசித்தது, பூர்ணா நதியை காலடிக்குள் கொண்டு வந்தது, கிருஷ்ணர் கோவிலை புணருத்தாரணம் செய்தது, முதலை வாயில் அகப்பட்டது என்பவை எல்லாம் அடுத்தடுத்து நடந்து விட்டன.

சில சங்கர விஜயங்களில் குறிப்பாக மாதவீய சங்கர விஜயத்தில் சங்கரர் ஸந்நியாஸம் ஏற்றுக்கொண்ட

பின்னரே கிருஷ்ணர் கோயில் புணருத்தாரணம் நிகழ்ந்ததாகக் கூறப்பட்டுள்ளது.

சங்கரர் ஸ்ரீ கிருஷ்ணர் கோயிலை புனருத்தாரணம் செய்தது எதிர்காலத்தில் இந்நாட்டின் எண்ணற்ற ஆலயங்களை அழிவினின்றும் காத்து அவற்றின் ஸாந்நித்யத்தைக் காப்பாற்ற சங்கரர் மேற்கொண்ட முயற்சிகளுக்கு முன்னோடியாக விளங்கியது.

தனக்கு ஸந்நியாஸ தீக்ஷை தரவேண்டிய குரு நர்மதா நதிக்கரையில் வசிப்பதாக சங்கரருக்கு அவரது உள்ளுணர்வு உணர்த்தியது.

குருவிடம் மந்த்ர தீக்ஷை, காஷாய தீக்ஷை பெற விரும்பினார் சங்கரர். அந்த குருவும் யார் என்பது அவர் மனக்கண் முன் தெளிவாகத் தெரிந்தது.

யாரோ ஒரு குருவைத் தேடி அவர் அலையவில்லை.

இன்னார்தான் தான் ஏற்கப்போகும் குரு என்பதும், அவர் இன்ன பெயரோடுதான் திகழ்கிறார் என்பதும், அவர் இன்ன இடத்தில்தான் வாழ்கிறார் என்பதும் தெரிந்து அவரை நாடி, அவர் வாழ்ந்த இடத்தை நோக்கிப் பயணமானார்.

அந்த குரு வேறு யாருமல்ல,



நர்மதா நதி தீரத்தில் தவம் செய்து வந்த கோவிந்த பகவத் பாதரே அந்த குருவாவார்.

யார் இந்த கோவிந்த பகவத் பாதர் என்பதைத் தெரிந்து கொள்வதற்கு முன்பாக சங்கரர் நர்மதா நதி தீரத்தை நோக்கி மேற்கொண்டிருந்த பயணத்தின் போது நடந்த சம்பவம் ஒன்றைப் பார்த்து விடுவோம்.

பல சங்கர விஜயங்களில் இந்த சம்பவம் சங்கரர் வாழ்வின் பின்பகுதியில் நடந்த தாக குறிப்பிடப்பட்டுள்ளது.

இருந்தாலும் இந்தப் பயணத்தின்போதுதான் இந்த சம்பவம் நடந்திருக்க வேண்டும் என்பது பலரது அபிப்ராயம்.

எது எப்படி இருந்தாலும் சம்பவத்தை இங்கேயே பார்த்து விடுவோமே.

சங்கரரது பயணப் பாதையில் அவர் துங்கா நதி தீரத்தைக் கடக்க வேண்டி இருந்தது.

சுழித்து ஓடும் அந்த ஆற்றில் ஸ்நானம் செய்ய ஆற்றுப் படுகையை நோக்கி நடந்தார்.

சுற்றிலும் ஏராளமான மரங்கள் சூழ்ந்த வனப்பகுதி. எங்கும் பேரமைதி. பறவைகள் கிறீச்சிடும் சப்தம் தவிர வேறு எந்தவித ஒலியும் இல்லை.

முற்பகல் நேரம். ரமணீயமான அந்த இயற்கைச் சூழலை ரசித்தவாறே ஆற்றை நோக்கி நடந்து கொண்டிருந்த சங்கரர் கண்ணில் ஒரு அதிசயக் காட்சி தென்பட்டது.

முற்பகல் நேரமாயினும் ஸூர்யன் நடுவானுக்கு அருகில் வந்துவிட்ட நேரம். வெய்யில் கொளுத்திக் கொண்டிருந்தது.

மரங்களின் நிழல் படாத அந்த ஆற்றின் கரையில் வெய்யிலின் தகிப்புச் சற்றுக் கூடுதலாகவே தெரிந்தது.

அப்போதுதான் அந்த அதிசயக் காட்சியைக் கண்டு வியந்து நின்றார் சங்கரர்.

கடும் வெய்யிலால் வருந்திய நிறை கர்ப்பிணியா யிருந்த தவளை ஒன்றிற்கு வெயில் படாமல் பாம்பு ஒன்று படமெடுத்து நிழல் தந்து கொண்டிருந்தது.

தவளையும் பாம்பும் ஜன்ம விரோதிகள். பாம்பைக் கண்டாலே தவளை நடுங்கும். பாம்போ தவளையைக் கண்டால் சப்புக்கொட்டிக் கொண்டு அதனைப் பிடித்துத் தின்னும்.

ஆனால் இங்கோ தவளைக்கு பாம்பு குடை பிடித்துக் கொண்டிருக்கிறது.

இந்த அதிசயத்தை வியந்து கொண்டே ஆற்றை நோக்கி நடந்தவருக்கு இன்னொரு ஆச்சரியம்.

ஆற்றில் அருகருகே நின்று கொண்டு ஒரு பசுவும், புலியும் தண்ணீர் அருந்திக் கொண்டிருந்தன.

புலியைக் கண்டு அஞ்சுவது பசுவின் இயல்பு. புலியோ பசுவைக் கண்டால் அடித்துத் தின்னாமல் விடாது. இங்கோ இரண்டும் அருகருகே ஏதோ நெருங்கிப் பழகிய நண்பர்கள்போல நீர் அருந்திக் கொண்டிருந்தன.

சந்தேகமில்லை.

ஜன்மப் பகைகளான இந்த ஜீவராசிகள் இப்படி ஒன்றுக்கொன்று அன்பு பாராட்டி வாழ்கின்றன என்றால் இங்கு யாரேனும் ஒரு மஹான் தவம் செய்து கொண்டிருக்க வேண்டும்.

அவருடைய தவவலிமையாலேயே இங்கு இப்படிப் பட்ட ஆன்மநேயச் சூழல் நிலவிக் கொண்டிருக்கிறது.

அது மட்டுமல்ல.

தன் உள்ளத்திலும் இதுவரை அனுபவித்து அறியாத ஒரு பேரமைதி, பேரானந்தம் பொங்கி நிற்பதையும் உணர்ந்தார்.

நீராடிவிட்டுக் கரையேறிய பின்னர் அக்கம் பக்கத்தில் யாரிடமாவது விசாரித்துத் தெரிந்து கொள்ள எண்ணினார்.

அருகில் ஆள் நடமாட்டமே இல்லை.

தூரத்தில் ஒரு வீடு தெரிந்தது. அங்கு சென்று விசாரித்தபோது ஒரு தகவல் கிடைத்தது.

"இப்போது இந்தப் பகுதியில் எந்த மஹானும் தவம் செய்து கொண்டிருக்கவில்லை, ஆனால் முன்னொரு காலத்தில் இங்குதான் ரிஷ்யச்ருங்கர் என்ற முனிவர் தவம் செய்தாராம். அதனால் இந்தப் பகுதிக்கே ச்ருங்க கிரி என்பதுதான் பெயர்"

உடனே சங்கரருக்கு ஸ்புரித்துவிட்டது.

அஹிம்ஸ ப்ரதிஷ்டாயாம்
தத் ஸந்நிதௌ வைரத்யாக:

எவனொருவன் அஹிம்ஸையில் நிலைபெற்று விடுகிறானோ அவன் முன்னிலையில் விரோதங்கள் எல்லாமே விடுபட்டுப் போகின்றன."

ரிஷ்ய ச்ருங்கர் வாழ்ந்தபோது மட்டுமல்ல, அவர் மறைந்து பல ஆயிரம் ஆண்டுகளுக்குப் பின்னாலும் அந்த இடத்தில் அவரது தபோ பலத்தினால் ஆன்மநேய அதிர்வலைகள் நிலவியதால் இந்த அதிசயங்கள் நடக்கின்றன என்பதைப் புரிந்து கொண்டார்.

அப்பொழுதே அவர் மனதில், "நான் எதிர் காலத்தில் நிர்மாணிக்க இருக்கும் மடங்களில் ஒன்றை இங்கே அமைப்பேன்" என்று உறுதி பூண்டார்.

காலம் கை கூடியபோது அங்கு மடம் ஒன்றை நிறுவினார். அதுதான் இன்றைய சிருங்கேரி மடம்.

இன்றும் அந்த மடம் அமைந்துள்ள ந்ருஸிம்ஹ வனத்தில் இந்த ஆன்மிக அதிர்வலைகளை ஒருவரால் உணரமுடியும்.

அத்வைத வேதாந்தத்தை ஆதிசங்கரர்தான் ஏற்படுத்தினார் என்பதாக நம்மில் பெரும்பாலோர் எண்ணிக்கொண்டிருக்கிறோம். இது தவறு.

ஆதிசங்கரருக்கு முன்னாலேயே குரு பரம்பரை தொடங்கிவிட்டது.

ஆதிசங்கரர் அத்வைத வேதாந்தத்தை மக்களிடையே பிரபலமாக்கியவர் என்பதும், அத்வைத தத்துவத்தை விளக்கும் பல அரிய நூல்களை இயற்றினார் என்பதும் அசைக்க முடியாத உண்மை.

ஆனால், அத்வைத பாரம்பர்யத்தில் பூர்வாசார்யர் களையும் நாம் தெரிந்து கொள்ள வேண்டும்.

குரு, பரமகுரு, பரமேஷ்டி குரு, பராபரகுரு என்பதுதான் அந்தப் பாரம்பர்யம்.

தக்ஷிணாமூர்த்தி ஆதி குரு. அவர் பேசாத குரு.

அத்வைதிகள் சொல்லும் "வந்தே குரு பரம்பராம்" என்று ஒரு சுலோகம் உண்டு.

அதில் ஆரம்ப குரு சிவபெருமான்தான். அப்புறம் அந்தப் பாரம்பர்யத் தொடரில் நடுவில் வருபவர் ஆதி சங்கரர். அதற்கப்புறம் அவரவருடைய நேர் குரு என்று மூன்று பேரை மாத்திரம் சொல்லி இப்படி ஆரம்பம், நடு, முடிவு என்று போகும் பரம்பரையில் வருகிற அத்தனை குருமார்களுக்கும் வந்தனம் என்று இந்த சுலோகம் சொல்கிறது.

ஸதாசிவ–ஸமாரம்பாம் சங்கராச்சார்ய மத்யமாம் |
அஸ்மத்–ஆசார்ய பர்யந்தாம் வந்தே குரு பரம்பராம் ||

இன்னொரு நீண்ட குருவந்தனா சுலோகமும் இருக்கிறது.

இதில் மஹாவிஷ்ணுவாகிய நாராயணரை முதல் குருவாகச் சொல்லியிருக்கிறது.

மஹாவிஷ்ணுதான் வேத மந்த்ரங்களை ப்ரம்மாவுக்குச் சொல்லி வைத்தார். அந்த மந்த்ரங்களைக் கொண்டே ப்ரம்மா படைப்புச் செயலைத் தொடங்கினார்.

மஹாவிஷ்ணுவாகிய நாராயணர், ப்ரம்மா, வஸிஷ்டர், சக்தி, பராசரர், வியாஸர், சுகர் என்று குல பரம்பரை இந்த ஆசார்ய பரம்பரை தொடர்கிறது.

சுகருக்குப் பின்னால் அவர் பிள்ளை என்று சொல்வதற்கு யாரும் இல்லாத, ப்ரம்ம ஞானியாக, அவதூதராக அவர் வாழ்ந்ததால் இனி சிஷ்ய பரம்பரையாக இது தொடர்கிறது.

சுகருக்குப் பின் கௌடபாதர்; கோவிந்த பகவத் பாதர், சங்கர—பகவத்—பாதர், அவருடைய நான்கு முக்கிய சிஷ்யர்கள், அதன்பிறகு அவர்கள் வழியாக இன்று வந்துள்ள நம்முடைய நேர் குரு வரை இந்த ஆசார்ய பரம்பரையைக் குறிப்பிட்டு நமஸ்கரிக்கும் சுலோகம் இது.

சங்கருடைய நான்கு முக்கியமான சிஷ்யர்கள் பத்மபாதர், ஹஸ்தாமலகர், தோடகர், சுரேச்வரர் ஆகியவர்கள்.

*இதற்கப்புறம் ஒவ்வொரு சங்கர பீடத்திலும் இன்றுவரை வரிசையாக வந்திருக்கிற ஆசார்யர்கள் எல்லாம் நம் குருமார்கள் ஆவர்.*

*இதோ இந்த சுலோகம்.*

நாராயணம், பத்மபுவம், வஸிஷ்டம்
சக்திம் ச, தத்புத்ர பராசரம் ச, |
வ்யாஸம், சுகம், கௌடபதம், மஹாந்தம்
கோவிந்த யோகீந்த்ரம், அதாஸ்ய சிஷ்யம் ||

ஸ்ரீசங்கராசார்யம், அதாஸ்ய பத்ம
பாதம் ச, ஹஸ்தாமலகம், ச சிஷ்யம் |
தம் தோடகம், வார்த்திககாரம், அந்யாந்
அஸ்மத் குரூந் ஸந்ததம் ஆநதோஸ்மி ||

*சங்கரரின் குரு பகவத்பாதர். பரமகுரு கௌடபாதர். பரமேஷ்டி குரு சுகர். பராபர குரு வ்யாஸர், பராபர குருவுக்கு முன்னால் பராசரர், சக்தி, வஸிஷ்டர், ப்ரம்மா, நாராயணர்.*

*சங்கரருக்கு முன்னதாக ஒன்பது ஆசார்யர்கள் இருந்திருக்கிறார்கள்.*

*சங்கரரின் பரமகுருவாகிய கௌடபாதர் வரலாற்றிலிருந்து பார்த்தால் கோவிந்த பகவத் பாதரைப் பற்றித் தெரிந்து கொள்ள சுலபமாக இருக்கும்.*

*ஆசார்ய பரம்பரையில் மூன்றுபேர் பெயர்களுக்குப் பின்னால் 'பாத' என்ற சொல் சேர்க்கப்பட்டுள்ளது.*

*'கௌடபாதர்'*

*இதற்கு நேர் பொருள் கொண்டால் 'கௌட அடிகள்'*

*அதாவது இவர் ஞானியாகும் முன்னரே, சுகரிடம் ஸந்நியாஸ தீக்ஷை பெறும் முன்னரே இவர் பெயர் கௌடபாதர் என்பதுதான்.*

*ஆனால் இவருக்கு இயற்பெயர் என்னவென்பது யாருக்கும் தெரியாததால் இவர் பதஞ்சலி மஹரிஷியிடம் பாடம் கேட்க வந்தபோது இவர் எந்தப் பிரதேசத்திலிருந்து வந்தாரோ அந்தப் பிரதேசத்தின் பெயராலேயே இவரை அழைக்கும் வழக்கம் ஏற்பட்டு, இவர் கௌட*

தேசத்திலிருந்து வந்து இருந்ததால் கௌடர் என அழைக்கப் பட்டிருக்கலாம்.

பின்னாளில் இவரே ஒரு அத்வைத ஆசார்யர் ஆனபின்பு 'கௌட பாதர்' &அதாவது இவரது பாதங்களில் விழுந்து வணங்கும் அளவுக்கு இவர் உயர்வு பெற்றதைக் குறிக்கும் வகையில்&இந்தப் பெயர் புழக்கத்தில் வந்திருக்கலாம்.

கௌட தேசம் என்பது இன்றைய வங்காளம், பங்களாதேஷ், அஸ்ஸாம் ஆகிய பகுதிகளைக் குறிப்பதாகும்.

எனவே இவரது பூர்விகப் பிரதேசம் கௌட தேசமாகும்.

ரிஷி பரம்பரை நீங்கலாகப் பார்த்தால் கௌடபாதரே அத்வைத குருபரம்பரையின் முதல்வர் ஆவார்.

இவருக்கு மஹாபாஷ்யம் போதித்த பதஞ்ஜலி மஹரிஷி அத்ரி மஹரிஷியின் பிள்ளையாவார். இவரது சரித்திரத்தை திருவிசநல்லூரில் வாழ்ந்த ராமபத்ர தீக்ஷிதர் என்பவர் எழுதியிருக்கிறார். இந்த நூல் எட்டு ஸர்க்கங்கள் கொண்டதாகும்.

இந்தப் பதஞ்ஜலி ஆதிசேஷனின் அவதாரம் என்பது ஐதீகம்.

இவரது சாதனைகள் அபாரமானவை.

மும்மலத்தையும் போக்கும் மூன்று ஒப்பற்ற க்ரந்தங்கள் இவரால் இயற்றப் பட்டவையாகும்.

அஷ்டாங்க யோகம் எனப்படும் யோக ஸூத்ர நூலைத் தந்தவர் இவரே.

மனஸைத் தூயதாக்கி சித்த விருந்திகளை நீக்கி பரமாத்மாவோடு நம்மை இணைத்து வைப்பது யோகம் எனப்படும். அந்த யோகம் சம்பந்தமாக இவர் செய்ததுதான் இந்த அஷ்டாங்க யோகம்.

சரீர சுத்திக்காக, உடலை நோய் நொடியின்றி பாதுகாப்பதற்காக இவர் எழுதிய இன்னொரு நூல் ஆத்ரேய

ஸம்ஹிதை என்ற ஆயுர்வேத நூல் ஆகும். இதனை 'சரகம்' என்றும் அழைப்பர்.

மூன்றாவதாக இவர் வாக்கினைத் தூய்மையாக்க, செம்மொழியான (ஸம்ஸ்க்ருதம் என்ற பதத்திற்கே செம்மை செய்யப்பட்ட மொழி என்பதுதான் அர்த்தம்) ஸ்ம்ஸ்கிருத வ்யாகரண நூலான பாணிணி மஹரிஷியின் அஷ்டாத்யாயீ என்ற நூலுக்கு மஹாபாஷ்யம் எழுதினார்.

இந்த மூன்று நூல்களில் மஹாபாஷ்யத்தை சிதம்பரம் நடராஜர் ஆலயத்தில் ஆயிரம் சீடர்களுக்கு போதிக்கும் வகுப்புகளை நடத்தி வந்தார்.

இந்த ஆயிரம் மாணவர்களில் ஒருவராகத்தான் இந்த கௌடர் வந்து சேர்ந்தார். தன்னிடம் பயிலும் மாணவர் களுக்கு இரண்டு நிபந்தனைகளை விதித்திருந்தார் பதஞ்ஜலி. ஒரு திரைச் சீலையைத் தொங்கவிட்டுக் கொண்டு அதன் பின்னால் இருந்துகொண்டு பாடம் போதித்து வந்தார். பாடம் நடக்கும்போது திரைச்சீலையை விலக்கி தன்னை யாரும் பார்ப்பதற்கு முயற்சிக்கக்கூடாது என்பது அவரது முதல் நிபந்தனை.

பாடம் நடந்து கொண்டிருக்கும்போது யாரும் தனது அனுமதியின்றி வெளியே செல்லக்கூடாது, அங்ஙனம் செல்பவர் நிபந்தனையை மீறிய குற்றத்திற்காக ப்ரும்மராக்ஷஸ் ஆக மாறவேண்டுமென சபிக்கப்படுவர். இது இரண்டாவது நிபந்தனை.

ஆதிசேஷனின் அவதாரமான பதஞ்ஜலி ஆயிரம் நாவுடைய ஆதிசேஷன் வடிவந்தாங்கி திரைச் சீலைக்குப் பின் அமர்ந்து பாடஞ் சொல்லி வந்ததாக ஐதீஹம்.

ஆயிரம் மாணவர்களுக்கும் ஐயமற பாடம் போதிக்கும் திறமை அவரிடம் இருந்தது.

மன ஒருமைப் பாட்டை ஒரு மனிதருக்கு ஏற்படுத்த வல்ல யோக சாஸ்திரத்தை இயற்றிய அவர் ஒரு ஸஹஸ்ராவதானியாக விளங்கினார்.

நம் காலத்திலேயே நாம் சதாவதானி, தசாவதானி, அஷ்டாவதானி ஆகியோரைப் பார்த்திருப்போம், எனவே

பதஞ்ஜலி முனிவர் ஸஹஸ்ராவதானியாக விளங்கியதில் வியப்பேதும் இல்லை.

நாள் தோறும் பாடங்கள் சிறப்பாகப் போதிக்கப் பட்டு மாணவர்களும் நல்ல முன்னேற்றம் கண்டு வந்தனர்.

மஹா பாஷ்ய நூல் முடிய கொஞ்ச நாட்களே இருந்தபோது மாணவர்களில் ஒருவர் பாடம் நடந்து கொண்டிருக்கும் போது யாரும் கவனிக்காத நேரத்தில் வெளியே போய் விட்டார்.

மற்றொரு மாணவர், "தமது ஆசிரியரால் எப்படி ஆயிரம் மாணவர்களில் ஒவ்வொருவருக்கும் தமது போதனையைத் தெளிவுறக் கற்பிக்க முடிகிறது என்பதை அறிய வேண்டும்" என்ற ஆர்வத்தினால் குருவின் கட்டளையை மீறி திரைச்சீலையைச் சிறிது உயர்த்தியதுமே ஆதிசேஷ உருவத்தில் இருந்த பதஞ்ஜலி முனிவரின் ஆயிரம் நாவுகளும் விஷ ஜ்வாலையைக் கக்கியதால் அனைவரும் எரிந்து சாம்பலாயினர்.

பதஞ்ஜலி முனிவருக்கு இதனால் சொல்லொணா வருத்தம் ஏற்பட்டது. சாம்பல் குவியல் மீது தமது மனித உருவில் அமர்ந்திருந்த பதஞ்ஜலி முனிவர் வெளியே சென்றிருந்த மாணவர் ஒருவர் திரும்பி வருவதைக் கண்டார்.

என்ன ஆச்சரியம்!

அத்தனை பேரும் எரிந்து போய் விட்டார்கள் என்று எண்ணிக் கொண்டிருக்கையில் ஒரே ஒரு மாணவர் மட்டும் உயிரோடு இருந்தது அவருக்கு மகிழ்ச்சியைத் தந்தது.

ஆனால் அவரும் நிபந்தனையை மீறி வெளியே சென்றதால் சாபத்திற்கு ஆளானவராகி விட்டார். அவருக்கு மிகுதிப் பாடத்தை ஒருமித்த மனத்தோடு ஒரே நொடியில் ஞான அனுக்ரஹம் செய்தார்.

அதே கணத்தில் அம்மாணவர் ப்ரம்மராக்ஷஸாக மாறினார். அம்மாணவரே கௌடபாதர் ஆவார்.

ப்ரம்ம ராக்ஷஸாக மாறிய கௌட பாதரிடம் பதஞ்ஜலி முனிவர், "நீ ஒருவனே என்னிடம் பாடங் கேட்டுப் பயன் அடைந்துள்ளாய்.

ஆயினும் எனது நிபந்தனையை மீறியதால் அத்தவற்றுக்குரிய தண்டனையை அனுபவித்தே தீர வேண்டும். நீ சாபத்திலிருந்தும் விமோசனம் அடைவதற்குரிய வழியைச் சொல்கிறேன் கேள்.

"தகுந்த சீடன் ஒருவனுக்கு மஹா பாஷ்யத்தை போதித்தவுடன் உனது சுய உருவத்தைப் பெறுவாய்" என்றார்.



அதன் பிறகு ப்ரம்ம ராக்ஷஸாகிய கௌடபாதர் நர்மதையாற்றங்கரையை வந்தடைந்து அங்கோர் ஆலமரத்தில் அமர்ந்து கொண்டார். ஆற்றை ஒட்டிய நெடுஞ்சாலையில் அம்மரம் இருந்ததால் அவ்வழியே சென்று கொண்டிருந்தவர்களில் தக்கதொரு சீடனைக் கண்டுபிடிப்பதற்காக வழிப்போக்கர்களிட மெல்லாம் கேள்விகள் கேட்டுச் சரியான பதில் சொல்லாதவர்களை அடித்து உண்டு வந்தார்.

பாணிணி சூத்திரத்தினின்றும் கேள்விகள் கேட்டு சரியான விடை கூறும் ஒருவரையும் காணாமல் பல நாட்களை ப்ரம்மராக்ஷஸராகவே கழிக்க வேண்டியிருந்தது கௌடபாதருக்கு.

ஒரு நாள் சந்திரசர்மா என்ற அறிஞர் அந்தச் சாலை வழியாகச் செல்லும்போது அவரது முகத்தில் இருந்த தேஜஸைக் கண்டு அவரைத் தம்மிடம் அழைத்து வழக்கமான கேள்விகளைக் கேட்டார்.

கௌடபாதர் கேட்ட அத்தனைக் கேள்விகளுக்கும் சரியான விடை சொல்லிவிட்டார் சந்திரசர்மா.

அவரது அறிவுத்திறனை மெச்சி அவருக்கு மஹாபாஷ்யத்தை போதிக்கத் தொடங்கினார்.

எவ்வளவு சீக்கிரம் தாம் மஹாபாஷ்யத்தை உபதேசித்து முடிக்கிறோமோ அத்தனை சீக்கிரம் ப்ரம்மராக்ஷஸாக இருக்கும் சாபத்திலிருந்து விடுபட்டு விடலாம் என்று உணர்ந்த கௌடபாதர் எல்லாவற்றையும் தாம் சொல்லச் சொல்ல திருப்பிச் சொல்லி மனப்பாடம் செய்யும் பாரம்பரிய முறையில் கற்பிக்கப் பொறுமையில்லாமல் தாம் சொல்லச் சொல்ல அவற்றையெல்லாம் எழுதிக் கொள்ளும்படிப் பணித்தார்.

இரவு பகலாக தொடர்ந்து அவர் சொல்லச் சொல்ல இவரும் சோர்வு இல்லாமல் எழுதிக் கொண்டே போக வேண்டும் என்பது கட்டளை.

ஏடும் எழுத்தாணியும் இல்லாத நிலையில் ஆலமரத்தின் இலைகளைப் பறித்துத் தம் தொடையைக் கீறி அதனின்று வெளிப்பட்ட ரத்தத்தை மையாகக் கொண்டு அந்த இலைகளில் மஹா பாஷ்யத்தை எழுதத் தொடங்கினார் சந்திரசர்மா.

குறுகிய காலத்தில் மஹாபாஷ்யம் முழுவதையும் ஊக்கத்துடன் எழுதி முடித்தார். எழுதிய இலைகளைத் தம் மேலாடையில் போட்டு ஒரு மூட்டையாகக் கட்டிக் கொண்டார்.

மஹாபாஷ்யம் பாடம் சொல்லி முடித்ததுமே சாப விமோசனம் பெற்று கௌடபாதர் ப்ரம்மராக்ஷஸ ரூபம் நீங்கி சுயவுருவம் பெற்றார்.

சந்திரசர்மாவை ஆசீர்வதித்து அனுப்பினார்.

இப்போது கௌடரின் மனதில் ஒரே ஒரு எண்ணம் மட்டுமே மேலோங்கி நின்றது. ஆத்ம ஞான உபதேசம் பெறவேண்டும். அதற்கு ஒரு உத்தம குருவை அடைய வேண்டும்.

சுகர் என்ற ப்ரம்மஞானி பத்ரிகாசிரமத்தில் இருப்பதாகத் தெரிந்து கொண்ட கௌடர் அவரையே குருவாக வரிக்கவேண்டும் என்ற தீர்மானத்துடன் பத்ரிகாசிரமம் அமைந்திருந்த ஹிமயமலைச் சாரலுக்குச் சென்றார்.

சுகர் கௌடரின் வைராக்கியத்தைத் தெரிந்து கொண்டபின் அவருக்கு ப்ரம்மஞான உபதேசம் தந்ததுடன் ஸந்நியாஸ தீக்ஷையும் நல்கினார்.

இதன்பின்னர் வெறும் கௌடராக இருந்தவர் கௌடபாத ஆசார்யர் ஆனார். அத்வைத குரு பரம் பரையில் இடம் பெற்றார்.



முழுக்க முழுக்க அத்வைதபரமாக எழுதப் பட்ட உபநிஷத வ்யாக் யானம் இந்த கௌட பாதர் எழுதிய **"மாண்டுக்ய காரிகை"** தான்.

காரிகை என்ற சொல்லுக்கே வ்யாக்யானம் என்பதுதான் பொருள்.

தமிழில்கூட 'யாப்பருங்கலக்காரிகை' என்று ஒரு நூல் உள்ளது. யாப்பு என்பது செய்யுள் வகை இலக்கணம் ஆகும். யாப்பு என்பதை ஆங்கிலத்தில் PoeticalComposition என்றும் சொல்லலாம்.

அத்தகைய யாப்பு இலக்கண நூலுக்கான வ்யாக்யானமே இந்த யாப்பருங்கலக் காரிகை.

இப்போது சந்திரசர்மா விஷயத்திற்கு வருவோம்.

மஹாபாஷ்ய உபதேசம் பெற்றுத் தான் எழுதிய ஆலிலை மூட்டையை சுமந்துகொண்டு உஜ்ஜயினியை நோக்கி நடக்கத் தொடங்கினார்.

ஏற்கெனவே இரவு பகல் பாராது தூங்காமல் எழுதியதால் ஏற்பட்ட உடல் சோர்வுடன் நடப்பது என்றால் என்னாவது?

வழியில் பசியாலும் தாகத்தாலும் நடை தளர்ந்து கண்கள் செருக ஒரு மரத்தடியில் மூட்டையைத் தலைக்கு அடியில் வைத்துக் கொண்டு உறங்கிவிட்டார்.

அப்பொழுது அந்தப் பக்கமாக வந்த ஆடு ஒன்று மூட்டையின் உள்ளிருந்த இலைகளை மடமடவென்று

தின்னலாயிற்று. சற்று நேரத்தில் கண் விழித்த சந்திரசர்மா மீதியிருந்த இலைகளை மூட்டையாகக் கட்டிக் கொண்டு தூக்கக் கலக்கத்திலேயே உஜ்ஜயினி நகரை அடைந்தார்.

நீண்ட, தூரம் நடந்து வந்த அலுப்பும், களைப்பும், பசி மயக்கமும் அவரை வாட்ட அவர் ஒரு வீட்டுத் திண்ணையில் படுத்துத் தூங்கலானார்.

அது ஒரு வணிகரின் வீடு. யதேச்சையாக வெளியே வந்த வணிகரின் பருவ மகள் பார்வை திண்ணையில் படுத்திருந்த தேஜஸ்வியான ப்ராம்மண இளைஞன் மீது பட்டது. பசியால் மயங்கிக் கிடந்த அவன் மீது பரிதாபம் கொண்டாள்.

மயங்கிக் கிடப்பவர்கள் வயிற்றில் மசியப் பிசைந்த அன்னத்தைத் தேய்த்தால் அவர்களது மயக்கம் நீங்கும் என்பது அவளுக்குத் தெரிந்திருந்தது.

எனவே வீட்டினுள் சென்று மசியப் பிசைந்த தயிர்ச் சோற்றைக் கொண்டுவந்து அவரது வயிற்றில் தேய்த்தாள்.

அன்னஸாரம் உள்ளே இறங்கவும் மயக்கம் தெளிந்து எழுந்தார் சந்திரசர்மா.

அவருக்கு அப்போது அவள் முறையாக அன்னமிட்டாள்.

அந்த இளைஞர் மீது அந்தப் பெண்ணுக்குக் காதல் பிறந்து விட்டது. வெட்கத்தைவிட்டு அவரிடத்திலே தன் காதலை அந்தப் பெண் வெளிப்படுத்தினாள்.

சந்திர சர்மாவோ மஹாபாஷ்யத்தை உலகில் பரவச் செய்வதிலேயே தமது வாழ்நாளைக் கடத்தவேண்டும் என்று எண்ணியிருந்ததால் அவளது காதலை ஏற்க இசையவில்லை.

பெண்ணின் தந்தையோ "உனது உயிர் என் மகள் அளித்த பிச்சை. அவள் உணவளித்து உன்னைக் காப்பாற்றாமல் இருந்திருந்தால், நீ ஏது? உன் பாஷ்யம் ஏது? லக்ஷியம் ஏது? ஆகையால் உன்மீது இவளுக்கு உரிமை இருக்கிறது." என்று வாதிட்டான்.

வாதம் முற்றி மன்னனிடம் தீர்ப்பிற்காகச் சென்றார்கள்.

வழக்கு மன்றத்தில் அமர்ந்திருந்த அரசன் மகள், அமைச்சர் மகள் இருவரும் சந்திரசர்மா அழகில் மயங்கி அவரைத் திருமணம் செய்து வைக்கும்படி தமது தந்தையரிடம் கோரினர்.

ஒருத்தியைக் கூட மணக்கக்கூடாது என்றிருந்த சந்திரசர்மாவிற்கு மூன்று பேரை மணக்கும் கட்டாயம் ஏற்பட்டது.

நாளடைவில் தனது மனைவியர் மூலம் நான்கு ஆண் குழந்தைகளுக்குத் தந்தையானார். அவரது நான்கு குமாரர்களும் பிற்காலத்தில் புகழ்மிக்கவர்களாக மாறினர்.

அவரது புத்திரர்கள்தாம் வரருசி என்ற வல்லபரிஷி, விக்கிரமாதித்தன், பட்டி, பர்த்ருஹரி என்பவர் ஆவர்.

இவர்கள் எந்தவிதத்தில் புகழ்மிக்கவர்கள் ஆனார்கள் என்பதையும் இங்கே தெரிந்து கொள்வோம்.

சந்திர சர்மாவுக்கு ப்ராம்மண மனைவி (அமைச்சரின் மகள்)யிடம் பிறந்த பிள்ளைதான் வரருசி. இவருக்கு காத்யாயனர் என்றொரு பெயரும் உண்டு. இவர் ஸம்ஸ்க்ருத இலக்கண மேதையாக, வ்யாகரண வித்வானாகத் திகழ்ந்தவர்.

விக்ரமாதித்த மன்னனின் அவையை அலங்கரித்த நவரத்னங்களில் ஒரு ரத்னம் இவர்.

அந்த விக்ரமாதித்ய மஹாராஜனேதான் சந்திர சர்மாவுக்கு க்ஷத்ரிய மனைவியிடம் பிறந்த பிள்ளை.

அதன்படியே வைசிய மனைவிக்குப் பிறந்தவர் பட்டி. சந்திர சர்மாவின் நான்காவது பிள்ளைதான் பர்த்ருஹரி.

பட்டி விக்ரமாதித்யனின் அமைச்சராக விளங்கியவர். இவர் எழுதிய ‘பட்டி காவ்யம்’ வியாகரண விதிமுறைகளைச் சுவைபட ராமாயண சம்பவங்கள் மூலம் விளக்கும் அருமையான நூலாகும்.

பர்த்ருஹரி மன்னனாக இருந்து பின் பைராகியாக மாறியவர். இவர் ச்ருங்கார சதகம், நீதி சதகம், வைராக்ய சதகம் என்று மூன்று நூல்களை எழுதியுள்ளார்.

தனது குழந்தைகள் வளர்ந்து பெரியவர்கள் ஆனதும் சந்திரசர்மா துறவு பூண எண்ணினார்.

தமக்கு மஹாபாஷ்யத்தைக் கற்றுக் கொடுத்த கௌடபாதரையே குருவாக ஏற்று அவரிடம் ஸந்நியாஸ தீக்ஷை பெறும் நோக்கத்துடன் அவரைத் தேடிச் சென்றார்.

ஞானியாக ஹிமயமலைச் சாரலில் ஸஞ்சரித்துக் கொண்டிருந்த கௌடருக்குத் தனது முன்னாளைய சிஷ்யரைப் பார்த்தவுடன் மகிழ்ச்சி உண்டாயிற்று.

மனம் நிறைந்து மகிழ்வுடன் அவருக்கு ஸந்நியாஸ ஆச்ரமம் நல்கினார்.

ஸந்நியாஸ தீக்ஷா நாமமாக கோவிந்த பகவத் பாதர் என்ற பெயரை சந்திரசர்மா சூட்டிக் கொண்டார்.

கோவிந்த பகவத் பாதர் செய்துள்ள அத்வைத க்ரந்தங்களாக 'யோக தாராவளி'யும் "அத்வைதாநுபூதி"யும் விளங்குகின்றன.

வியாஸருடைய ஆணையை சிரமேற்கொண்டு கோவிந்த பகவத் பாதர் தன்னைத் தேடிவரும் தக்கதொரு சிஷ்யனுக்காக நர்மதா நதி தீரத்தில் காத்திருந்தார்.

அவரைத் தேடித்தான் சங்கரரும் இப்போது வந்து கொண்டிருந்தார்.





அத்தியாயம் - 10

# கோவிந்த தரிசனம்

நர்மதை நதி தீரத்தை வந்து அடைந்த சங்கரர் கோவிந்த பகவத் பாதரின் இருப்பிடத்தைப் பற்றித் தெரிந்து கொள்ள விரும்பினார். ஆசிரமங்கள் பல அமைந்திருந்த அப்பகுதியில் வாழ்ந்த தவ சிரேஷ்டர்கள் சிலர் அருகில் இருந்த ஒரு குகை ஒன்றினைக் காட்டி&

"மஹான் ஒருவர் பன்னெடுங்காலமாக ஆழ்ந்த சமாதி நிலையில் அங்கு அமர்ந்துள்ளார். தாங்கள் தேடி வந்துள்ள கோவிந்த பகவத் பாதர் அவராகவே இருக்கும்," என்று கூறினர்.

அவர்கள் காட்டிய குகை மிகவும் குறுகலான வாயிலைக் கொண்டிருந்தது. குகைக்குள் எட்டிப்

பார்த்தால் ஒரே கும்மிருட்டு. ஒருக்கால் உள்ளே வெகுவாக சமாதியில் ஆழ்ந்திருக்கலாம் குருநாதர்.

அந்த குகையையே மும்முறை வலம் வந்தார் சங்கரர். குருவை தியானித்து சுலோகம் ஒன்றை உச்சரித்தார்.

இந்த சுலோகம் பின்னாளில் சங்கரர் இயற்றிய வேதாந்த ப்ரகரண க்ரந்தங்களில் ஒன்றான விவேக சூடாமணியில் மங்களாசாசனம் சரணம் பகுதியில் சங்கரரால் சேர்க்கப்பட்டுள்ளது.

**ஸர்வ – வேதாந்த – ஸித்தாந்த**
**கோசரம் தம் – அகோசரம்**
**கோவிந்தம் பரமானந்தம்**
**ஸத்குரும் ப்ரணதோஸ்மி அஹம்**

ஸத்குருவான கோவிந்தரை, மத்குருவான (என்னுடைய குருவான) கோவிந்தரை நான் நமஸ்கரிக்கிறேன்.

உலகின் எந்த ஒலிக்கும் திறவாத கோவிந்தரின் கண்கள் சங்கரரின் ஸ்தோத்திரம் காதில் விழுந்ததும் திறந்தன.

வந்திருப்பவர் தான் எதிர்நோக்கிக் காத்திருந்த சிஷ்யராகத்தான் இருக்க வேண்டும்.

தன் எதிரில் நின்றவரின் முகத்தில் தென்பட்ட ப்ரம்ம தேஜஸைக் கண்டு மகிழ்ந்து & "அன்பனே! யார் நீ?" என்று கேட்டார்.

சாதாரணமாக நம்மைப் பார்த்து யாராவது "யார் நீ?" என்று கேட்டால் என்ன பதில் சொல்வோம்?

நான் இன்ன பெயருடையவன், இன்ன ஊரைச் சார்ந்தவன், இன்னாருடைய புதல்வன், இன்ன படிப்புப் படித்தவன், இன்ன வேலை பார்க்கிறவன், என்று இப்படியெல்லாம்தானே அறிமுகம் செய்து கொள்வோம்.

ஆனால், சங்கரரோ, கோவிந்தரது கேள்வியின் உள்ளார்ந்த தாத்பர்யத்தைப் புரிந்து கொண்டார்.

"தன்னை யார்?" என்று மிகத் தெளிவாகவும், எளிமையாகவும் விளக்கி பத்து சுலோகங்களில் பதில் அளித்தார்.

இந்தப் பத்து சுலோகங்களே பின்னாளில் "தச ச்லோகீ" என்பதான பெயரில் ஓர் அத்வைத ஸ்தோத்திர மாகவே ஆகிவிட்டது.

ஒவ்வொரு சுலோகத்தின் கடைசி அடியும்

தத் ஏகோ (அ) வசிஷ்ட:
சிவ கேவலோ (அ) ஹம்

என்பதாக முடியும்.

"ஒற்றையாய் உண்மையாய் திகழ்கின்ற
சிவமே நான்"

என்பது இதன் பொருள்.

நான் என்று கருதப்படும் இந்த ஆன்மா பஞ்ச பூதங்களால் உருவாகியுள்ள இந்த உடல் அல்ல; பஞ்ச தன் மாத்திரைகளால் உருவாகியுள்ள புலன்களும் அல்ல, இவற்றுக்கெல்லாம் அப்பாற்பட்ட ப்ரம்மஸ்வரூபம் தான் இந்த ஜீவன்.

சமுதாய அமைப்புகளில் எதையும் சேர்ந்தவனல்ல நான். உறவு முறைகளில் எதனையும் சார்ந்தவனல்ல ந;ான்.

சாங்கியம், சைவம், பாஞ்சராத்ரம் ஜைனம், மீமாம்ஸம் போன்ற சமய ஆகமங்களைச் சார்ந்தவனுமல்ல; நான் சாஸ்திரமும் அல்ல; சிஷ்யனுமல்ல; கல்வியுமல்ல:

விழிப்போ, கனவோ, உறக்கமோ அல்ல; மேலுமல்ல; கீழுமல்ல; உள்ளுமல்ல; புறமும் அல்ல.

எல்லாமாய் அகண்டாகாரமாய் சகல வேதாந்த சித்தாந்தங்கள் எதை விளக்கியுள்ளனவோ அந்த சுத்த சிவமே நான்."

பரமாத்மா த்ரிகுணாதீதன். அதாவது குணங்களுக்கு அப்பாற்பட்டவன். பல ஜீவன்களாக நாம் அஞ்ஞானத் தால் பார்த்தாலும் அது பலவும் அல்ல; ஒன்றுமல்ல; ஏனெனில், ஒன்றாய் இருந்து பலவாய் மலர்ந்தது; இது முழுமையானது; வெறும் சூன்யமல்ல இருக்கிறதா?

இல்லையா? என்று விண்டுரைக்க இயலாதது. அறிவும் ஆனந்தமும் கொண்ட சிவமே நான்; சிவமே நான்.

ஜீவ — ப்ரம்ம ஐக்கியத்தை உணரவே ஒருவன் குருவினிடத்தில் ஞானோபதேசத்தைத் தேடிப் போகிறான். ஆனால், இங்கோ ஞானமே ப்ரவாஹித்து அருவியாய் இந்த சுலோகங்களில் கொட்டுகிறது. அப்புறம் ஞான உபதேச மாவது மந்த்ர தீக்ஷயாவது. இருந்தாலும் லௌகீக ரீதியாக குருவின் உபதேசம் என்பதாக ஒன்று தேவைப் படுகிறதே.

ஞானக் குழந்தையாய் தன்னைத் தேடி வந்திருக்கும் சங்கரரை அன்புடன் நோக்கினார். அருகில் அமர்த்திக் கொண்டார்.,

மந்த்ர தீக்ஷ என்பதாக மஹாவாக்ய உபதேசம் நிகழ்ந்தது. உள்ளத்து உணர்வாலும் ப்ரஷை மந்த்ர உச்சாரணத்தாலும் ஏற்கெனவே துறவியாகிவிட்ட சங்கரருக்கு காஷாய வஸ்திரம் தரப்பட்டது. பூர்வ சிகை மறைந்து மழித்த தலையுடன் சங்கரர் துறவியானார்.

அத்வைத வேதாந்த ஞானம் முறையாக ஊட்டப் பட்டது.

சங்கரர் குருவிற்கும் குறிப்பறிந்து தொண்டு செய்யும் சீடராக சிலகாலம் திகழ்ந்தார்.

குருவோடு சங்கரர் வசித்து வந்த காலத்தில் ஒரு அதிசய சம்பவம் நிகழ்ந்தது.

எங்கும் அடைமழை; வானமே பொத்துக் கொண்டு விட்டது போல மழை நிற்கவேயில்லை. நர்மதா நதியில் வெள்ளம் கரை புரண்டு ஓடியது.

கட்டுக் கடங்காத வெள்ளத்தால் ஆசிரமவாசி களுக்கும், அருகில் வாழ்ந்து வந்த கிராம மக்களுக்கும் பெருந்தொல்லை ஏற்பட்டது. வெள்ளத்திலிருந்து தங்களை காத்துக் கொள்ள மக்கள் சங்கரரை நாடி வந்தார்கள்.

சங்கரர் தனது ஆன்ம பலத்தால் நர்மதா வெள்ளத்தைக் கட்டுப்படுத்தினார். வெள்ளத்தின் கொடுமையால் பாதிக்கப்பட்ட மக்களுக்கு நிவாரண உதவிகளைச் செய்தார்.



ஒருவன் ஆன்ம ஞானத்திலேயே நிலை பெற்றவனாக இருந்தாலும் தன்னைச் சுற்றி வாழும் சமுதாய மக்களின் நலனில் அக்கறை காட்ட வேண்டியது அவசியம் என்பதை இந்தச் சம்பவம் உணர்த்துகிறது.

சங்கரரது செயலால் அனைவரும் மகிழ்ச்சியுற்றனர். கோவிந்த பகவத் பாதரும் சங்கரரின் அற்புதச் செயலைக் கண்டு மகிழ்ந்தார்.

அவரை அருகில் அழைத்து, "எவன், ஒருவன் நர்மதை வெள்ளத்தைக் கட்டுப்படுத்துவானோ அவனே ப்ரம்ம ஸூத்தரத்திற்கு விரிவுரை எழுதத் தகுதி படைத்தவன் என்று வியாசர் முன் சொன்ன வாக்கு இன்று பலித்துள்ளது.

நீர் காசிக்குச் சென்று ப்ரம்ம ஸூத்ர பாஷ்யத்தை எழுதுவீராக. இதை உமது வாழ்நாள் லக்ஷ்யமாகக் கொள்வீராக. ப்ரஸ்தான த்ரய நூல்களுக்கு அத்வைத பரமான பாஷ்யங்கள் உமது மூலமாகவே ப்ரச்சாரம் ஆகப் போகின்றன," என்று சொல்லி விடை பெற்றுக் கொண்டு இமயமலைச் சாரல் நோக்கிச் சென்றார் கோவிந்த பகவத் பாதர்.

வியாசர் சொன்ன நிபந்தனை சரியானதுதானா?

நர்மதா நதி வெள்ளத்தைக் கட்டுப்படுத்துவதற்கும், ப்ரம்ம ஸூத்ரத்திற்கு பாஷ்யம் எழுதுவதற்கும் என்ன சம்பந்தம் இருக்க முடியும்?

*இயற்கையின் சீற்றத்தினால் ஏற்படும் சீரழிவுகளினால் பாதிக்கப்படும் மக்களுக்குத் தொண்டு செய்து அச்சீரழிவுகளினின்றும் மக்களைக் காக்கும் இதயம் யாருக்கு இருக்கிறதோ அவரே மிக உயர்ந்த வேதாந்த நூலுக்கு விரிவுரை எழுதும் தகுதியுடையோர் ஆவர்.*

*இதைத்தான் வியாசர் சொல்லியிருக்க வேண்டும்.*

*வெறும் வாய் வேதாந்தம் வறட்டு வேதாந்தம் பலனளிக்காது.*

*சமுதாய உணர்வோடு கூடிய ஆன்மீக ஞானமுடையவரே அத்தகைய நூல்களை விளக்க வேண்டும்.*

*வியாசரே மிக அழகாகத் தாம் இயற்றிய புராணங்கள், இதிஹாஸம், சாஸ்திரங்கள் ஆகியவற்றின் சாரத்தை இரண்டே வாக்கியங்களில் வடித்தவர் அல்லவா?*

ஸர்வ சாஸ்த்ர புராணேஷு வ்யாஸஸ்ய வசனம் த்வயம்
பரோபகாரஸ்து புண்யாய பாபாய பர பீடனம்.

*பிறருக்கு ஏதாவது ஒரு விதத்தில் உபகாரமான வாழ்க்கை நடத்துவதுதான் புண்ணியம் எனப்படுகிறது; யாருக்காவது ஏதாவது ஒரு துன்பம் தரும் செயலைச் செய்வது பாபம் எனப்படுகிறது.*

*அனைத்து சாஸ்திரங்கள் புராணங்கள் ஆகியவற்றின் சாராம்சமான விஷயம் இதுவேயாகும்.*



குரு: சிவோ குருர் தேவோ
குருர் பந்து: சரீரினாம்
குருர் ஆன்மா குருர் ஜீவோ
குரோர் அன்ய: ந வித்யதே



*குருவே சிவன், குருவே தெய்வம்,*
*குருவே பந்து, குருவே ஆத்மா,*
*குருவே உயிர், குருவிற்குப் புறம்பாக*
*எதுவும் இல்லை.*



அத்தியாயம் - 11

# காசியில் சங்கரர்

தனது குருவின் ஆணையை நிறைவேற்றக் காசியை நோக்கிப் பயணமானார் சங்கரர்.

விந்திய மலையைக் கடந்து ஹைஹயம், சேடி, கௌசாம்பி ஆகிய தேசங்களைக் கடந்து யமுனை ஆற்றங்கரைக்கு வந்து சேர்ந்தார்.

யமுனைக் கரையோடே போய் பிரயாகையை அடைந்து அங்கிருந்து கங்கைக் கரை வழியாகக் காசியை அடைந்தார்.

காசியில் கங்கா நதிக் கரையில் விசுவனாதர் ஆலயத்துக்கு அருகில் மணிகர்ணிகா கட்டத்தில் சங்கரர் தமது வாசத்தை அமைத்துக் கொண்டார்.

குருநாதர் இவரை ஏன் காசிக்குப் போகும்படி கட்டளையிட்டார்?

ஒவ்வொரு நகரத்திற்கும் ஒரு சிறப்பு உண்டு. அப்படிக் காசிக்கு இருந்த சிறப்பு நாட்டின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் ஞானிகள், மஹான்கள், வித்வான்கள் காசியில் வந்து தங்கியிருந்ததுதான்.

ஏழு மோக்ஷபுரிகளில் ஒன்று காசி. எனவே, வாழ்வின் இறுதிப் பகுதியை காசியில் கழிக்க நாட்டின் பல பகுதிகளிலிருந்தும் மக்கள் காசிக்கு வருவது வழக்கமாயிருந்தது.

காசியில் மரித்தாலே முக்தி என்றால், காசியில் தானம், ஜபம், தபம், பூஜை போன்ற நல்வினைகளைத் தினையளவு செய்தாலும் பனையளவு பலனைத் தந்து பெறற்கரிய பேற்றினை நல்குமாம்.

காசி என்பது ராஜ்யத்தின் பெயர். அதன் தலைநகராக விளங்கிய வாராணஸியும் காசி என்ற பெயரிலேயே அழைக்கப்பட்டிருக்கிறது.

பாரதத்தின் ஹ்ருதய ஸ்தானம் வாராணஸி.

இந்நகரின் ஒருபுறம் வருணாவும், இன்னொரு புறம் அஸியும் ஓடுவதால் இந்நகருக்கு வாராணஸி என்று பெயர்.

பகவான் சங்கரர் இந்நகரில் விடாது உறைவதால் இந்நகருக்கு அவிமுக்தம் என்றும் ஒரு பெயர் உண்டு.

ந விமுக்தம் மயா யஸ்மாத்
அவிமுக்தம் இதம் தத: |
க்ஷேத்ரம் வாராணஸீ புண்யம்
முக்திதம் ஸம்பவிஷ்யதி ||

கங்கா நதிக்கரையில் காசியில் மட்டும் 64 ஸ்நான கட்டங்கள் உள்ளன.

சங்கரர் தாம் தங்குவதற்குத் தேர்ந்து எடுத்த மணிகர்ணிகா கட்டத்தின் மகத்துவத்தையும் நாம் சற்று பார்ப்போம்.

கங்கை பூவுலகில் ஓடத் தொடங்குவதற்கு முன்னாலேயே நடந்த சம்பவம்.

கங்கை தரையில் பாயத் தொடங்கும் முன்னரே காசி க்ஷேத்திரத்தை வந்து அடைந்து விட்டார் விசுவநாதர்.

மஹாவிஷ்ணுவும் காசியில் தங்கி தவம் செய்ய நினைத்தார்.

தனது ஸ்நானத்திற்கென இங்கு ஒரு புஷ்கரிணியைத் தோற்றுவித்திருக்கிறார்.

சக்ரபுஷ்கரிணி தீர்த்தம் என்று இதற்குப் பெயர். இதைக் காண வந்த விசுவேச்வரர் மகிழ்ச்சியால் தலையை ஆட்ட, காது குண்டலமும் ஆடியிருக்கிறது.

அப்போது குண்டலத்து மணி ஒன்று அறுந்து புஷ்கரிணியில் விழுந்து விட்டது.

இதனால் சக்ரபுஷ்கரிணி மணிகர்ணிகா என்ற பெயர் பெற்றது.

பின்னாளில் இவ்விடத்தில் கங்கை பாய்ந்தவுடன் மணிகர்ணிகா தீர்த்த கட்டத்திற்கு இரட்டிப்பு மஹிமை.

அதனாலேயே ஸத்யலோகத்தவர்களும் கூட மணிகர்ணிகா ஸ்நானத்திற்கு ஆசைப்படுகிறார்களாம்.

இங்கு மரணம் சம்பவித்தால் மங்களமாம். வாழ்க்கை வெற்றியுடையதாம். இந்த மணிகர்ணிகாவுக்கு எதிரே சொர்க்கமும் துரும்பாம்.

காசி காண்டம் என்ற நூல் மணிகர்ணிகாவின் புகழ் பாடும் அழகைக் காண்போம்.

மரணம் மங்களம் யத்ர
ஸபலம் யத்ர ஜீவிதம்
ஸ்வர்கஸ் த்ருணாயதே
யத்ர ஸைஷா ஸ்ரீ மணிகர்ணிகா

மஹா ச்மசானம் என்று கூறப்படும் பெரும் சுடுகாடு மணிகர்ணிகா கட்டத்தில் தான் இருக்கிறது.

இந்த கட்டத்தில் நீராடி மௌனமாகச் சென்று ஸ்ரீ விசுவநாதரை தரிசித்தால் எல்லா விரதங்களையும் சாங்கோபாங்கமாக அனுஷ்டித்த பலன் கிட்டுமாம்.

பண்டித ராஜதானியான காசியில் மணிகர்ணிகா கட்டத்தில் தங்கி குருநாதர் ஆணைப்படி பாஷ்யம் எழுதத் தொடங்கினார் சங்கரர்.

எல்லா ஸம்ப்ரதாயங்களைச் சேர்ந்த பண்டிதர்களையும் நேரில் சந்தித்து விவாதம் புரியவும் சங்கரருக்கு காசி வாஸம் ரொம்ப உபயோகமாக இருந்தது.

முக்தி மண்டபத்தில் தினசரி உபந்நியாஸம் செய்யத் தொடங்கினார்.

ஐம்பத்தாறு தேசத்துப் பண்டிதர்களும் காசியில் சங்கரரது உபந்நியாஸத்தைக் கேட்டார்கள். பலரும் அவரது மேதாவிலாஸத்தாலும், ப்ரம்ம ஞானத்தாலும் கவரப்பட்டு அவருக்கு சிஷ்யர்கள் ஆனார்கள்.

சிலர் தாங்கள் சங்கரரிடமிருந்து தெரிந்து கொண்டதைத் தங்கள் தங்கள் ஊருக்குப் போய்ப் பிரசாரம் செய்தார்கள். சங்கரரது அத்வைதக் கொள்கைகள் நாடெங்கும் பரவியதோடு, அவரது புகழும் எங்கும் பரவியது.

தனது பெரும்பாலான நேரத்தை பாஷ்யங்கள் எழுதுவதில் செலவழித்தார் சங்கரர்.

நாள்தோறும் வேதாந்த பாடமும் நடைபெற்றது.

காசி நகரத்துப் பண்டிதர்கள் யாவரும் சங்கரரின் வாதத் திறமையையும் சொல்லாற்றலையும் கண்டு பிரமித்துப் போயினர்.

சங்கரர் தொடங்கி பிற்காலத்தில் வந்த எல்லா ஆசார்யர்களுமே ப்ரஸ்தான த்ரயம் என்று கூறப்படும் வேதாந்த ஆதார நூல்களான உபநிஷதங்கள், பகவத்கீதை, ப்ரம்மஸூத்ரம் ஆகிய மூன்று க்ரந்தங்களுக்குமே தத்தம் போக்கில் பாஷ்யங்களை எழுதினர்.

வேதாந்த மரபினில் ஆதார நூல்களாக ஏற்கப்படும் இவற்றை சைவ சித்தாந்திகள் யாவரும் ஏற்பதில்லை.

தசோபநிஷதங்கள் எனப் புகழப்படும் ஈச & கேன & கட முதலான பத்து உபநிடதங்களுக்கும் சங்கரர் பாஷ்யம் எழுதினார்.

மாண்டூக்ய காரிகை என்ற கௌடபாதரின் நூலுக்கும் பாஷ்யம் செய்திருக்கிறார்.

சங்கரரது பாஷ்யங்களில் ஸித்தாந்த ரீதியான ஆராய்ச்சி, வாதங்கள், எதிர்வாதங்கள் என்று எல்லாமே விஸ்தாரமாக இருக்கும்.

ப்ரகரண க்ரந்தங்களில் ஸித்தாந்த வாதமாக அதிகம் இல்லாமல் தத்துவங்களை பளிச் பளிச்சென்று மணிமணியாகக் கொடுத்திருக்கும்.

ஆசார்யாளின் (இனி சில இடங்களில் சங்கரரைக் குறிக்கும் வார்த்தையாக ஆசார்யாள் என்ற பதத்தைப் பயன்படுத்துவேன்)

ப்ரகரண க்ரந்தங்களாக, விவேக சூடாமணி, உபதேச ஸாஹஸ்ரீ, ஜீவன் முக்தானந்த லஹரீ, தன்யாஷ்டகம், யதி பஞ்சகம், ஆத்மபோதம் என்பவை சிலாகிக்கத் தக்கவையாகும்.

இந்த ப்ரகரண க்ரந்தங்களில் சில காசி வாசத்தின் போதும் சில பின்னாளில் யாத்திரை காலத்திலும் இயற்றப்பட்டன.

பாஷ்யங்கள் உரைநடையில் அமைந்தவை. ஆனால், ப்ரகரண க்ரந்தங்களில் சில உரைநடையிலும், சில கவிதை வடிவிலும் அமைந்துள்ளன.

சங்கரரை நாடி வந்த சிஷ்யர்களில் சிலர் அவருடன் கூடவே தங்கி என்றென்றைக்கும் அவருக்குத் தொண்டு புரியும் எண்ணங் கொண்டனர்.

## பத்ம பாதர்

அத்தகையோரில் முதன்மையானவர் ஸனந்தனர் என்னும் சோழ தேசத்து அந்தணர் ஆவார்.

வயதில் பால்யமானவர் ஆனாலும் வேதாந்த பக்குவம் நிறைந்த ஸனந்தனரை சங்கரருக்கு மிகவும் பிடித்துவிட்டது.

சனந்தனரிடம் சங்கரர் "நீ யார்?" "எங்கிருந்து வருகிறாய்?" என்று கேட்ட கேள்விக்கு ஸனந்தனர் அத்வைத பரமாக பதில் சொல்லாமல், யதார்த்தமான பதிலையே தந்தார்.

தனக்கு லௌகீகமான ஆசைகள் ஏதும் இல்லை என்பதை ஸ்பஷ்டமாகச் சொன்னார்.

சங்கரரின் புகழ் பரவப் பரவ ஸாதாரண சங்கரராக இருந்தவர் பகவத் பாத சங்கரராகவும், ஆசார்ய சங்கர ராகவும் பல அறிஞர் பெருமக்களாலும், வேதாந்தி களாகவும் கொண்டாடப்பட்டார்.

கோவிந்த பகவத் பாதர் சங்கரருக்கு ஸந்நியாஸ தீக்ஷை வழங்கியபோது, ஸந்நியாஸ நாமம் என்று எதனையும் சூட்டவில்லை.

எனவே ஸந்நியாஸ ஆசிரமத்திலும் சங்கரர், சங்கரர் எனவே அழைக்கப்பட்டார்.

அந்தப் பாரம்பரியத்தில் சங்கரர் ஏற்படுத்திய பீடங்களை அலங்கரிக்கும் யாவருமே தங்களது ஸந்நியாஸ நாமத்திற்கு முன்பாக "ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சாரிய" என்று சேர்த்துக் கொள்ளும் மரபு இன்றும் உளது.

ஸனந்தனர் ஆசாரியருக்கு ஸேவை செய்து வந்த காலத்தில் ஒரு நாள் அதிசயமிக்க செயல் ஒன்று நிகழ்ந்தது.

ஆசார்யர் கங்கைக்கு இக்கரையிலும் ஸனந்தனர் அக்கரையிலுமாக இருந்தார்கள். ஆசார்யரின் வஸ்த்ரங் களைக் காயப் போட்டுக் கொண்டிருந்தார் ஸனந்தனர்.

இக்கரையில் இருந்த சங்கரர் அக்கறையிலிருந்த சிஷ்யரிடம், "காய்ந்த வஸ்த்ரம் கொண்டு வா," என்றார்.

ஆசார்யன் சொன்னதை உடன் பண்ணியாக வேண்டும் என்ற பக்தி வேகம் ஸனந்தனருக்கு வந்து விட்டது. ஆசார்யாள் சொட்டச் சொட்ட ஈரக் காஷாயத் தோடு நிற்கிறாரே என்று அவருக்கு மனது துடித்தது.

ஆவேசமாக அன்பு பக்தி வந்து விட்டால் அங்கே அறிவுபூர்வமான யோசனை எல்லாம் நிற்காது. அதனால் படகு பிடித்துக் கொண்டு போக வேண்டும் என்று ஸனந்தரால் காத்துக் கொண்டிருக்க முடியவில்லை.

எதிரே, அத்தனை பெரிசாக, ஆழமாக அலை வீசிக் கொண்டு கங்கா நதி என்று ஒன்று இருப்பதே அவருக்குத்

தெரியவில்லையே! அப்பறம் படகைப் பற்றி எப்படி நினைப்பார்?

குருவின் ஆக்ஞை மட்டுமே அவர் சிந்தையில் வியாபித்து இருந்தது.

அதனால் எதிரே ஏதோ ஸமபூமி, கட்டாந்தரை இருக்கிறதுபோல அவர் பாட்டுக்கு கங்கையில் ப்ரவாஹத்தில் இறங்கி நடக்க ஆரம்பித்து விட்டார்.

கங்கையின் ஆழத்தில் மூழ்கிப் போவோமே, முழுகாமல் நீந்தினால் கூட குருநாதருக்காகத்

தான் எடுத்துச் செல்லும் வஸ்த்ரம் நனைந்து போய் குருநாதர் இட்ட கட்டளையின் நோக்கமே கெட்டுப் போய்விடுமே என்பது எதுவும் அப்போது அவருக்குத் தெரியவில்லை.

அப்போது ஒரு அதிசயம் நடந்தது. ஸநந்தனர் நீரில் அடி எடுத்து வைத்த இடங்களில் தாமரைப் பூ ஒன்று மலர்ந்தது. அவர் பாதத்தைத் தாங்கியது. தாமரைப் பூவால் ஒரு பாலம் போட்டது போல இக்கரையில் இருந்து அக்கரை வரை அவர் நடந்த பாதையில் தாமரைப் பூக்கள்.

ஆனால், அவருக்கோ இந்த அதிசயச் செயல் நிகழும் ப்ரக்ஞைகூட இல்லை.

அக்கரையிலும் இக் கரையிலும் நின்று கொண்டிருந்த எல்லோரும் இதனைக் கண்டு வியந்து அவருடைய குரு பக்தியைப் புகழ்ந்து கொண்டிருக்கும் போதே, இப்படி அந்தப் பெரிய நதியைத் தாண்டி இக்கரைக்கு வந்து குருவினிடத்தில் வஸ்திரத்தை ஸமர்ப்பித்தார்.

"எப்படியப்பா நீ கங்கையைத் தாண்டி வந்தே?" என்று ஆச்சார்யாள் வேடிக்கையாகக் கேட்டார்.

"தங்களை ஸ்மரித்தால் கடக்க முடியாத ஸம்ஸார ஸாகரமே முழங்கால் மட்டும் ஜலமாகிவிடும். அப்படி யிருக்கத் தாங்களே வாயைத் திறந்து ஆணை பிறப்பித்திருக்கையில் நான் கங்கையைத் தாண்டினது என்ன அதிசயம்?" என்றார்.

அப்புறம்தான் ஆசார்யாளே அவருக்கு கங்கையில் தாமரை மலர்கள் பூத்திருப்பதைக் காட்டி,

அந்த பத்மங்கள் இவருடைய பாதத்தை

தரித்ததால் இவருக்கு "பத்மபாதர்" என்ற பெயரை சூட்டினார்.

பூர்வாசிரமத்தில் ஸனந்தனராக இருந்தவர் ஸந்நியாஸ ஆசிரமத்தில் பத்மபாதர் ஆனார் எனவும் கொள்ளலாம்.



"தினமும் வேதத்தை அத்யயனம் செய்; அதில் கூறப்பட்டுள்ள கர்மங்களைச் செய்; உன் கடமைகளைச் செய்வதன் மூலம் இறைவனை வழிபடு; ஆசைகளை நிறைவேற்றிக் கொள்ள உதவும் சடங்குகளைச் செய்யும் எண்ணத்தைக் கைவிடு; பாபக் கூட்டங்களை அறவே ஒழித்துவிடு; உலக வாழ்க்கையில் காணப்படும் இன்பங்களின் குறைபாடுகளை நன்கு யோசித்துப் பார்; ஆத்மாவை அறிவதில் ஆசை கொள்; விரைவில் வீட்டைத் துறந்து செல்; ஆன்ம ஞானி ஒருவரை உனது குருவாக ஏற்றுக்கொள்; அவரது தாமரைத்தாள்களுக்கு சேவை செய்; ஆத்மஞானம் அருளும்படி அவரிடம் வேண்டிக் கொள்".



அத்தியாயம் - 12

# புலையன் புகட்டிய பாடம்

ஒரு நாள் சங்கரர் வழக்கம்போல புனித கங்கையில் நீராடி விட்டுத் தமது சீடர்களுடன் தமது இருப்பிடம் நோக்கித் திரும்பி வந்து கொண்டிருந்தார்.

காசி நகரத்தின் குறுகலான சந்துகளில் ஒன்றில் அவர் கடந்து வந்து கொண்டிருந்த அவ்வேளையில் எதிர்திசையி லிருந்து புலையன் ஒருவன் வந்து கொண்டு இருந்தான்.

அருவருப்பான தோற்றத்துடன் கூடிய அவன் கம்பீரமாக நடந்து வந்தான். அவனது தோளில் கள்ளுக் கலயம் ஒன்று இருந்தது. கைகளில் நான்கு நாய்களைக் கயிற்றினால் கட்டிப் பிடித்துக் கொண்டிருந்தான்.

சங்கரருக்கு மிக நெருக்கமாக எதிரில் வந்த அவனிடம் சங்கரர், "சற்றே விலகிச் செல்" என்றார்.

அத்வைதத்தை அறிவுப்பூர்வமாக வாதிட தெரிந்து வைத்திருந்த சங்கரர் அநுபவத்தில் அத்வைதத்தைக் கடைப்பிடிக்காமல் தமது பரம்பரையில் காலங்காலமாக கடைப்பிடிக்கப்பட்டு வந்த ஆசாரத்தின் காரணமாக, பூர்வ ஆசிரம வாஸனையின் காரணமாக, புலையன் ஒருவன்

தனக்கு மிக அருகில் வந்ததை விரும்பாமல் அவனை விலகிச் செல்லும்படி கூறினார்.

அத்வைதத்தை நாடெங்கிலும் பரப்பி வேதாந்தக் கருத்துக்களை நிலைநாட்ட நினைத்திருந்த அவருக்குச் சரியானதொரு பாடம் கற்பித்துத் தாம் பரப்ப இருந்த அத்வைத தத்துவத்தைத் தாமே கடைப்பிடிக்க செய்வதே இந்நிகழ்ச்சியின் தாத்பர்யம்.

எனவே, எதிரில் வந்த புலையன், "துறவியே! எதை எதிலிருந்து விலகிப் போகச் சொல்கிறீர்கள்? உங்கள் உடலை விட்டு என்னுடைய உடல் விலக வேண்டுமா? இவ்விரண்டு சரீரங்களுமே அன்னமய கோசம் தானே?

இரண்டு சரீரங்களுமே வெறும் எலும்பும், மாமிசமும், ரத்தம், நரம்பு, மல, மூத்ராதிகளோடு கூடியவை.

எதற்காக ஒன்று மற்றொன்றிலிருந்து விலகிச் செல்ல வேண்டும்?

ஆன்மாவை விலகிப் போகச் சொன்னீர்களா? எனக்குள்ளும் உங்களுக்குள்ளும் இருக்கும் சைதன்யம் இரண்டல்லவே. இரண்டும் ஒன்றுதானே. எதிலிருந்து எது விலகுவது? எங்கிருந்து எங்கு விலகும்?

ஞானியான தாங்கள் தயவு செய்து எனக்கு விளங்க வைக்கவும்," என்று வினயமாகக் கேட்டான்.

அவன் கேட்டது இதோ:

அந்நயமயாத் அந்நமயம் அதவா
சைதன்யமேவ சைதன்யாத்
த்விஜவர தூரீகர்தும் வாஞ்சஸி
கிம் ப்ரூஹி கச்ச கச்சேதி

ஒன்றும் பேசாமல் இருந்த சங்கரரிடத்து அவன் மேலும் கூறலானான்.

தாங்கள் மற்றவர்க்கு உபதேசிக்கும் வேதாந்தம் கூறுவது என்ன?

ஆத்மா அழிவற்றது; களங்கப்படுத்த முடியாதது என்று கூறுகிறது. அதை அறிவுப்பூர்வமாக தெரிந்து

வைத்திருக்கும் தாங்கள் அநுபவரீதியாக அதை உணராமல் வேற்றுமை பாராட்டுவது ஏன்?

மற்ற துறவிகளைப் போல உள்ளத்தே ஞான சூனியமாய், வெளியே பொய் வேடம் பூண்டு ஒழுகும் மித்யாசாரி அல்லவே நீ?

ப்ராம்மணன் என்றும் புலையன் என்றும் வேறு படுத்திப் பார்ப்பது ஸமதரிசிகளான ஞானிகளுக்கு அழகல்லவே.

சங்கரர் மௌனமாய் இருக்கக் கண்ட அந்தப் புலையன் மேற்கொண்டு பேசினான்.

சூர்யனின் பிம்பம் எனது கலயத்தினுள்ளிருக்கும் கள்ளிலும் தென்படுகிறது; கங்கா நதி ஜலத்திலும் அது தெரிகிறது.

இங்கு ஸூர்யன் பரமாத்மா. அதன் பிரதி பிம்பம் ஜீவாத்மா. அந்த ஜீவாத்மா எந்த உடலில் இருந்தாலும் ஒன்றுதானே.

அது போலவே தங்கக் குடத்திலே உள்ளே இருக்கிற ஆகாசமும், இந்த என்னுடைய கள் கலயத்தின் உள்ளே இருக்கிற ஆகாசமும் இந்த இரண்டுக்கும் வெளியே வியாபித்திருக்கிற ஆகாசமும் ஒன்றுதானே.

ப்ராம்மணன் சரீரமோ, புலையன் சரீரமோ எதுவானாலும் அது குடத்தைப் போல. உள்ளே இருக்கிற ஆத்மாகாசத்தில் என்ன வேறுபாடு?

அவன் கூறியவற்றையெல்லாம் சிரத்தையுடன் செவிமடுத்த சங்கரர் அந்தப் புலையனின் காலடியில் வீழ்ந்து வணங்கினார்.

ஐந்து சுலோகங்கள் சொல்லி அவனுக்கு நமஸ்காரம் செய்தார்.

அதற்கு 'மநீஷா பஞ்சகம்' என்று பேர்.

மநீஷா என்ற வார்த்தைக்கு தீர்மானமான அபிப்ராயம், நிச்சயமான கொள்கை என்று அர்த்தம்.

**சாண்டாளோஸ்து ஸது த்விஜோஸ்து**
**குருரித்யேஷா மநீஷா மம**

ஆத்மஞானியாயுள்ளவர் சண்டாளனாக இருந்தாலும் சரி, ப்ராம்மணனாக இருந்தாலும் சரி, அவரே எனக்கு குரு, இதுவே எனது முடிந்த முடிவு.

❖ "விழிப்பு நிலையிலும், கனவு நிலையிலும், உறக்க நிலையிலும் எந்த ஏக ஆத்மா சிறப்புற விளங்கிக் கொண்டிருக்கிறதோ, எது ப்ரம்மா முதல் எறும்பு ஈறாக உள்ள எல்லா உடல்களாகவும் தோற்றம் காண்கிறதோ, இவ்வுலகில் பற்றில்லாமல் சாட்சி மாத்திரமாக எல்லாவற்றையும் நோக்கிக் கொண்டிருக்கிறதோ அந்த ஏக ஆத்மாவே நான்," என்று உறுதியான புத்தியைக் கொண்டிருக்கும் ஒருவன் யாராக இருந்தாலும், அவன் ப்ராம்மணனோ அல்லது சண்டாளனோ அவனே எனது குரு என்பது எனது தீர்மானமான கொள்கை.

❖ "நான் ப்ரம்மமே; இந்த உலகம் யாவும் மனம் கற்பித்துப் பரப்பும் தோற்றந்தான். ஸத்வ, ரஜோ, தமஸ் ஆகிய முக்குணங்களால் தோன்றிய கற்பனையே நான் காணும் பல்வேறு வடிவங்கள்" என்பதில் எவன் உறுதியான சிந்தனையோடு பரமானந்தமான அழிவற்ற மேலான தூய நிலையில் உள்ளானோ அவன் வேதியன் ஆனாலும் அல்லது புலையன் ஆனாலும் அவன் எனக்கு குரு ஆவான். இதுவே எனது முடிந்த முடிவு

❖ இந்த ப்ரபஞ்சம் முழுவதுமே தோன்றுவது போலவும், பின்னர் மறைவது போலவும் நாம் காண்பது எல்லாம் அஞ்ஞானத்தினாலேயே. அந்த உண்மையை குரு மூலமாக உணர்ந்து இயல்பான சாந்த உள்ளத்தினனாக எவன் எப்போதும் ப்ரம்மத்தில் நிலை பெற்று இருக்கிறானோ; ஞானத்தீயில் தனது பூர்வஜன்ம கர்மாக்களைச் சுட்டுப் பொசுக்கி, வரவிருக்கும் வினைப்பயனும் தன்னை பாதிக்காதவாறு, ப்ராரப்த வசத்தால் வந்த இந்த உடல் நீங்கும் வரை தபஸ் மேற்கொண்டு ஞானத்தில் நிலை பெற்றிருப்பவன் எவன் ஆனாலும் அவனே எனது குரு என்பது என் உறுதியான எண்ணம்.

❖ விலங்குகளும், மனிதரும், தேவர்களும், மற்றுமுள்ள ஜீவன்களும் எதை 'அஹம்' என்று பிடிப்பாகக் கொள்கின்றனரோ, எந்த ஆத்ம ப்ரகாசத்தால் இதயமும், கண்ணும், உடலும் விளக்கமுற்று விஷயங்கள் அறிகின்றனவோ, மேகம் ஸூர்யனை மறைத்திருப்பதை அந்த ஸூர்ய ஒளியால் அன்றோ நாம் காண்கிறோம். அதுபோல மாயத் தோற்றமும், மாயையும், ப்ரம்மமும் ஒன்றே என்ற நிலைப்பாடோடு ஆத்மானந்தத்தில் மூழ்கி ப்ரம்மஞானியாகத் திகழ்பவன் யாரானாலும் அவனே எனது குரு. இது எனது தீர்மானமான கொள்கை.

❖ ஒரு திவலை ஆனந்தத்தால் இந்திராதி தேவர்கள் எல்லோரும் ஆசைகள் நிறைவேறியவர்கள் ஆகின்றனர். தனது சித்த விருத்திகளை நிக்ரஹம் செய்து பேரமைதியில் நிலை பெறும் ரிஷிகள் பூரணத்தை உணர்கிறார்கள். அப்படிப்பட்ட சிதானந்தமே தான் என்று உணர்ந்து ப்ரம்மத்தோடு ஒன்றி விடுகிறவன் எவனோ அவனே இந்திரனும் வணங்க வேண்டியவன். இதுவே எனது தீர்மானமான முடிவு.

## இந்த மனீஷா பஞ்சக சுலோகங்களின் தாத்பர்யம் என்ன?

ஒருவன் பிறந்த குலத்தையும், அவனது தோற்றத்தையும் கொண்டு ஒருவனை எடை போடக் கூடாது. அவனது ஞானத்தைக் கொண்டே அவனை மதிப்பிட வேண்டும் என்பதே ஆதிசங்கரர் உலகிற்குச் சொல்லிய உபதேசம்.

உலகில் ஏற்றத்தாழ்வுகளே இல்லையா, உயர்ந்தவன், தாழ்ந்தவன் என்பது இல்லையா என்றால் இந்த பேதங்களை எங்கு அனுஷ்டிக்க வேண்டும், எப்படி அனுஷ்டிக்க வேண்டும் என்கின்ற நடைமுறை ஞானம் கொண்டிருந்தால் புரிந்துவிடும்.

உலகில் நாம் காணும் வேறுபாடுகள் செயல்களின் காரணமாக அமையலாம்; பதவிகளின் காரணமாக

அமையலாம்; பணம், காசு, அந்தஸ்தின் காரணமாக அமையலாம்.

எது நாள் வரை இந்த உலகியலில் நாம் உழல்கிறோமோ அதுநாள் வரை இந்த பேதங்கள் இருந்தே தீரும்.

சாக்கடைக் கழிவு நீரை சுத்தம் செய்யும் ஒருவனது உடலில் அந்தச் செயலில் அவன் ஈடுபட்டிருக்கும் போது நிச்சயம் அசுத்தம் இருக்கும். அப்போது தூய உடை அணிந்து அலுவலகம் செல்லும் ஒருவன் அவன் மீது உரசிக் கொண்டு போக விரும்ப மாட்டான். அப்போது அவன் மீது அவன் பட்டுவிடக்கூடாது என்று நினைப்பது தீண்டாமைக் குற்றமல்ல.

முதலமைச்சராக இருப்பவர் ஏ.ஸி. அறையில் உயர்ந்த ஆசனத்தில் அமர்ந்து இருப்பார். அதே கட்சியின் சாதாரணத் தொண்டன் ஒருவனை அவர் பியூனாக நியமித்து இருந்தால் அவன் அறை வாசலில் ஒரு ஸ்டூலில்தான் அமர்ந்திருக்க வேண்டும். இந்த வேறுபாடு இருந்தே தீரும்.

ஒரு ஆலையில் இயந்திரங்களை இயக்குகிற தொழிலாளிக்குக் குறைவான சம்பளம்; ஆனால், கடுமையான உழைப்பு. அதே ஆலையின் மேலாளருக்கு ஏ.ஸி. அறையில் மென்மையான உழைப்பு. ஆனால், அதிக சம்பளம். இந்த வேறுபாடு இருந்தே தீரும்.

ஒரு அரங்கில் சொற்பொழிவாற்றுபவர் மேடையில் உயர்ந்த ஆஸனத்தில் அமர்ந்திருக்க அவரது உரையைக் கேட்பவர்கள் தரையில் கீழே அமர்ந்திருப்பார்கள். இதுவும் ஒருவிதமான ஏற்றத்தாழ்வே. இதுவும் இருந்தே தீரும்.

ஒரு குடும்பத்திலேயே அனைவருமே ரத்த ஸம்பந்தமுள்ள சமமான உறுப்பினர்கள் என்றாலும் தாய், தந்தையரிடம் நான் காட்டும் மரியாதையை எனது தம்பி, தங்கைகளிடத்தில் காட்ட முடியாது.

குரு சிஷ்யன் ஆகிய இருவருமே ப்ரும்ம ஞானிகள் ஆனாலும் குருவுக்குச் சமமான ஆஸனத்தில் அவருக்குப் பக்கத்திலோ, அவர் தோள் மீது கைப் போட்டுக் கொண்டோ சிஷ்யன் இருக்க முடியாது.

இந்த வேறுபாடுகள் இருந்தாலும் ஒவ்வொருவரும் மனதில் மற்றவர்களையும், நம்மைப் போன்ற பரமாத்ம ஸ்வரூபங்களே என்ற ஞானத்தைக் கொண்டு அனைவரிடமும் அத்யந்த அன்பு காட்ட வேண்டும். அன்பே சிவம். இதுவே ப்ரம்ம ஞானம்.

எவ்வளவு பெரிய ஞானியாக இருந்தாலும் வ்யவஹார ரீதியில் வேறுபாடுகளைக் காண்பது யதார்த்தமான ஒன்று.

அந்தப் புலையனிடத்தில் இருந்த ப்ரும்மஞானத்திற்கு மதிப்பு அளித்து அவன் காலில் விழுந்து நமஸ்கரித்து அவனை குருவாக ஏற்றார் என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும்.

ப்ரும்மஞானியாக இருப்பதற்கு, ஜாதியோ, தொழிலோ இடையூறாக இருக்க முடியாது.

மஹாபாரதத்தில் வரும் தர்ம வியாதன் கசாப்புக் கடைக்காரனாக இருந்தபோதும் ஞானியாகத் திகழ்ந்தான்.

வ்யவஹார ரீதியாக கள் குடம் சுமந்து, நாய்களை ஓட்டிக் கொண்டு வரும் குளிக்காத, அழுக்கான, துர்நாற்றம் வீசும் உடலைக் கொண்ட மனிதனிடமிருந்து ஆசாரமானவன் நிச்சயம் விலகியே இருக்க ஆசைப்படுவான். இதுவும் வ்யவஹாரிக ஸத்யம் என்பதை உணர வேண்டும்.





அத்தியாயம் - 13

# வியாசர் வந்தார்

ப்ரும்ம ஸூத்ரத்திற்கு முதன் முதலில் பாஷ்யம் செய்தவர் சங்கரர். தனது ஸூத்ரத்திற்கு சங்கரர் செய்த பாஷ்யத்தை அவரோடு விவாதித்து அவரது ஒப்பற்ற ப்ரம்ம ஞானத்தையும், பாஷ்யம் எழுதுவதில் அவருக்கு இருந்த ஆற்றலையும் உலகறியச் செய்யும் நோக்கம் கொண்டார் வ்யாஸர்.

வயோதிக ப்ராம்மணர் வடிவத்தில் சங்கரர் சிஷ்யர்களுக்குப் பாடம் நடத்திக் கொண்டிருந்த வேளையில் அவரது ஆசிரமத்துக்கு வந்தார்.

"தாங்கள் வியாஸரின் ப்ரம்ம ஸூத்ரத்திற்கு பாஷ்யம் எழுதியிருப்பதாக கேள்விப்பட்டேன். நானும் அந்த ஸூத்ரத்தை நன்கு படித்திருக்கிறேன். தங்களது பாஷ்யம் என் மனதில்பட்ட கருத்துக்களுக்கு ஒத்து வருகிறதா? என்று பார்க்க வந்தேன்," என்று கூறினார்.

ப்ரம்ம ஸூத்ரம் என்பது 555 ஸூத்ரங்களைக் கொண்டது. இவைகள் நான்கு அத்யாயங்களாக பிரிக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு அத்தியாயமும் நாலு பாதங்களைக் கொண்டது. எல்லாவற்றிலுமாக மொத்தம் 192 அதிகரணங்கள் உள்ளன.

இதனில் ததந்தர ப்ரகரணம் என்பது மூன்றாவது அத்தியாயத்தில் உள்ளது.

இந்த அத்தியாயத்தில் ஆத்ம விசாரணை பற்றிக் கூறப்படுகிறது.

ஒருவன் தன் உடலை உகுத்த பின்னர் ஜீவனது யாத்திரையை விவரிக்கும் பகுதிதான் ததந்தர ப்ரகரணம். தனது சந்தேகங்களை மிகவும் குழப்பமான கேள்விகளாக்கி சங்கரர் மீது சரமாரியாக தொடுத்தபோதும் தெளிவாகவும், விரிவாகவும் சாந்தநிலை மாறாமலும் வாதிட்டார் சங்கரர்.

இந்த கேள்வி — பதில் விவாதம் பல நாட்கள் நடந்தது.

அருகில் இருந்து விவாதத்தை ரசித்து ருசித்துக் கொண்டிருந்த சிஷ்யர் பத்மபாதருக்கு வந்திருப்பவர் ஒரு ஸாதாரண வயோதிக ப்ராம்மணர் அல்ல என்பது புரிந்துவிட்டது.



வந்திருப்பவர் வியாஸரே என்பதை அறிந்து கொண்டு

**சங்கர: சங்கர: ஸாக்ஷாத்**
**வ்யாஸோ நாராயண: ஸ்வயம்**
**தயோர் – விவாதே ஸம்ப்ராப்தே**
**கிங்கர: கிம் கரோமி அஹம்?**

சங்கர பகவானும் ஸாக்ஷாத் நாராயண ஸ்வரூபமான வியாஸரும் விவாதம் புரியும்போது சாதாரண தொண்டனான நான் என்ன செய்வது? என்ற பொருளில் அமைந்த மேற்கண்ட சுலோகத்தைக் கூறி இருவரையும் நமஸ்கரித்தார்.

"குதர்க்க வாதமானாலும் சரி, நேர்மையான வாதமானாலும் சரி, இரண்டையுமே பூர்வ பக்ஷமாகக் கூறி அத்தனைக்கும் பதில் சொல்லும் விதத்தில்தான் பாஷ்யம் அமைந்திருக்கிறது. இந்த பாஷ்யத்திற்கு என் பூரண அங்கீகாரம் உண்டு," என்றார்.

தனது குருநாதர் பணித்தபடி தான் பாஷ்யம் எழுதி அது வியாஸராலேயே அங்கீகரிக்கப்பட்ட பின்னர் தமது வாழ்வில் லக்ஷியம் நிறைவேறி விட்டதாக நினைத்தார் சங்கரர்.

அப்போது சங்கரருக்கு பதினாறு வயது நிறைந்திருந்தது. வாழ்வின் அடுத்த பதினாறு ஆண்டுகளுக்கான பணியை வியாஸரே கூறினார்.

"உரை எழுதியதோடு உங்கள் பணி நிறைவு பெறவில்லை. அத்வைத வேதாந்தம் நாடெங்கும் பரவ வேண்டும். பூர்வ மீமாம்ஸகர்களது பணி தங்களது உத்தர மீமாம்ஸ ப்ரச்சாரத்தாலேயே முழுமை அடையும். தவறான மத மார்க்கங்களிலிருந்து மக்களை மீட்டு அவர்கள் ஆன்ம உய்வடைய தாங்கள் சரியான வழியைக் காட்ட வேண்டும்.

தங்களது தரிசனத்தாலேயே பலரும் ஸத்கதி அடைய வேண்டும். குறைந்த ஆயுளில் நிறைய திக்விஜயம் செய்தவராக பாரத தேசம் முழுவதும் தாங்கள் சுற்றி வர வேண்டும். இதுவே எனது ஆக்ஞை."

பூர்வாச்சார்யரின் ஆணையைச் சிரமேற்கொண்டு செயல்படத் தொடங்கினார் சங்கரர்.

சங்கரரது வாழ்வின் முற்பகுதியில் அவரது காசிவாஸத்தின் போது நடந்த முக்கிய நிகழ்வுகள் ஆவன;

1. ப்ரஸ்தான த்ரய பாஷ்யம் செய்தது; பாஷ்யத்தை உபதேசம் செய்தது.

(சங்கரர் பாஷ்யம் செய்தது பத்ரிகாசிரமத்தில் என்றும் அங்கேதான் வியாஸர் சங்கரரைப் பரிசோதித்தார் என்றும் மாதவீய சங்கர திக் விஜயம் கூறுகிறது)

2. பின்னாளில் சங்கரர் நிறுவிய மடங்களில் ஒன்றுக்குத் தலைமை ஏற்கப் போகும் பத்மபாதர் சங்கரரிடம் சிஷ்யர் ஆனது.

3. மனீஷா பஞ்சகம் இயற்றியது.

4. வ்யாஸர் வந்து பரீக்ஷை நடத்தி பாஷ்யத்தை அங்கீகரித்ததோடு அவர் வாழ்வில் இனியும் செய்ய வேண்டிய பணிகளைச் சொல்லிவிட்டுப்போனது.







அத்தியாயம் - 14




# குமரில பட்டரும் சங்கரரும்

தனது அத்வைத சித்தாந்தத்தை நிலைநாட்டவும், தாம் எழுதிய பாஷ்ய நூல்களை அறிஞர்கள் ஏற்கச் செய்யவும் விஜய யாத்திரை ஒன்று அவசியமாயிற்று.

வியாஸர் வந்து சென்ற பின் காசியிலிருந்து ப்ரயாகை நோக்கிப் பயணமானார் சங்கரர்.

ப்ரயாகையில்தான் அக்காலத்தில் பிரபலமான பூர்வ மீமாம்ஸ ப்ரவர்த்திகரான குமரில பட்டர் வாழ்ந்து வந்தார். அவர் ஒரு சிறந்த வேதவித்து என்பதை அறிந்திருந்ததால் அவரை தரிசிப்பது புண்ணியம் என்று கருதியவர் சங்கரர்.

அந்த அறிஞரிடம் தான் எழுதிய பாஷ்ய நூல்களைக் காட்டி அவரது பாராட்டைப் பெறவும் விரும்பினார் சங்கரர்.

ப்ரயாகைக்கு தீர்த்தராஜ் என்ற பெயரும் உண்டு. தீர்த்தங்களின் ராஜா. இந்த தீர்த்தத்துக்கு அப்படி என்ன விசேஷம் என்றால் கங்கை, யமுனை, ஸரஸ்வதி ஆகிய மூன்று நதிகள் ஸங்கமிக்கும் தீர்த்தஸ்தலம் இது. ஒரு காலத்தில் பூமிக்கு மேலே ஸரஸ்வதி ஓடியபோது இங்கு ஸங்கமித்திருக்கிறது. இப்போது கங்கையும் யமுனையும் கூடும் கூடுதுறை இங்குள்ளது. அந்தர் வாஹிணியாக ஸரஸ்வதியும் ஸங்கமிக்கிறது.

பூமிக்கு அடியில் ஸரஸ்வதியின் நீரோட்டம் இப்போது கண்டறியப்பட்டு விட்டதால் ப்ரயாகையை த்ரிவேணி ஸங்கமம் என்று அழைக்கலாம்.

## துஷாக்னி ப்ரவேசம்

இந்த கூடுதுறையில் சங்கரர் ஸ்நானம் செய்து கொண்டிருந்தபோது அருகில் ஸ்னானம் செய்து கொண்டிருந்த சிலரது பேச்சு காதில் விழுந்தது.

குமரில பட்டர் 'துஷாக்னி ப்ரவேசம்' செய்துள்ளார் என்ற ஸமாசாரமே அது. பதறிப் போனார் சங்கரர். அவரைக் காண அவரது துஷாக்னி ப்ரவேச ஸ்தலத்திற்கு விரைந்தார்.

குமரிலபட்டர் நிலைநாட்டியிருந்த பூர்வ மீமாம்ஸ மதத்தைப் பற்றி இங்கு தெரிந்து கொள்வது நல்லது.

மீமாம்ஸ என்பதற்கு 'பூஜித விசாரம்' என்று அர்த்தம். தமிழில் சொல்வதானால் 'நல்ல விஷயத்தைப் பற்றிய விசாரணை' அல்லது ஆராய்ச்சி!

பூஜிதமான வேதத்தை விசாரித்து ஆராய்ந்து அர்த்தத்தை எடுத்துச் சொல்வது மீமாம்ஸை. மந்த்ரங்களின் தாத்பர்யம், கர்மாக்களின் விவரம், அவற்றின் உத்தேசம் ஆகியவற்றை விளக்குவது கர்ம மீமாம்ஸை யாகும். இதனைப் பூர்வ மீமாம்ஸை என்றும் சொல்வர்.

இந்த பூர்வ மீமாம்ஸ சாஸ்திரத்தின் ஸூத்ரங்களைச் செய்தவர் ஜைமினி மஹரிஷியாவார்.

ஜைமினியின் நூல் பன்னிரண்டு அத்தியாயங்களைக் கொண்டது. ஒவ்வொரு அத்தியாயத்தையும் பல

பாதங்களாகவும், ஒவ்வொரு பாதத்தையும் பல அதிகரணங்களாகவும் பிரித்திருக்கிறார். இப்படி ஆயிரம் அதிகரணங்களைக் கொண்டது இந்நூல். அதனால் பூர்வ மீமாம்ஸைக்கே 'ஸஹஸ்ராதி கரணி' என்று ஒரு பெயர் உண்டு.

இந்த நூலுக்கு பாஷ்யம் செய்தவர் சபரஸ்வாமி. சபரர் செய்த பாஷ்யம் 'சாபரம்' என்று அறியப்படுகிறது.

இதற்கு வார்த்திகம் செய்தவர் குமரிலபட்டர். அது ''பாட்ட தீபிகை'' என்று அறியப்படுகிறது.

இவரது கொள்கைகள் பாட்ட மதம் என்ற பெயரால் அறியப்படுகிறது.

குமரில பட்டரின் ப்ரதான சிஷ்யராக இருந்த ப்ரபாகரர் குமரிலபட்டருடைய அபிப்ராயத்துக்குச் சற்று வித்தியாசமாக பாஷ்யம் ஒன்று செய்திருக்கிறார்.

மீமாம்ஸகர்களில் 'பாட்ட மதத்தவர்' 'ப்ரபாகர மதத்தவர்' என இரு பிரிவினர் இருந்தனர்.

மீமாம்ஸகர்கள் வேதத்தில் சொல்லியிருக்கும் கர்மானுஷ்டானங்களுக்கு மட்டுமே ப்ராதான்யம் கொடுப்பவர்கள்.

### பூர்வ மீமாம்ஸை கூறுவது என்ன?

வேதம் விதித்துள்ள கர்மாக்களை நாம் செய்தால் அதுவே போதுமானது. வேதத்தின் ஞான காண்டப் பகுதியாகிய உபநிஷதங்கள் கூறும் ஜீவாத்ம, பரமாத்ம விஷயங்களை இவர்கள் முற்றிலுமாக நிராகரித்து விட்டனர். பகவானிடம் பக்தி என்பது தேவையற்றது.

வேத கர்மாக்களே பலன் தரவல்லவை. பலதாதா என்பதாக பகவான் ஒருவரை ஏற்க வேண்டிய அவசியம் இல்லை. ஞானம் என்பதும் தேவையற்றது.



பௌத்த மதம் கடவுளையும் விலக்கி, கர்மாக்களையும் நிராகரித் திருந்த நிலையில் வேத கர்மாக்களின்

மஹத்துவத்தை நிலைநாட்டி பௌத்தமதக் கொள்கைகளை செல்லாக் காசாக்கியிருந்தவர் குமரில பட்டர்.

## பலதாதா பகவானே

குமரில பட்டரைக காண்பதற்கு சங்கரர் துடித்ததற்கு முக்கிய காரணம் ஞானத்தையும், ஸந்நியாஸத்தையும் நிராகரித்திருந்த கர்ம மீமாம்ஸகரான குமரிலரைத் தன் வழிக்குக் கொண்டு வர வேண்டும் என்பதே.

"ஈசுவரனே பலதாதா. ஈசுவர பக்தியில்லாமல் செய்யும் கர்மாவினால் பலன் இல்லை. கர்மம் என்பது ஜடம். அது தனக்குத் தானே பலன் தந்து கொள்ள முடியாது. உலக நன்மைக்காக பகவானே வேதத்தின் மூலம் நாம் செய்ய வேண்டிய கர்மானுஷ்டானங்களை விதித்து பலன் தருகிறார்.

கர்மாவில் குறை ஏற்பட்டால் க்ஷமித்து கைதூக்கி விடவும், குறையின்றி கர்மாக்களைச் செய்யும் சக்தியையும், ச்ரத்தையையும் பெறவும் அவரையே ப்ரார்த்திக்க வேண்டும்.

நமது கர்மாக்கள் எல்லாமே பகவத் ஆராதனையாகச் செய்வதற்காகத்தான்.

கர்மானுஷ்டானத்தால் சித்த சுத்தி உண்டானபின், கர்மாவை விட்டு, ஆத்ம விசாரம் பண்ணி, தியான யோகத்தில் இறங்கி அதன் முடிவில் தான் எங்குமாக நிறைந்து ஆனந்தமாக இருக்கிற ஆத்மாவே என்று அனுபவிக்கிற போதுதான் நிறைந்த நிறைவு, பூரணத்துவம், சாசுவத சௌக்கியம் உண்டாகும்," என்ற சங்கரரின் உபதேசத்தைக் குமரிலபட்டர் ஏற்க வேண்டும் என்பதற்காகவே இந்த சந்திப்பு.

குமரிலரையே வேதத்தின் மறுபிரிவாகிய ஞான காண்டத்தையும் ஒப்புக் கொள்ள வைத்தால் தமது அத்வைத சித்தாந்தம் வலுப்படுவதோடு வைதீகக் கர்மாக்களும், ஞானமும் இணைந்து வேதங்கள்

முழுமையாக பின்பற்றப்படும் என்று கருதியே சங்கரர் குமரிலரைத் தேடி வந்தார்.

குமரிலரும் தமது இறுதி நாட்களில் சங்கரரைப் பற்றிக் கேள்விப்பட்டு அவரைக காணத் துடித்துக் கொண்டிருந்தார்.

ஆனாலும், விதி அவர் துஷாக்னி ப்ரவேசம் செய்த பிறகே சங்கரரை சந்திக்க வைத்தது.

### துஷாக்னி ப்ரவேசம் என்றால் என்ன?

"துஷம்" என்ற ஸம்ஸ்க்ருதச் சொல்லுக்கு 'உமி' அல்லது 'தவிடு' என்று அர்த்தம்.

தம்மைச் சுற்றி உமியைக் கொட்டி உடல் முழுவதையும் உமியால் மூடிக் கொண்டு அந்த உமிக்குத் தீமூட்டி மெல்ல மெல்ல அந்த உமி கருகிக் கொண்டே வர தமது உடலும் கொஞ்சம் கொஞ்சமாகக் கருகி உயிரை விடுவதே துஷாக்னி ப்ரவேசம் ஆகும்.

பெட்ரோலையோ, மண்எண்ணையையோ உடலில் ஊற்றிக் கொண்டுத் தீ வைத்துக் கொண்டால் க்ஷண நேரத்தில் கருகி உயிர் போய்விடும். உடல் வேதனை ஒரு சில நிமிடங்களுக்கே. ஆனால், உமியைக் கொண்டு உடலைக் கருக்கிக் கொண்டால் உயிர் பிரிய பல நாட்கள் ஆகும். உடல் வேதனையும் அத்தனை நாட்களுக்கும் தொடரும்.

இத்தகைய கொடிய வழிமுறையில் மரணமடையும் சித்திரவதை தண்டனையை குமரிலபட்டர் தாமாகவே ஏற்றுக் கொண்டது எதற்காக?

பாரதத்தில் வேத அனுஷ்டானங்களை வெறுத்தும் பகைத்தும் கண்டித்தும் வந்த பௌத்தர்கள் பல்வேறு அரசர்களையும் வேத மார்க்கத்திலிருந்து பௌத்த மதத்திற்கு மாற்றி வந்தனர்.

உபநிஷத்துக்களில் உபதேசிக்கப்பட்டுள்ள சைதன்ய ஸ்வரூபமான ஆத்மாவை புத்தர் ஒப்புக் கொள்ளவில்லை.

அதற்குப் பதிலாக 'சூன்யம்' என்ற வெறுமையை ஒரு தத்துவமாகக் காட்டி உபதேசித்தார். கூடவே அவர் ஈசுவர

தத்துவத்தை நிராகரித்து அப்பட்டமான நாஸ்திகப் பிரசாரங்களைச் செய்தார்.

ஒரு பக்கம் "அன்பு," "அஹிம்சை" என்று கூறிக் கொண்டு மறுபக்கம் வேத நிந்தனை, ஈசுவர நிந்தனை ஆகியவற்றில் ஈடுபட்டு அமைதியாக வாழ்ந்து கொண்டிருந்த சாமான்ய ஜனங்களின் மனத்தைக் கலைத்தார்.

தாமும் குழம்பி மற்றவர்களையும் குழம்பச் செய்தவர் புத்தர்.



அந்நிலையில் வேதமார்க்கத்தை உய்விக்க வந்த குமரிலர், வேத மறுமலர்ச்சியே தமது வாழ்க்கைக் குறிக்கோளாய் கொண்டிருந்த குமரிலர் பௌத்தர்களை வாதத்தில் வென்று தனது கொள்கைகளை நிலைநாட்டத் துடித்தார்.

அதற்கு புத்தமதக் கொள்கைகளை தெரிந்து வைத்திருக்க வேண்டும் என்ற எண்ணத்தில் பௌத்தத் துறவியைப் போல வேட மிட்டுக் கொண்டு பௌத்த மடம் ஒன்றில் சேர்ந்தார்.

ஒரு நாள் வேதத்தைக் கண்டித்து ஆசிரியர் போதித்துக் கொண்டிருந்தபோது பௌத்த ஸந்யாசி வேடத்திலிருந்த குமரிலரின் கண்களிலிருந்து கண்ணீர் பொல பொலவென்று கொட்டத் தொடங்கியது. மறுத்தும் பேச முடியாமல் ஊமையாய் உள்ளம் நொந்து போய் அழுவதைத் தவிர வேறு எதுவும் அவரால் செய்ய முடியவில்லை.

இவரது கண்களில் கண்ணீரைக் கண்ட மற்ற பௌத்த பிக்ஷுக்களுக்கு குமரிலர் மீது சந்தேகம் எழுந்தது. நாளடைவில் அவர் பௌத்த பிக்ஷு வேடம் தாங்கிய மீமாம்சகர் என்பது தெரிந்து விட்டது.

அவர்கள் குமரில பட்டரைத் தங்களது பௌத்த விஹாரத்தில் வைத்திருப்பது தங்கள் மதத்திற்கே ஆபத்தாய் முடியும் என்று கருதினர். எனவே, அவரைக் கொன்று விடுவது என்று முடிவு செய்தனர் அந்த அஹிம்ஸாவாதிகள்.

அவர்கள் அவரை நயவஞ்சகமாக பௌத்த விஹாரத்தின் ஏழாவது மாடத்திற்கு அழைத்துச் சென்று, அங்கிருந்தபடியே அவரைக் கீழே தள்ளி விட்டனர்.

''வேதங்கள் உண்மையானால் நான் உயிர் பிழைப்பேன்,'' என்று கூறியபடியே கீழே விழுந்தார் குமரிலர்.

அவரது உயிருக்கு ஊறு நேரவில்லையாயினும் அவரது கண்களில் ஒன்றில் அடிபட்டது. அவர் வேதத்தை நம்பியபோதிலும், ''வேதங்கள் உண்மையானால்'' என்று கூறியதால் அதில் சந்தேகம் தொனித்தது.

"நம்பினோர் கெடுவதில்லை; இது நான்கு மறை தீர்ப்பு" என்பது பரம ஸத்யம்.

குமரிலரோ வேதத்தைப் பரிபூரணமாக நம்பவில்லை. ஆகவேதான் கண்ணில் மட்டும் அடிபட்டது.

குருவை வஞ்சித்துக் கபட பிக்ஷுவாக நடித்து அவரை ஏமாற்றிய பாவத்திற்கும், வேதங்களின் மீது பரிபூரண நம்பிக்கை வைக்காத பாவத்திற்கும் பரிகாரம் தேடும் நிமித்தமே குமரிலர் துஷாக்னிப் ப்ரவேசம் செய்தார். என்னே அவர் தம் உயர்வு.

* * *

உடல் முழுவதும் வெந்து விட்டிருந்தாலும் முகம் மட்டும் அன்றலர்ந்த தாமரை போல் காணப்பட்ட குமரிலர் சங்கரரைக் கண்டதும் மிக்க மகிழ்ச்சி அடைந்தார்.

தமது ப்ரஸ்தான த்ரயீ பாஷ்யங்களை சங்கரர் குமரிலருக்குப் படித்துக் காட்டினார்.

பூர்வ மீமாம்ஸகரான குமரிலர் உத்தர மீமாம்ஸக ரான சங்கரரின் அத்வைதபரமான பாஷ்யங்களைக் கேட்டு மிகவும் பாராட்டினார்.

"தங்களது பாஷ்யங்களுக்கு நானே விளக்கவுரை எழுதி இந்த பாஷ்யங்களைப் பரப்பும் பணியில் ஈடுபட்டிருப்பேன். ஆனால், நான் துஷாக்னி ப்ரவேசம் செய்து உயிரை மாய்த்துக் கொள்வது என்று விரதம் எடுத்துக் கொண்டு விட்டதால் என்னால் எதுவும் செய்ய இயலவில்லை.

நான் பூர்வ ஜன்மத்தில் செய்த புண்ணியத்தின் பலனாய் தங்கள் தரிசனம் கிடைத்தது. எதற்கும் காலம் கைகூடி வரவேண்டும்.

என் வாழ்வில் நான் செய்த சில பாபங்களுக்கு ப்ராயஸ்சித்தமாகவே இக்கொடிய தண்டனையை மேற்கொண்டுள்ளேன். வேதங்கள் விதித்துள்ள கர்மாக்களையெல்லாம் செய்து பூரண வாழ்வு வாழ்ந்தவன் நான்," என்றார் குமரிலர்.

குமரிலர் தமது பாஷ்யங்களுக்கு வார்த்திகம் செய்ய விருப்பம் கொண்டிருந்ததைக் கண்ட சங்கரர் அவரை உயிர் பிழைக்க வைத்து அப்பணியை நிறைவேற்றிக் கொள்ள விரும்பவில்லை.

குமரிலர் மீண்டும் பேசினார்:

"தங்களுடைய அத்வைத வேதாந்தத்தை உலகம் முழுவதும் தெரிந்து கொண்டு கடைத்தேற வேண்டும். எனக்கு அப்படி ப்ரச்சாரம் பண்ணும் பாக்யமில்லை.

தங்களது அத்வைத வேதாந்தத்தைப பரப்பத் தகுந்த நபர் ஒருவர் இருக்கிறார். அவர் வேறுயாருமல்ல. எனது சிஷ்யர்களில் சிறந்தவரான மண்டனமிச்ரர் என்பவர்தான் அந்த மஹானுபாவர். அவர் மாஹிஷ்மதி என்ற நகரில் நிரம்பச் செல்வத்துடனும், செல்வாக்குடனும் வாழ்ந்து வரும் க்ருஹஸ்தர் ஆவார். அவரது மனைவி உபயபாரதி எனும் ஸரஸவாணியும் — சிறந்த பண்டிதை ஆவாள்.

தீவிரமான கர்ம மீமாஸ்ஸகரான அவரைத் தாங்கள் சந்திக்க வேண்டும். யாக யக்ஞாதிகளைத் தொடர்ந்து செய்து கொண்டிருக்கும் கர்ம அனுஷ்டாதா அவர்.

தாங்கள் உடனடியாக மாஹிஷ்மதி சென்று அவரோடு வாதம் புரிந்து அவரை அத்வைத வேதாந்தத்தை ஏற்குமாறு செய்து விட்டால் அவர் மூலம் தங்களது அத்வைத வேதாந்த மதம் வேகமாகப் பரவும்.

தங்கள் தரிசனத்தால் உமிக்காந்தலால் ஏற்படும் எந்தவித சரீர வேதனையையும் நான் அநுபவிக்கவில்லை. இது தங்களது ஸாந்நித்ய விசேஷத்தாலேயே என்று கருதுகிறேன். எனவே தாங்கள் எனக்கு ப்ரம்ம ஞானத்தைத் தந்து உடலை விட்டு உயிர் பிரியும் வரை இங்கேயே இருக்க வேண்டும்."

அவரது வேண்டுகோளின் படியே சங்கரரும் உயிர் பிரியும் வரை அவர் அருகிலேயே இருந்து ப்ரும்ம ஞான உபதேசம் செய்தார்.

சங்கரரின் இணையடிகளை தரிசித்துக் கொண்டே, சரீர வேதனை எதுவுமே கொஞ்சம் கூட தெரியாமல் குமரிலபட்டர் நெருப்பில் கருகி ப்ராண தியாகம் செய்தார்.

பௌத்தர்களின் சூன்ய வாதத்தை வென்று கர்மாக்களின் மேன்மையை நிலை நாட்டி, கர்மா ஒன்றே கடைத்தேற்றும் என்ற அவரது மீமாம்ஸக மத அஸ்திவாரத்தின் மீது கர்மம், பக்தி, ஞானம் ஆகிய மூன்றுமே ப்ரும்மத்தை உணர்வதற்கே என்ற அத்வைத வேதாந்த மாளிகையை எதிர்காலத்தில் சங்கரர் எழுப்பினார்.





அத்தியாயம் - 15

# மண்டனமிச்ரர் வீட்டில்

அத்வைத வேதாந்தம் வேத கர்மங்களையும் அவற்றின் அனுஷ்டானங்களையும் உள்ளத் தூய்மையை அளிப்பதற்காக ஏற்பட்டவை என்று கூறுகிறது.

ஆனால், அக்கர்மங்கள் மோக்ஷத்திற்குரிய நேரான உபாயங்கள் அல்ல.

கர்மாக்கள் மூலம் சித்த சுத்தி பெறலாம். தூய்மையான மனநிலையில் மட்டுமே ஆத்ம விசாரணை செய்ய முடியும். ஆத்ம விசாரணை ஆத்மானுபவத்தில் கொண்டு சேர்க்கும். இதனையே ப்ரம்ம ஞானம் என்கிறோம்.

ப்ரம்ம ஞானி இந்த ப்ரபஞ்சத்தை ப்ரும்ம ஸ்வரூபமாகவே பார்க்கத் தொடங்குவான்.

வெறும் கர்மடராக இருந்த மண்டனமிச்ரரை அத்வைத நெறிக்கு மாற்றவே சங்கரர் மாஹிஷ்மதியை நோக்கி விரைந்தார்.

மண்டனமிச்ரர் வாழ்ந்து வந்த மாஹிஷ்மதி நகரம் தற்போதைய மத்திய ப்ரதேசத்தில் நர்மதா நதி தீரத்தில் அமைந்திருந்தது.

மண்டனமிச்ரரின் பூர்விகர்கள் காஷ்மீரத்திலிருந்து நர்மதா தீரத்திற்குக் குடிபெயர்ந்து வந்திருக்க வேண்டும்.

ஸ்ரீ சங்கர திக் விஜயத்தில் மூன்றாம் அத்தியாயத்தில் உள்ள தகவலின்படி காஷ்மீர தேச ராஜஸபைப் பண்டிதர் ஹிமமித்திரர் என்ற பண்டிதரின் அருந்தவப் புதல்வர் ஆவார் மண்டனமிச்ரர். இவருக்கு விசுவரூபர் என்றும் ஒரு பெயர் உண்டு.

சோனா நதிக்கரையில் வாழ்ந்து வந்த விஷ்ணு மித்ரர் மகள் ஸரஸவாணி விசுவரூபரின் மனைவி ஆகிறாள். ஸரஸவாணிக்கு உபயபாரதி என்றும் ஒரு பெயர் இருந்தது. இவள் எல்லா வித்யைகளையும் எந்தவிதப் பிரயாசையு மின்றி மிகச் சுலபமாகக் கற்றவள். உபநிஷதங்கள் கூறும் தத்துவங்களை நன்கு அறிந்த பண்டிதை.

ஊரின் எல்லையில் ஆற்றில் சில பெண்கள் நீர் மொண்டு கொண்டிருந்தார்கள்.

"மண்டனமிச்ரரின் வீடு எங்கே இருக்கிறது?" என்று சங்கரர் அவர்களைக் கேட்டார்.

அதற்குப் அப்பெண்கள் அருமையான கவிதை நடையில் பதில் கூறினார்கள்.

கவிதை நடையில் பதில் கூறுகிற அளவுக்கு அந்த நகரத்துப் பெண்கள் பண்டிதைகளாக விளங்கினார்கள்.

பெண்கள் மட்டும்தானா அப்படி பாண்டித்யம் பெற்றவர்கள்? என்று கேட்டால்.

"இல்லை, இல்லை, அந்த ஊரில் உள்ள பெண் கிளிகளும் கூட பண்டிதைகள் தாம்" என்று நம்மை உணர வைப்பதாக உள்ளது அவர்களது பதில்.

இதோ அந்த பதில்:

சுகாங்கநா யத்ர கிரம் வதந்தி
த்வாரே து நீடாந்தர ஸந்நிருத்தா:
அவேஹி தம் மண்டனமிச்ர தாம ||

எந்த வீட்டின் வாயிலில் உள்ள கூண்டுகளிலிருந்து பெண்கிளிகள், "வேதம் தனக்குத்தானே ப்ரமாணமேயன்றி வேறு ப்ரமாணம் வேண்டுமோ?" என்றும், வேறு சில கிளிகள், "கருமமே பயன் தருமா? அல்லது கடவுள் பலன் தருவாரா?" என்றும், இன்னும் சில கிளிகள் "இந்த உலகம் என்றும் இருப்பதா அல்லது தோன்றி வளர்ந்து அழிவதா?" என்றும் விவாதித்துக் கொண்டிருக்குமோ, அத்தகைய வேத விசாரம் நடக்கும் வீடே மண்டனரின் இல்லம் என்று அறிவீராக.

அந்தப் பெண்கள் சொன்ன அடையாளத்தை மனதில் கொண்டு அத்தகைய வீட்டைத் தேடிக் கொண்டு சங்கரர் சென்றார்.

அந்த மங்கையர் கூறிய அடையாளங்களைப் போலவே ஒரு வீட்டின் திண்ணையில் சில கிளிகள் வேத சாஸ்திர சதஸில் தர்க்கம் செய்பவர்களைப் போல பேசிக் கொண்டிருப்பதைக் கண்டார். அந்த வீடுதான் மண்டனரின் வீடாக இருக்க வேண்டுமென்று சங்கரர் நினைத்தார்.

மாளிகை போன்றிருந்த அவ்வீட்டின் வாயிலில் தென்னை மரம் ஒன்று ஓங்கி வளர்ந்திருந்தது. அது சற்று வளைந்து வீட்டின் உள்முற்றத்தில் இறங்க வசதியாக இருந்தது.

வீடு உட்புறம் தாழிடப் பட்டிருந்தது. வீட்டின் உள்ளிருந்து வந்த மந்திர ஒலி உள்ளே ச்ராத்த கார்யம் நடக்கிறது என்பதை விளக்கியது.

தென்னை மரத்தின் மேல் ஏறினால் வீட்டின் உள்முற்றத்தில் குதித்து விடலாம் என்று எண்ணிய சங்கரர் அம்மரத்தின் மேலேறி வீட்டின் உட்புறமாகக் குதித்தார்.

ச்ராத்தம் நடந்து கொண்டிருந்த வேளையில் தலையில் குடுமியும், உடலில் யக்ஞோபவீதமும் இல்லாத

துறவி ஒருவர் வந்ததைக் கண்ட மண்டனருக்குக் கோபம் வந்துவிட்டது.

பூர்வ மீமாம்சகர்கள் துறவையும் துறவிகளையும் வெறுப்பவர்கள். யக்ஞ கர்மாக்களைக் கைவிட்டுத் துறவு பூணுவோரைக் காணும்போது அவர்களுக்குக் கோபம் வருவது இயற்கை.

அதுவும் ச்ராத்த காலத்தில் துறவி ஒருவர் வீட்டினுள் அதிரடியாக நுழைந்ததைக் கண்ட மண்டனர், கோபத்துடன்,

"மொட்டை எங்கிருந்து?" என்று இளக்காரமாகக் கேட்டார்.

சங்கரர் சாவதானமாகக் "கழுத்திலிருந்து" என்று புன்சிரிப்புடன் பதிலளித்தார்.

"நீ வந்த வழியைக் கேட்டேன். நீ மொட்டையடித் திருப்பதைக் கேட்கவில்லை," என்று எரிந்து விழுந்தார் மண்டனர்

"நான் வந்த வழியைக் கேட்டீர்களா? அது என்ன பதில் சொல்லிற்று?"

கேலியாக பதிலிறுத்தார் சங்கரர்.

இதைக் கேட்டு ஆத்திரம் அளவு கடந்த மண்டனர், " 'அது நீ ஒரு விதவையின் மகன்' என்று சொல்லிற்று," என்றார்.

"ஓஹோ, அந்த வழி தங்களிடம் நீ ஒரு விதவையின் மகன் என்று சொல்லிற்றா?" என்று திருப்பினார்.

இங்ஙனம் சிறிது நேரம் ஒருவரை ஒருவர் சாடிக் கொண்டிருந்ததைக் கண்ட சிராத்த ப்ராமணர்கள் இருவரிடையேயும் சமாதானத்தை ஏற்படுத்தி ச்ராத்த காரியம் முடிந்த பின்னர் விவாதிக்கலாம் என்றனர்.

வேத வியாஸரும், ஜைமினியும் பித்ருஸ்தானங்களை ஏற்றிருந்தனர் என்பது மாதவீய சங்கர விஜயம் தரும் தகவலாகும்.

"ஸந்நியாஸியை விஷ்ணு இலையில் அமர்த்துவது சாஸ்த்ர ஸம்மதம் ஆனது தான். ஆகையால் இப்போது

இவரை விஷ்ணுவாக வரித்து உட்கார வைத்து பிக்ஷை பண்ணு. அதுவே முறையானது," என்று மண்டனருக்கு அறிவுரை பகன்றனர்.

ப்ராம்மணர்கள் வார்த்தையைத் தட்ட முடியாமல் வேண்டா வெறுப்பாக சங்கரரையும், ச்ராத்த காரியத்தில் விஷ்ணு ஸ்தானத்தை ஏற்று பிக்ஷை செய்து அருளும்படி வேண்டினார் மண்டனர்.

சங்கரர் மண்டன மிச்ரரிடத்தில், "நான் வயிற்று பிக்ஷைக்கு வரவில்லை. வாத பிக்ஷைக்கு வந்திருக்கிறேன். குமரிலபட்டர்தான் என்னை இங்கு அனுப்பி வைத்தார்," என்றார்.

குமரிலரின் பேரைக் கேட்டதும் மண்டனமிச்ரரின் முகபாவமே மாறிவிட்டது.

"முதலில் தாங்கள் இந்த பிக்ஷையை ஏற்றுக் கொள்ள வேண்டும். இன்று ச்ராத்த தினம், எனவே நாளை வாதத்தைத் தொடங்குவோம்," என்றார்.

ச்ராத்தம் முறைப்படி நிறைவேறிய பின்னர் மண்டனமிச்ரர் ச்ராத்தத்தில் பங்கு பெற வந்திருந்த வியாஸரையும் ஜைமினியையும் தனக்கும் சங்கரருக்கும் இடையே நடக்க இருந்த வாதத்திற்கு நடுவர்களாக இருக்கும்படி வேண்டினார்.



ஆனால், அவர்களோ மண்டனரின் மனைவி ஸரஸவாணியே தலைசிறந்த பண்டிதை ஆனதால் அவளையே நடுவராக வைத்துக் கொள்ளும்படிக் கூறிவிட்டுச் சென்று விட்டனர்.

* * *

மண்டனரின் மனைவி ஸரஸவாணி நடுவராக இருக்க இசைவு தந்தாள். ஸரஸவாணியின் தீர்ப்பை ஏற்க சங்கரர் முன் வந்தார்.

வாதத்தில் மண்டனர் தோற்று விட்டால் சங்கரரின் அத்வைதக் கொள்கையை ஏற்றுத் துறவு பூண்டு சங்கரரின் சீடராக மாற வேண்டும்.

அன்றி வாதத்தில் சங்கரர் தோற்றுவிட்டால் பூர்வ மீமாம்சத்தை ஏற்று இல்லறத்தவராக மாறிவிட வேண்டும்.

மண்டனரின் மனைவி நடுவராக இருக்க இசைந்த சங்கரரின் பரந்த மனத்தை என்னென்பது!

பல நாட்களுக்கு விவாதம் தொடர்ந்தது.

கர்மா, பக்திகளால் முடிவாக ஞானத்தையே அடைய வேண்டுமென்று ஆசார்யாள் ச்ருதி, யுக்தி, அநுவபவங்களால் நன்றாக எடுத்துக் காட்டினார்.

சங்கரருடைய வாதத்தின் முன்னால் தனது வாதம் எடுபடாததை உணர்ந்த மண்டனமிச்ரர் சங்கரர் வென்று விட்டார் என்று புரிந்து கொண்டார். ஞானமார்க்கத்தை ஏற்று அத்வைதியானார்.

பூரணமான அத்வைதியாக பரிணமிக்கும் முன்னர் தன் மனதில் இருந்த சந்தேகம் ஒன்றை சங்கரரிடத்தில் தெளிவுபடுத்திக் கொள்ள விரும்பினார்.

"ஜைமினி மிகப் பெரிய ஞானி. த்ரிகாலமும் தெரிந்தவர். வேதத்தின் நுண்பொருளை அறிந்தவர். அவர் தந்த பூர்வ மீமாம்சம் எப்படி பொய்யாக முடியும்?" என்று வினவினார்.

சங்கரர் அதற்கு விடையளிக்கையில், "அந்த மஹரிஷி எவ்வித தவற்றையும் இழைக்கவில்லை. ஆனால், நாம் தாம் நம்முடைய அஞ்ஞானத்தால், ஆழமாக எதனையும்

ஸ்வாத்யாயம் செய்யாததால் நமது சிற்றறிவைக் கொண்டு அவரது கொள்கைகளை சரிவரப் புரிந்து கொள்ளவில்லை.

சாதாரண மக்கள் நேரடியாக ப்ரும்ம ஞானத்தைப் பெற முடியாது என்பதனால் வேதங்கள் விதித்துள்ள யக்ஞம், தானம், தவம் ஆகிய கர்மாக்களைச் செய்து அதன் மூலம் ப்ரும்ம ஞானம் பெற ஏதுவாகும் என்று எண்ணி அப்பெரியவர் பூர்வ மீமாம்ச சூத்திரங்களைச் செய்துள்ளார்.

இறுதியில் மனிதன் அடைய வேண்டியது மோக்ஷம் என்பதில் உறுதியாக இருந்தார்.

அவரே ஒரு ப்ரும்ம ஞானிதான்."

சங்கரரின் அறிவாற்றலையும், சாஸ்திர ஞானத்தையும் ஆத்ம ஞானத்தையும் கண்டு வியந்த மண்டனர் துறவை ஏற்று சங்கரரின் சீடராக மனத்தளவில் தயாராகி விட்டார்.

ஆனால், விவாதத்திற்கு நடுவராக இருந்த ஸரஸவாணியல்லவா தீர்ப்புச் சொல்ல வேண்டும்.

ஸரஸவாணியோ தன் கணவர் வாதத்தில் தோற்றதைக் கூட உடனடியாக அறிவிக்கத் தயாராக இருந்தாள். ஆனால், நிபந்தனையின்படி அவர் ஸந்நியாஸம் ஏற்க வேண்டி வந்த நிலைக்காக வருந்தினாள். கணவரைப் பிரிந்து தன்னால் வாழ முடியாது என்று எண்ணிய அவள் சற்று யோசித்துவிட்டு சங்கரரிடம்,

"கணவனும், மனைவியும் ஈருடல் கொண்டிருந்தாலும் ஓருயிரே. கணவனில் பாதியாகிய என்னையும், நீங்கள் வெற்றி கொண்டால் மட்டுமே முழு வெற்றி பெற்றதாகக் கூற முடியும். ஆகவே, என்னுடன் வாதிடுங்கள்," என்றாள்.

## ஸரஸவாணியுடன் ஸம்வாதம்

மஹா பண்டிதையாக விளங்கிய ஸரஸவாணியுடனும் சங்கரர் வாதிட ஒப்புக் கொண்டார். ஸரஸவாணியோ சகல கலைகளிலும் வல்லவளாக கலைமகள் வடிவெடுத்து வந்ததுபோல இருந்தாள்.

வஸிஷ்டர் வாயால் ப்ரம்மரிஷி என்பது போல ஸரஸ்வதியே வடிவெடுத்து வந்திருந்த ஸரஸவாணி வாயால் 'ஸர்வக்ஞர்' என்று பாராட்டுப் பெறத்தான் சங்கரர் வாதத்திற்கு சம்மதித்தார் போலும்.

அவள் பல்வேறு கலைகளின் நுணுக்கங்களைப் பற்றிக் கேட்ட கேள்விகளுக்கெல்லாம் சரியான வகையில் சரியான விடை கொடுத்தார்.

சங்கரர் வெறும் ஆத்மஞானி அல்ல; சகல கலைகளையும் கற்று சர்வக்ஞராக விளங்கியவர்.

சகல கலைகளும் இன்பத்திற்காகவே தோன்றியவை. அவைகளால் உண்டாகும் இன்பத்தை விட அத்வைத அனுபவ இன்பமே பேரின்பம். அதுவே பெறப்பட வேண்டிய ஒன்று என்பதை ஸ்தாபிக்க முயன்றார்.

அவருக்கு மரம் ஏறும் கலையிலிருந்து செருப்புத் தைக்கும் கலை வரை அனைத்தும் தெரிந்திருந்தது.

சங்கரரை எப்படியாவது வென்று விட வேண்டும் என்று துடித்துக் கொண்டிருந்த ஸரஸவாணி சங்கரர் துறவியானதாலும், எட்டு வயதிலேயே துறவு பூண்டவராத லாலும் அவருக்குக் காமக் கலையில் நுட்ப அறிவும் அனுபவ அறிவும் இருக்க முடியாது என்ற திடமான எண்ணத்துடன் ஆண்—பெண் உறவு சம்பந்தமான விஷயங்களைக் கேட்டாள். சங்கரர் திகைத்தார்.

துறவியான ஒருவரிடம் குடும்பப் பெண் இப்படிக் கேட்கலாமா?

ஸர்வக்ஞ பீடத்தை அலங்கரிக்க விரும்பிய சங்கரர் எண்ணற்ற கலைகளில் ஒன்றான காமக் கலையை பற்றித் தெரிந்து வைத்திராவிடில் அப்பீடத்தில் ஏற முடியாது. எனவே அவர் அக்கலையிலும் தேர்ச்சி பெற்றிருக்க வேண்டும். அதற்கு வாய்ப்பு அளிப்பது போலவே இக்கேள்வி கேட்கப்பட்டது.

துறவியான சங்கரர் இக்கேள்விகளுக்கு பதில் அளித்தால் அவரது ஸந்நியாஸம் பொய்யாகிவிடும். பதில் சொல்லாவிடில் வாதத்தில் தோற்று க்ருஹஸ்தராக மாறவேண்டியிருக்கும்.

என்ன ஒரு தர்ம சங்கடமான நிலைமை!

சிறிது காலம் அவகாசம் கொடுத்தால் அக்கலையில் தேர்ச்சியுடன் வருவதாகக் கூறி விடை பெற்றார் சங்கரர்.

ஸரஸவாணியும் ஒரு மாத அவகாசம் தந்தாள்.

ஸரஸவாணி சங்கரரோடு வாதிடும் அளவிற்குப் புலமை பெற்றிருந்தாள் என்பதிலிருந்து ஒரு உண்மை நமக்குப் புலனாக வேண்டும்.

பெண்கள் எல்லாக் காலங்களிலுமே எல்லாத் துறைகளிலும் ஏற்றம் பெறுவதற்குச் சமுதாயமோ ஹிந்து மதக் கோட்பாடுகளோ தடையாக இருந்ததில்லை.

ஹிந்து சமுதாயத்தில் பெண்களுக்குக் கல்வி மறுக்கப்பட்டிருந்தது என்பது ஒரு பொய் ப்ரச்சாரம். பெருவாரியான பெண்கள் எல்லாக் காலங்களிலுமே, அன்றும் சரி, இன்றும் சரி குடும்பச் சுமைகளில் அழுந்திப் போய் அவர்கள் ப்ரகாசிப்பது இல்லை என்பது உலக நாடுகள் அனைத்திலும் ஒரே விதமான யதார்த்த நிலையாகும்.





## அத்தியாயம் - 16



# அமாருகன் உடலில்

ஸரஸவாணியிடம் அவகாசம் கேட்டு விடைபெற்ற சங்கரர் பத்மபாதருடன் மாஹிஷ்மதியிலிருந்து கிளம்பி பெருத்த சிந்தனையுடன் பயணமானார். வழியில் அமாருகன் என்னும் மன்னன் இறந்து விட்ட நிலையில் இருப்பதை அறிந்தார்.

அதாவது அவர்கள் தங்கள் பயணத்தில் ஒரு ராஜ்யத்தைக் கடந்து கொண்டிருந்தபோது அந்த ராஜ்யத்தின் மன்னன் அப்போதுதான் இறந்து விட்டிருந்தான் என்ற செய்தி கேட்டு அரண்மனைக்கு விரைந்தனர். இங்கே மன்னனின் உடலைச் சுற்றி நின்று அவனது மனைவியரும் அமைச்சர்களும் அதிகாரிகளும் அழுது கொண்டு இருந்தனர்.

மன்னனுக்கு நேரிட்டிருந்தது எதிர்பாராத சாவு.

பத்மபாதரைத் தனிமையில் அழைத்துச் சென்ற சங்கரர் அவரிடம், "நூறு அழகிய இளம் பெண்களை மனைவிகளாகக் கொண்ட இம்மன்னனின் உடலில் யோக சக்தியால் நான் நுழைந்து அவனுடைய உடல் மூலம் இப்பெண்களோடு வாழ்ந்து காமக்கலையில் தேர்ச்சி பெற்று வர எண்ணுகிறேன்.

அதன் மூலம் சர்வக்ஞ பீடம் ஏறுவதற்கு நான் தகுதி பெற்றவன் ஆவேன்.

அது மட்டுமின்றி காமவயப்பட்ட பெண்களின் நடத்தையைப் பற்றி நேரில் அறிந்து கொண்டு ஸரஸவாணியின் கேள்விகளுக்கு பதில் சொல்ல முடியும்".

## மத்ஸ்யேந்திரர்

மிகவும் அடக்கத்துடன் பத்மபாதர் சங்கரர் சொன்னதைக் கேட்ட பின்னர் விடையிறுக்கத் தொடங்கினார்.

"தாங்கள் அறியாதது எதுவும் இல்லை. இருப்பினும் தங்கள் மீது நான் கொண்டுள்ள பக்தியினாலும், அன்பினாலும் சில விஷயங்களைச் சொல்ல விரும்புகிறேன்.

முன் காலத்தில் வாழ்ந்த மத்ஸ்யேந்திரநாதர் எனும் யோகி ஒருவர் தமது சீடர் கோரக்ஷநாதரிடம் தமது உடலை ஒப்படைத்து விட்டு, இறந்து விட்ட அரசன் ஒருவனின் உடலில் புகுந்து அரண்மனைக்குச் சென்றார்.

தலை சிறந்த யோகியான மத்ஸ்யேந்திரநாதர் அரசன் உடலில் இருந்து ஆட்சி செய்து வந்த நாட்களில் நாட்டில் பருவ மழை தவறவில்லை. வளம் பெருகியது.

இதையெல்லாம் கண்டு, யாரோ ஒரு மஹானின் ஜீவன் அரசர் உடலில் புகுந்து இருக்க வேண்டும் என்ற சந்தேகம், மந்திரிக்கு வந்து விட்டது.

உடனே அவர் எப்படியாவது அந்த யோகியின் ஜீவன் என்றென்றும் அரசர் உடலில் தங்கியிருக்கச் செய்ய வேண்டும் என்று விரும்பி அரசனின் மனைவியரிடம், "உங்களது கைத்திறன், அன்பு, செயல் திறனையெல்லாம்

காட்டி அரசனை எப்போதும் காமக்களியாட்டத்திலேயே வைத்திருங்கள். அப்போதுதான் அரசர் உடலில் புகுந்துள்ள யோகி அவ்வுடலை விட்டு நீங்காமல் இருப்பார்" என அறிவுறுத்தினார்.

அதன்படியே அப்பெண்களும் நடந்து கொண்டனர்.

காமக்களியாட்டங்களில் தன்னை மறந்து ஈடுபட்டிருந்த மத்ஸ்யேந்திரநாதர் தமது ஆன்மீக சாதனைகளை மறந்து ஒரு ஸாதாரண மனிதனைப் போல நடந்து கொண்டார்.

தமது குருவிற்கு நேர்ந்துவிட்ட இவ்வீழ்ச்சியினின்றும் அவரை மீட்க எண்ணிய கோரக்ஷநாதர், குருவின் உடலை ஒரு பாதுகாப்பான இடத்தில் வைத்துவிட்டு நாட்டியம் சொல்லித் தரும் நட்டுவனார் போல வேடமிட்டுக் கொண்டு பெண்களின் அந்தப்புரத்திற்கு வந்தார்.

சில பாடல்களின் மூலம் அரசன் உடலில் இருந்த மத்ஸ்யேந்திரநாதருக்கு ஆன்மீக விஷயங்களை ஞாபகபடுத்தினார்.

காமவயப்பட்டிருந்த மத்ஸ்யேந்திரநாதர் வந்திருப் பவர் யார் என்பதை உணர்ந்து உடனடியாக அரசன் உடலை விட்டுவிட்டுத் தமது உடலில் புகுந்து கொண்டார்.

இதிலிருந்து காமம் எத்தனை அபாயகரமானது என்பது புலனாகிறது".

"அதுவும் துறவியான ஒருவர் பெருமை கொள்ளத்தக்க ப்ரம்மச்சரியத்தை விட்டு விட்டு இது போன்று செய்தால் மக்கள் என்ன நினைப்பார்கள்"?

"தற்போதைய சமுதாயத்தில் துறவிகளின் நிலை ஏற்கெனவே தாழ்ந்திருக்கிறது"

வைதீக தர்மத்தில் ஸந்நியாஸம் அவ்வளவாக உயர்த்திக் கூறப்படவில்லை. பூர்வமீமாம்ஸகர்களோ ஸந்நியாஸிகளை வெறுக்கவும் செய்தனர். ஆனால் பௌத்த பிக்ஷுக்களைப் போல சிலர் தான் தோன்றித்தனமாக ஸந்நியாஸிகளாக திரிந்திருப்பார்கள் போலும், அத்தகைய துறவிகளைப் பற்றியே பத்மபாதர் இங்கு குறிப்பிட்டிருக்க வேண்டும்.

இத்தகைய போலி ஸந்நியாஸிகளை ஆசார்யாளும் கண்டித்து இருக்கிறார்.

பஜகோவிந்தத்தில் 14வது சுலோகம் இதற்குச் சான்று அதன் முதல் இரு வரிகள் இதோ.

ஜடிலோ முண்டீ லுஞ்சிதகேச:
காஷாயாம்பர பஹுக்ருத வேஷ:

சடைமுடி தாங்கியும் முடியை மழித்தும் காவியும் உடுத்தி வேஷமும் போடுவர்.

இப்படித் தாழ்ந்துபோயிருக்கிற துறவு வாழக்கையை உயர்த்துவதற்காக வந்திருக்கும் தாங்கள் இதைச் செய்வது உசிதமல்ல, இதுவெல்லாம் தங்களுக்குத் தெரியாதது அல்ல. தங்கள் மீது கொண்ட அன்பினால் பேசினேன்" என்றார்.

பத்மபாதர் தாம் சொல்ல நினைத்ததை முழுவதும் சொல்லி முடித்தபின் சங்கரர் பேசினார். "நீ கூறியது பாதி உண்மையே. இப்போது முழு உண்மையையும் நான் கூறுகிறேன், எவன் ஒருவன் முற்றிலும் பற்றற்று இருக்கிறானோ அவனுக்குப் புலன் இச்சைகள் ஏற்படமாட்டா. கோபிகளோடு வாழ்ந்த கிருஷ்ணனின் நிலை அதுவே.

வஜ்ரோலி எனும் யோக ஸாதனையைப் பழகுகிறவன் ப்ரம்மச்சரியத்தை இழப்பதில்லை.

நாம் எந்த நோக்கோடு ஒரு காரியத்தைச் செய்கிறோமோ அதுவே ஆசைகளைத் தோற்றுவிக்கிறது.

எத்தகைய ஸங்கல்பமும் இன்றி செயல்படும் ஒருவன் ஸம்ஸாரத்தில் இருந்து கொண்டே அதனால் பாதிக்கப்படாமல் வாழமுடியும்.

தனது உடலே ஆன்மா என்ற மயக்கத்தில் கட்டுண்டு கிடக்கும் சாதாரண மக்களுக்கே சாஸ்திரங்களும், நீதி நூற்களும் ஏற்பட்டன. ஆன்மஞானி ஒருவனை அது கட்டுப்படுத்தாது.

ஞானியை நல்லதும் சரி, கெட்டதும் சரி பாதிப்ப தில்லை. ஜனகர் எத்தனையோ புண்ணிய காரியங்களைச்

செய்தார். ஆனால் ஆன்மஞானியான அவரை அவரது நற்செயல்களின் பலன் கட்டுப்படுத்த முடியவில்லை.

அதுபோலவே என்னை எதுவும் பாதிக்காது. இவ்வுடலுடன் கூடவே நான் காமக்கலை பயின்றாலும் பாதிக்கப்படமாட்டேன்.

"ஆனாலும் என்னை மேற்கோள் காட்டி யாரும் தவறான வழியில் சென்றுவிடக் கூடாது என்பதனால் வேறொரு உடலில் புகுந்து அவ்வுடலோடு என்னை பந்தப்படுத்திக் கொண்டு சிறிது காலம் வாழ்ந்து வருவேன்" என்று கூறி மலையொன்றின் உச்சியில் இருந்த குகையில் தமது உடலை பத்மபாதரிடம் ஒப்படைத்துவிட்டு "பரகாய ப்ரவேசம்" எனும் யோக சாதனை மூலம் அரசன் அமாருகனின் உடலில் புகுந்தார்.

## அமாருகன் உடலில்

அரசன் இறந்துவிட்டான் என்று எண்ணியிருந்த அரசியர், அமைச்சர்கள் ஆச்சரியப்பட அரசனின் உடலில் அசைவுகள் தெரிந்தன.

சற்று நேரத்தில் அரசன் கண் விழித்து எழுந்து உட்கார்ந்ததும் அரசியரும் மற்றவர்களும் பெரிதும் மகிழ்ந்தனர். அரசன் அமாருகன் உயிர் பெற்றது தங்களது பாக்கியம் என்று கருதினர். அமாருகன் செயல் பாடுகளில் மாற்றம் தெரிந்தது.

அமைச்சர்களுக்கு ஒரு சந்தேகம் வந்தது. வீரத்திலும் சரி விவேகத்திலும் சரி, அறிவிலும் சரி, அரசன் முன்னிலும் மிகச்சிறந்து விளங்கியது ஏன் என்று அவர்களுக்குப் புரியவில்லை. அரசியருக்கும் அரசனின் நடவடிக்கைகளில் மாற்றம் தெரிந்தது.

எனவே யாரோ ஒரு தெய்வீக மனிதர் அரசனின் உடலில் புகுந்திருக்க வேண்டும் என்று அவர்கள் ஊகித்தனர்.

எந்த ஞானியின் ஜீவன் அரசன் உடலில் பிரவேசித்திருக்கின்றதோ அந்த ஞானியின் உடல் எங்கு

வைக்கப்பட்டிருந்தாலும் அதனைக் தேடிக் கண்டு பிடித்து அந்த உடலை எரித்துவிட எண்ணினர் அமைச்சர்கள்.

உடனே காடுகளிலும், மலைகளிலும் அத்தகைய உடலைத்தேடி ரகசிய ஒற்றர்கள் சென்றனர்.

காம உணர்ச்சியால் உந்தப்பட்ட பெண்களின் சேஷ்டைகளையும் அவர்களைத் திருப்திபடுத்தும் பல்வேறு முறைகளையும் முழுதும் கற்றுணர்ந்த சங்கரர் வாத்ஸ்யாயனரின் காம சாஸ்திரத்தை அடி ஒற்றிப் புதிய காம சாஸ்திர நூல் ஒன்றைச் செய்தார்.

அரசனின் உடலில் இருந்து கொண்டு இயற்றப்பட்ட நூலாதலால் அதற்கு 'அமாருகம்' எனப் பெயரிட்டார்.

## கை கருகிய சங்கரர்

குறித்த காலம் முடிந்தும் சங்கரர் திரும்பி வராததைக் கண்ட பத்மபாதர் அமாருகனின் அரண்மனையை அடைந்து அரசரின் முன்னே சங்கரர் உணரும்படியான பொருள் பொதிந்த பாடலைப் பாடினார்.

ஸங்கீத வித்வானின் வேடத்தில் வந்திருந்த பத்மபாதரால் காலம் உணர்த்தப்பட்ட உடனே, சங்கரர் தமது ஸூக்ஷ்ம சரீரத்துடன் கூட அரசனின் உடலை நீத்து மீண்டும் தமது பழைய உடலை நோக்கி விரைந்தார்.

இதற்கிடையில் சங்கரரின் உடலைத் தேடிக்கண்டு பிடித்துவிட்ட சேவகர்கள் அவ்வுடலுக்கு எரியூட்டி விட்டனர்.

உடலில் சங்கரரின் ஆவி நுழைந்ததும் சிதையிலிருந்து எழுந்து வந்தார். சங்கரரது கையைத் தீயானது கருக்கி யிருந்தது. அதுவும் வலக்கையை சிதைத்துக் கருக்கிவிட்டது.

அதைக் கண்ட பத்மபாதர் துடிதுடித்துப் போய் தமது இஷ்ட தெய்வமான நரசிம்மரைக் குறித்து "ஸ்ரீந்ருஸிம்ஹ கராவலம்ப ஸ்துதி" செய்தார்.

மாதவீய சங்கர விஜயத்தில் இந்த ஸ்தோத்திரத்தை சங்கரரே செய்தார் என்று குறிப்பிடப்பட்டுள்ளது.



லக்ஷ்மி ந்ருஸிம்ஹ பஞ்சரத்னம் என்றதொரு சுலோகத்தை ஆசார்யாள் அநுக்ரஹித்தார். இந்த சுலோகம் வேறொரு சமயத்தில் இயற்றப்பட்டதாகும்.

ந்ருஸிம்ஹ கராவலம்ப ஸ்தோத்திரத்தில் 17 சுலோகங்கள் உள்ளன.

ஸம்ஸார வ்ருக்ஷமகடீஜம் அநந்தகர்ம
சாகாசதம் கரணபத்ரமநங்க புஷ்பம் |
ஆருஹ்ய துக்கபலிநம் பததோ தயாளோ
லக்ஷ்மிந்ருஸிம்ஹ மம தேஹி கராவலம்பம் ||

அதில் எட்டாவது சுலோகமாவது "ஸம்ஸார மரம் பாப விதையை ஊன்றியதால் முளைத்த ஒன்று. அது கர்மங்கள் என்ற கிளைகளில் புலன்கள் என்ற இலைகளைத் துளிர்த்தது. காமம் என்ற மலர்கள் மலரும் மரம் இது. இந்தக் காம மலரே துன்பமாக பழுக்கும் மரம்.

அந்த ஸம்ஸார மரத்தின் மேல் ஏறிய நான் விழுந்துவிட்டேன்,

தயாள மூர்த்தியே! லக்ஷ்மி நாயக ந்ருஸிம்ஹா! நீ எனக்குக் கை என்னும் பிடிப்பைத தருவாயாக" என்ற கருத்துக்களை உள்ளடக்கிய பதினேழு பாடல்களைப் பாடித் துதித்தார்.

ஸ்ரீந்ருஸிம்ஹனின் அனுக்ரஹ விசேஷத்தால் கருகிய மலர் போன்று இருந்த அவரது கை புது மலர்க் கையாகியது.

அமாருகம் என்ற நூலோடு சங்கரர் மண்டனமிச்ரர் இல்லம் வந்து ஸரஸவாணியிடம் தான் எழுதிய அந்த நூலைக் கொடுத்தார்.

அந்த நூலில் ஸரஸவாணி கேட்ட எல்லாக் கேள்விகளுக்கும் விடை இருந்தது.

ஸரஸவாணி தனது தோல்வியை ஒப்புக் கொண்டாள்.

நிபந்தனையின்படி மண்டனமிச்ரர் துறவு மேற்கொண்டு சங்கரரின் சீடரானார். அதன்பிறகு அவர் சுரேச்வராசாரியார் என்ற ஸந்நியாஸ நாமத்தை ஸ்வீகரித்துக் கொண்டார்.

மாதவீயத்தில் மண்டனரின் ஸந்நியாஸ ஸ்வீகாரம் விரிவாகவே தரப்பட்டுள்ளது.

தம்முடைய வாழ்நாளில் கடைசி முறையாக ஒரு யாகத்தைச் செய்து தேவர்களுக்கு ஹவிர் பாகங்களை முறையாக அளித்தார். தனக்கு சொந்தமாக இருந்தவற்றையெல்லாம் தேவைப்படுவோர்க்குத் தானமாகத் தந்தார்.

அஷ்ட ச்ராத்தம், கேசாதிவபனம், தண்டாதி ஸம்பாதனம், ஸாவித்ரீ ப்ரவேசம், ராத்ரீ ஜாகரணம், ஆகியவற்றைக் கிரமமாகச் செய்து முடித்து விட்டு உபாஸித்து வந்த அக்னிகளை மந்திரபூர்வமாக தன் உடலில் ஸமாரோபணம் செய்து கொண்டார்.

பிறகு மான் தோலைக் கையில் எடுத்துக் கொண்டு தன் இல்லத்திலிருந்து வெளிக்கிளம்பி நர்மதை நதியை அடைந்தார். அதில் ஸ்நானம் ஸங்கல்பம் ஆகியவற்றைச் செய்துவிட்டுக் கொடுக்க வேண்டிய அர்க்யாதிகளை அளித்தார்.



"மக்களின் மேல் ஆசை, மேலுலகங்களின் மீதான ஆசை வேறு ஸகலவித ஆசைகளையும் இத்துடன் விட்டொழித்தேன். என்னிடமிருந்து எந்த ஜந்துவிற்கும் பயம் ஏற்படாது" என்று அறிவித்தார்.

அதற்கு மேல் ப்ரைஷ உச்சாரண மந்திரங்களை ஸ்வாஹாரத்துடன் சொல்லி, என்னால் ஸந்நியாஸம் மேற்கொள்ளப்பட்டது என்று உரத்த குரலில் கூறினார்.

சிகையிருந்த இடத்தில் மீதமாக வைத்திருந்த சில கேசங்களைப் பிடுங்கி எறிந்துவிட்டு யக்யோபவீதத்தையும் களைந்து மந்திரங்களைச் சொல்லி நதி ஜலத்தில் போட்டார். பிறகு மஹாவிஷ்ணுவைப் பிரார்த்தித்துக் கொண்டார்.

"ஹே மதுஸூதனா, ஜகந்நாதா! எல்லாவற்றையும் துறந்தவனாக நிற்கிறேன். எனக்கு உன்னைத் தவிர வேறு கதியில்லை. என்னைக் கடைத்தேற்றுவாயாக, எல்லா பூதங்களுக்கும் அபயம் அளித்துவிட்டு உன்னைச் சரணமடைந்துள்ளேன், ஹே புருஷோத்தமா! என்னைக் காப்பாற்று" என்று சரணாகதி செய்து கொண்டார்.

இடையில் இருந்த ஒரே வஸ்திரத்தையும் களைந்து நீரில் எறிந்துவிட்டு ஜாதரூபமாக ஸ்ரீசங்கரரை நோக்கி நடந்து சரணமடைந்தார். ஸ்ரீசங்கரர் அவருக்கு கௌபீனம், காஷாய வஸ்த்ரம்,. தண்டம், கமண்டலம் தந்து மஹா வாக்கியங் களை உபதேசித்து ஸந்நியாஸ நாமமும் தந்தார்.

மண்டனர் மறைந்து சுரேச்வரர் உதயமானார்.

சங்கரருடன் சுரேச்வரர் புறப்படுவதைக் கண்ட ஸரஸவாணி தானும் அவர்களுடன் கூட பயணிக்க விரும்புவதாகத் தெரிவித்தாள். அதனை சங்கரரும் வரவேற்றார். ஆனால் இரண்டு ஸநநியாஸிகளோடு ஒரு பெண் இணைந்து நடந்து செல்வது சமூகத்தின் பார்வையில் தவறாகப் படுமே. அதற்கான தீர்வாக ஸரஸவானி ஒரு வழி முறையைச் சொன்னாள்.

சங்கரரும் சுரேச்வரரும் முன்னே நடந்து செல்ல, தொலைவில் பின்னால் ஸரஸவானி நடந்து வருவாள்.

பின்னால் அவள் வருகிறாள் என்பதற்கு அறிகுறியாக அவளது பாதச் சிலம்புகளின் ஒலிகேட்கும்.

தப்பித் தவறி கூட சங்கரர் ஸரஸவாணி பின் தொடர்ந்து வருகிறாளா என்று அறிய திரும்பிப் பார்க்கக் கூடாது. அப்படிப் பார்த்தால் அந்த இடத்திலேயே தான் தங்கி விடுவதாக ஸரஸவாணி கூறியிருந்தாள்.

மூவருமாக பல தேசங்களைக் கடந்து வழியில் துராசாரங்களையும், துர்மதங்களையும் களைந்து மக்களை நல்வழிப்படுத்திக் கொண்டு சென்றனர்.

சங்கரருடனும், சுரேச்வரருடனும் ஸரஸவாணி தொடர்ந்து சென்றதாக மாதவிய சங்கர விஜயத்தில் குறிப்பேதும் இல்லை.

சங்கரர் பல்வேறு தத்துவவாதிகளுடனும், சம்பிரதாயத் தலைவர்களுடனும் வாதம் செய்து அத்வைதத்தைப் பரப்ப வந்தவர்.

அவர் அதற்காக மேற்கொண்ட திக்விஜய யாத்திரையைப் பற்றி சங்கர விஜயங்கள் ஒவ்வொன்றும் மாறுபட்ட செய்திகளைத் தருகின்றன.

திக் விஜயங்களில் சங்கரர் சந்தித்ததாகக் கூறப் படுபவர்கள் அவர் காலத்தில் வாழ்ந்தவர்தாமா என்பதிலும் கருத்து வேறுபாடுகள் நிலவுகின்றன. ஆயினும் ஒன்று நிச்சயம்.

சங்கரர் வாழ்ந்த காலமே சர்ச்சைக்குரியதாக இருக்கும்போது மற்ற விஷயங்கள் எம்மாத்திரம்?

சுரேச்வரரோடு தெற்கு நோக்கிப் பயணித்தபோது வழியில் பல ஊர்களைக் கடந்து வரும்போது அந்தந்த ஊரில் இருந்த பல்வேறு கொள்கைகளைக் கொண்டிருந்த அறிஞர்களோடு வாதம் புரிந்து அவர்களைத் தம் வழிக்குக் கொணர்ந்தார் சங்கரர்.

சங்கரரையும், சுரேச்வரரையும் பின் தொடர்ந்து ஸரஸவாணி வருகிறாள் என்பதை அவளது கால் சிலம்பின் 'ஜல் ஜல்' ஒலியிலிருந்தே தெரிந்து கொண்டு சங்கரர் பின்னால் திரும்பிப் பார்க்காமலேயே போய்க் கொண்டிருந்தார்.

நெடுந்தொலைவு பயணம் செய்து அவர்கள் துங்கபத்திரா நதி தீரத்திற்கு வந்தார்கள்.

சங்கரரின் மனதில் பழைய நினைவுகள் நிழலாடின. ப்ரமச்சாரியாக அவர் கோவிந்த பகவத் பாதரைத் தேடிப் போகையில் இதே இடத்தில் ஓர் அற்புதமான ஆன்மிக அனுபவம் நேரிட்டதும், அதன்பின் சங்கரர் எதிர்காலத்தில் இந்த இடத்தில் மடம் ஒன்றை நிறுவ நினைத்ததையும் நினைவு கூர்ந்தார்.

சட்டென்று 'ஜல் ஜல்' சப்தம் நின்றிருந்தது. நிபந்தனையை மறந்து திரும்பிப் பார்த்தார் சங்கரர்.

ஆற்றங்கரை மணலில் ஸரஸவாணியின் பாதங்கள் புதைந்து, புதைந்து அவள் நடந்து வந்ததால் சிலம்பொலி கேட்கவில்லை.

சங்கரர் திரும்பிப் பார்த்ததைக் கண்ட ஸரஸவாணி மேலே நடக்காமல் அங்கேயே நின்றாள்.

"எல்லாமே ஈசுவர ஸங்கல்பமே. நான் முன்னர் எந்த இடத்தில் மடம் அமைக்க விருப்பம் கொண்டிருந்தேனோ அதே இடத்தில் ஸரஸவாணி ஸ்தம்பித்து நின்று விட்டாள். அவள் விதித்த நிபந்தனையே எனது எண்ணம் ஈடேற அநுகூலமாகி விட்டது."

அங்கேயே, ஸரஸவாணி சிலையாய் நின்ற அதே இடத்திலேயே, சிருங்கேரியிலேயே சாரதாம்பிகைக்கு ஆலயமும், சாரதா பீடமும், மடமும் நிறுவினார்.

அந்த ரமணீயமான சூழ்நிலை அவர் மனஸுக்கு ரொம்பப் பிடித்து விட்டது. மடம் ஸ்தாபித்து அங்கேயே பல மாதங்கள் தங்கி விட்டார் சங்கரர்.

பதினாறு வயதிலிருந்து முப்பத்திரண்டு வயஸுக்குள், அதாவது பதினாறே ஆண்டுகளில், ஆஸேது ஹிமாசல பர்யந்தம் பரவியிருக்கிற நமது பாரத தேசத்தை மூன்று முறை வலம் வந்திருக்கிறார் சங்கரர்.

அப்படிப்பட்ட சூறாவளிச் சுற்றுப்பயணத்தில் சங்கரர் அதிக காலம் தங்கியிருந்தது ச்ருங்கேரியில்தான்.

சங்கரர் பின்னாளில் நாட்டின் பல இடங்களில் மடங்களை நிறுவினார். பாரதத்தில் "சார் தாம்" என்று விசேஷித்துச் சொல்லப்படும் பத்ரிநாதம், துவாரகா நாதம், ஜகந்நாதம், ராமநாதம் என்பவற்றில் வடக்கே பத்ரிநாத்தில் ஜ்யோதிர் பீடத்தை ஸ்தாபித்தார். இந்த ஜ்யோதிர் பீடம் அமைந்த இடமே ஜோஷி மடம் என்றாகிவிட்டது.

மேற்கே துவாரகையில் காளிகா பீடம் நிறுவப்பட்டது.

கிழக்கே ஜகந்நாதம் எனப்படும் பூரியில் கோவர்தன பீடம் அமைக்கப்பட்டது.

ஆனால், தெற்கில் மட்டும் ராமநாதம் எனப்படும் ராமேச்வரத்தில் பீடத்தை அமைக்காமல் ச்ருங்கேரியில், சாரதா பீடத்தை நிறுவம்படி நேரிட்டது.

மற்ற பீடங்கள் சங்கரரது உத்தேசப்படி அமைந்தன. சாரதா பீடம் சாரதாம்பாள் தன் உத்தேசப்படி ச்ருங்கேரியில் ஏற்படுத்திக் கொண்டது ஆகும்.

ச்ருங்கேரியில் சங்கரர் நிறுவிய மடத்தின் தலைமைப் பொறுப்பை ஸ்ரீ சுரேசுவராசாரியாரே ஏற்றுக் கொண்டார். அப்போது அப்பகுதியை ஆண்டு வந்த சுதன்வா என்ற அரசன் இம்மடம் நிறுவத் தேவையான உதவிகளைச் செய்தான்.

தென்னகத்தில் இஸ்லாமிய ஆக்கிரமிப்புகளை முறியடிப்பதிலும், இஸ்லாமியர்களின் அழிவுச் செயல்களிலிருந்து நமது ஆலயங்களைக் காப்பாற்றுவதிலும் பெரும் பங்கு வகித்த விஜய நகர ஸாம்ராஜ்யமே இந்தப் பீடத்தின் ஆசார்யர்களில் ஒருவரான வித்யாரண்யராலேயே உருவாக்கப்பட்டதாகும். அந்த விவரங்களை வேறொரு அத்தியாயத்தில் பார்ப்போம்.





அத்தியாயம் - 17



# காபாலிக வதம்

பன்னிரண்டு ஜ்யோதிர் லிங்க க்ஷேத்திரங்களில் ஒன்றான ஸ்ரீ சைலத்திற்கு சங்கரர் விஜயம் செய்தார்.

இத்தலத்தில் எழுந்தருளியிருக்கும் சிவ மூர்த்தத்திற்கு மல்லிகார்ஜுனர் என்றே திருநாமம். ஸ்வாமிக்கு மல்லிகைப் பூவின் பெயரில் நாமம் என்றால் அம்பாளுக்கோ ப்ரமராம்பா என்றே பெயர்.

ப்ரமரம் என்பதற்கு வண்டு என்று அர்த்தம்.

ஸ்ரீ சைலத்தை மல்லிகார்ஜுன க்ஷேத்திரம் என்றும் சொல்வார்கள்.

அர்ஜுன வ்ருக்ஷத்தைச் சுற்றிப் படர்வது மல்லிகைக் கொடி. அந்த மல்லிகை மலரில் உள்ள தேனைப் பருகி அதிலேயே லயித்துப் போயிருக்கும் வண்டுதான் அம்பாள். எனவேதான் அவளுக்கு ப்ரமராம்பிகை என்று பெயர்.

ஸ்ரீ சைலத்திடம் ஆசார்யாளுக்குத் தனியானதொரு ப்ரேமை. அதற்கு முக்கிய காரணம் அந்த க்ஷேத்ரத்தில் நடந்த ஒரு சம்பவமே.

நூறு சுலோகங்களைக் கொண்ட 'சிவானந்த லஹரி'யில் சங்கரர் ஸ்ரீசைலநாதரை 50&51 ஆகிய சுலோகங்களில் சிலாகித்துச் சொல்லியிருக்கிறார்.

அவர் இயற்றியுள்ள யோக சாஸ்திர நூலான 'யோக தாராவளி' என்ற ப்ரகரண க்ரந்தத்திலும் ஸ்ரீசைலத்தைக் குறிப்பிட்டு இருக்கிறார்.

மிக உயர்ந்த மலை சிகரங்களைக் கொண்ட அழகிய பகுதிஸ்ரீசைலம்.

அர்ஜுனன் தவமிருந்து சிவபெருமானிடமிருந்து பாசுபதாஸ்திரம் பெற்ற ஸ்தலம் இதுவே.

இத்தலத்தில் பல்வேறு சைவ சம்பிரதாயிகள் தங்கி தங்கள் தங்கள் நெறிக்கேற்ப தவம் புரிந்து வந்தனர். அவர்களோடு வாதிட்டு அவர்களது நெறிமுறைகளில் இருந்த குற்றங்குறைகளை சுட்டிக்காட்டித் திருத்தினார் சங்கரர்.

இத்தகைய சைவ ஸம்ப்ரதாயிகளில் காபாலிகர்கள் என்பவர்கள் ஒரு பிரிவினர். இவர்கள் சில்லரை சிவபெருமானுக்கு நரபலி கொடுத்து, பலி கொடுக்கப் பட்டவர்களின் கபாலங்களையே மாலையாகக் கோர்த்து அணிந்து கொண்டிருப்பர். நரப்பசுவின் மாமிசத்தை உண்பவர்கள். கள்ளும் சாராயமும் குடிப்பவர்கள்.

வாமாசாரம் என்று இழித்தும் பழித்தும் பேசப்பட்ட வழிபாட்டு முறைகளைக் கடைப்பிடிப்பவர்கள்.

ஸத்வ குண உபாஸனா முறைகளைச் சொல்லிக் கொடுத்து இத்தகைய கொடிய உபாஸனைகளை மெல்ல மெல்ல மாற்றிக் கொண்டு வந்தார் சங்கரர். இதனால் காபாலிகர்கள் பலர் சங்கரர் சொன்ன வழி முறைகளுக்கு மாறிவிட்டனர்.

இது சில காபாலிக மதத் தலைவர்களுக்குப் பிடிக்கவில்லை.

ஸ்ரீ சைலத்திலும் சங்கரரோடு நேரடித் தொடர்பு ஏற்பட்டபோது அங்கு தவம் செய்து வந்த பல காபாலிகர்கள் மனம் மாறி சங்கரரது உபதேசங்களின்படி நடக்கத் தொடங்கி விட்டனர்.

இது அந்தப் பகுதியில் வாழ்ந்து வந்த க்ரஹஸன் என்ற காபாலிகனுக்குப் பிடிக்கவில்லை. இவரை எப்படியாவது கொன்று விட வேண்டுமென்று விரும்பினான்.

ஒரு நாள் சங்கரர் தனித்து இருந்தபோது அவரை அணுகிப் பேசத் தொடங்கினான்.

"நான் கபால மாலையணிந்து கபால திருவோடு ஏந்தித் திரியும் கபால பைரவரை உபாஸிப்பவன். நான் அவரைத் திருப்தி செய்து அவரது அருளால் அஷ்டமா ஸித்திகளைப் பெற விரும்புகிறேன்.

எவர் ஒருவர் 32 அங்க லக்ஷணங்களும் கொண்டு மனமுவந்து தன்னை பலி கொடுக்க முன்வருகிறானோ அத்தகைய ஸந்நியாஸி ஒருவரையோ அல்லது ஸர்வ லக்ஷணங்களும் கொண்ட மன்னர் ஒருவரையோ நான் கபால பைரவருக்கு நரபலி தந்து விட்டால் எனது இச்சை நிறைவேறும்.

அத்வைத ஞானத்தில் ஊன்றி நிற்கும் தாங்கள், தங்களது சரீரத்தின் மீது சற்றும் பற்று இல்லாதவர். தாங்கள் பிறரது நன்மைக்கென வாழும் பெருந்தகையாளர். மற்றவர்கள் வேண்டும் வரங்களைத் தந்து அவர்களுக்கு அருள் புரியும் அண்ணல்.

இன்று தங்களை சந்தித்தது நான் செய்த பாக்கியமே!



தாங்கள் என் வேண்டுகோளுக்கு இணங்கி தங்கள் தலையை வெட்டி எடுத்துச் சென்று கபால பைரவருக்காக நான் செய்ய இருக்கும் வேள்வியில் அஹுதி செய்ய அனுமதிக்க வேண்டும்" என்றான்.

சங்கரருக்குப் பரம ஸந்தோஷம். "அப்பா! நீ இந்த மனித சரீரம் ஒரு நல்ல காரியத்திற்குப் பயன்படும் வழியைச் சொன்னாய்.

மரம் காய்ந்து போனால் விறகாகப் பயன்படுகிறது; கோ ச்ருங்கம் என்ற பெயருடன் பசு மாட்டின் கொம்பு பரமனை அபிஷேகம் செய்யப் பயன்படுகிறது. யானையோ இறந்தால் ஆயிரம் பொன் என்று கூறுகிற அளவிற்கு அதன் தந்தம் ப்ரயோஜனப்படுகிறது. மான் தோல், புலித்தோல் முதலானவை ஆஸனமாகிறது. புலிப் பல், புலி நகம் என்று சிலர் அவற்றை கழுத்துக்கு அணியும் தங்கச் சங்கிலியில் கோர்த்து அணிகின்றனர். யானை முடியை மோதிரமாக்குகின்றனர்.

இந்த மனித சரீரம் மட்டும்தான் இன்னொருத்தருக்கு எந்தவித ப்ரயோஜனமும் இல்லாமல் போய்விடுகிறது.

அத்தகைய எனது மனித உடலின் தலையை சிவ பெருமானுக்கு அர்ப்பணிப்பதில் எனக்குப் பூரண ஸம்மதமே.

ஆயினும் எனது சீடர்களுக்குத் தெரிந்தால் இதனை அனுமதிக்க மாட்டார்கள். உனக்கும் அவர்கள் கஷ்டம் கொடுக்கக்கூடும்.

எனவே, நாளை இரவு நீ நடுநிசியில் வந்து, தனியாக இதே இடத்தில் சமாதி நிலையில் நான் அமர்ந்திருக்கும் போது எனது தலையை வெட்டி எடுத்துச் செல்," என்று விடை கூறி அனுப்பினார்.

அந்தக் காபாலிகனும் அவ்வாறே மறுநாள் நள்ளிரவில் சங்கரர் சமாதி நிலையில் அமர்ந்திருந்த இடத்திற்கு வந்து மிகவும் மகிழ்ச்சியோடு தனது உடை வாளை உருவி வெட்டுவதற்குக் கையை உயர்த்தினான்.

அப்போது அண்டங் கிடுகிடுக்கும் பயங்கரமான சிங்கத்தின் கர்ஜனையும் யாரோ ஒருவன் அலறிக் கொண்டு கீழே விழுவதன் ஒலியும் கேட்டது.



சங்கரர் சமாதி நிலையினின்றும் விழிப்புற்றுக் கண்களைத் திறந்து பார்த்தார். காபாலிகன் உயிரிழந்து கீழே விழுந்து கிடந்தான்.

அவன் அருகே ஒன்றும் அறியாதவர் போல சங்கரரின் அருமைச் சீடர் பத்மபாதர் நின்று கொண்டிருந்தார்.

"எங்கே இருந்த என்னை ஏதோ ஒரு சக்தி இங்கு இழுத்துக் கொண்டு வந்தது. இந்தக் காபாலிகனை நான் எப்படிக் கொன்றேன் என்பது எனக்கே புரியவில்லை," என்றார் பத்மபாதர்.

பத்மபாதர் மூலமாக ந்ருஸிம்ஹரே தன்னைக் காத்திருக்கிறார் என்பதை உணர்ந்து கொண்ட சங்கரர் அவரிடம், "பத்மபாதா! உனக்கு நரசிம்ம பக்தியும் உபாஸனையும் உண்டல்லவா? முன்பு எனது கை தீயினால் கருகிவிட்டபோது நரசிம்மரைத் துதிக்கச் சொன்னவன் நீதானே! நீ நரசிம்ம மந்த்ர உச்சாரணம் மூலம் சித்தி ஏதேனும் அடைந்திருக்க வேண்டும்," என்றார்.

பத்மபாதர் தமக்குக் கடந்த காலத்தில் ஏற்பட்ட அனுபவம் ஒன்றை நினைவு கூர்ந்து சொல்லத் தொடங்கினார்.

அதை அவர் சொல்வது போல இல்லாமல் நாமே அந்த வரலாற்றுச் சம்பவத்தை இங்கு நினைவுபடுத்திக் கொள்வோம்.

பத்மபாதருக்கு பூர்வாச்ரமத்தில் ஸநந்தனர் என்று பெயர். அவர் சோழ தேசத்தைச் சேர்ந்தவர். அவர் சிறு

வயதில் தம் ஊரில் இருந்தபோது முதியவர் ஒருவரிடம் நரசிம்ம மந்திர உபதேசம் பெற்றிருந்தார்.

நரசிம்மரை ப்ரத்யக்ஷமாக தரிசிக்க வேண்டும் என்கிற அவாவுடன் அஹோபில க்ஷேத்திரத்தை அடைந்து காட்டின் நடுவே மரத்தடியில் அமர்ந்து நரசிம்ம மந்திரத்தை ஜபித்துக் கொண்டே தியானத்திலிருந்தார்.

அப்போது அவ்வழியே வந்த வேடன் ஒருவன் இவரது தியானத்தைக் கலைத்துத் தான் தேடி வந்த விலங்கைப் பற்றிக் கேட்டான். தான் தியானத்தில் இருந்ததால் தனக்கு எதுவும் தெரியாது என்று கூறிய சனந்தனரிடம் அவர் எதற்காக அங்கே கண்மூடி ஏதோ முணுமுணுத்துக் கொண்டேயிருக்கிறார் என்று கேட்டான் வேடன்.

தியானத்தைப் பற்றிச் சொன்னால் அவனால் புரிந்து கொள்ள முடியாது என நினைத்த சனந்தனர், "நீ எப்படி மிருகங்களைத் தேடி அலைகிறாயோ அதுபோலவே நானும் ஒரு மிருகத்தைத் தேடிக் கொண்டிருக்கிறேன்," என்றார்.

''கண்ணை மூடிக் கொண்டு ஒரு இடத்தில் உட்கார்ந்து கொண்டு ஒரு மிருகத்தைத் தேடுவதா? ரொம்ப விசித்திரமாகத்தான் இருக்கு!"

"நான் ஒரு விசித்திரமான ப்ராணியை தேடுவதால் விசித்திரமான முறையில்தான் அதைத் தேட வேண்டியிருக்கு."

"எனக்குத் தெரியாம எந்த விசித்திர மிருகம் இருக்கு இந்தக் காட்டுல? அது எப்படி இருக்கும்னு நீ சொல்லு. நீ சொல்றதுபோல மெய்யாலுமே அப்படி ஒரு ப்ராணி இருக்கும்னா அத்தை இருபத்து நாலு மணி நேரத்துக்குள்ளாற உன் கண் முன்னாலே கொண்டு வந்து நிறுத்தறேன்."

அந்த விசித்ரமான ப்ராணி எப்படியிருக்கும் என்ற வர்ணனையைக் கொடுத்தார் சனந்தனர்.

"இடுப்புக்குக் கீழே மனுஷ்யன் மாதிரியும் இடுப்புக்கு மேலே சிங்கம் மாதிரியும் இருக்கும்பா. அதான் நான் சொல்ற விசித்ர ப்ராணி."

“மெய்யாலுமா? அப்படி ஒரு மிருகத்தை இதுவரை பார்த்ததே இல்லியே?”

“நிஜம்மா அந்த ப்ராணி இந்தக் காட்டுல இருக்குப்பா.”

“ஐயரே! நீ பொய் சொல்லமாட்டே. நாளைக்கு பொழுது சாயறத்துக்குள்ளே அதை நான் பிடிச்சுக்கிட்டு வரேனா, இல்லியா பாரு. அதைப் பிடிக்க முடியாட்டி நான் உசிரையே விட்டுடுவேன்.”

அந்த வேடனின் அப்பாவித் தனத்தை, வெகுளித்தனத்தை ரசித்தவாறே மீண்டும் கண்களை மூடி தியானிக்கலானார் சனந்தனர்.

அந்த ப்ராணியின் உருவத்தை மனதில் பதியவைத்துக் கொண்டுக் காடெங்கிலும் சுற்றி அலைந்து தேடத் தொடங்கினான் அந்த வேடன்.

நாள் முழுவதும் தேடி சோர்ந்து போய் விட்டான். மறுநாள் முழுவதும் அந்த ப்ராணியின் சிந்தனைதான். அன்ன ஆஹாரம் இல்லாமல் காடு பூரா தேடு தேடுன்னு தேடிண்டு போனதுல அசந்தே போய் விட்டான். கண்கள் இருண்டு வந்தன.

அவன் சொல்லியிருந்த கெடு, அதாவது மறுநாள் சாயங்கால வேளை நெருங்கி விட்டது.

“ஐயரு பொய் சொல்லியிருக்க மாட்டாரு. நம்மாலதான் அதைக் கண்டுபிடிக்க முடியல்ல. சொன்னபடி உசுரை விட்டுட வேண்டியதுதான்,” என்று தீர்மானம் பண்ணினான்.

காட்டில் படர்ந்திருந்த கொடிகளை அறுத்து மரத்தின் கிளையில் கட்டித் தூக்குப் போட்டுக் கொள்ளக் கழுத்தில் மாட்டிக் கொண்டான்.

அப்போது அவன் முன்னர் ஐயர் சொன்ன வடிவத்தில் அந்த விசித்திர ப்ராணி நின்றது. ஆம்! நரசிம்மர் அவனுக்குக் காட்சி தந்தார்.

உயிரை விடுவதற்கு முன்னதாக தான் தேடியலைந்த மிருகத்தைக் கைப்பற்ற முடிந்ததே என்ற மகிழ்ச்சி. அந்த மிருகத்தின் மீது கோபம் வேறு.

'பாழாப்போன விசித்திர ப்ராணியே! நீ மட்டும் இன்னும் கொஞ்சம் பிந்தி வந்திருந்தா என் கதி என்னவாகி இருக்கும்?" என்று கடிந்தவாறே கொடிக் கயிற்றால் அந்த நரசிம்மத்தைக் கட்டி இழுத்துக் கொண்டு போய் சனந்தனர் முன்பு நிறுத்தினான்.

"ஐயரே! நான் சொன்னபடியே அந்த ப்ராணியை இட்டாந்துட்டேன். இதுதானே நீ தேடிண்டிருந்த மிருகம்?"

இவன காட்டிய நரசிம்மத்தை அவரால் காண இயலவில்லை.

"ஒண்ணுமே தெரியலையேப்பா. நீ அந்த மிருகத்தைக் கூட்டிக்கிட்டு வந்திட்டியா?" சந்தேகத்துடன் கேட்டார் சனந்தனர். "என்ன! உன் கண்ணுக்குத் தெரியலையா?" என்று கூறிக் கொண்டே அந்த மிருகத்தை தன் கையில் பிடித்திருந்த கொடிக் கயிற்றால் அடித்தான்.

அவ்வளவுதான்! அடி தாங்காமல் அலறியது அந்த மிருகம். சிம்ம கர்ஜனையே தான்.

"தெய்வமே, உனக்காக வருஷக்கணக்கில் இரவும் பகலும் தவம் இருக்கும் எனக்கு உன் தரிசனத்தைத் தராமல் இந்த வேடனுக்கு தரிசனம் தந்ததோடு அவன் கையில் கட்டுண்டு கிடக்கிறாயே!"

அப்போது அசரீரி ஒன்று கேட்டது. "சனந்தனா! இவன் கடந்த இருபத்து நான்கு மணி நேரமும் என்னைக் காண வேண்டும் என்ற உறுதியுடன் பசி, நித்ரை இல்லாமல் என் உருவையே தியானித்துக் கொண்டு, ப்ராணனையே தியாகம் செய்யவும் முன்வந்த இவனது மன ஒருமைப்பாட்டிற்கு நீ இத்தனை காலமும் செய்து வந்த தியானம் ஈடாகாது.

இவனது பக்திக்குக் கட்டுப்பட்டே அவன் என்னைக் கட்டி இழுத்து வந்தபோதும் வாய்மூடி வந்தேன்.

இவனுடைய தொடர்பு உனக்கு ஏற்பட்டதால்தான், உனக்கு எனது தரிசனம் கிடைக்காவிட்டாலும்,

கர்ஜனையும் இந்த வாக்கும் கேட்கிற பாக்யமாவது கிட்டியது. ஆனால், நீ செய்த தவம் வீண் போகாது. நீ பிற்காலத்தில் உலக நன்மைக்காக உழைக்கப் பிறந்த துறவி ஒருவரின் உயிரைக் காப்பாற்றப் போகிறாய். அப்போது உன் மூலம் வெளிப்பட்டு நான் அவரைக் காப்பாற்று வேன்."

விஸ்தாரமாக பத்மபாதர் கூறியதைக் கேட்ட சங்கரர் நரசிம்மமூர்த்தி அருளாலேயே பத்மபாதரால் காபாலிகனை அழிக்க முடிந்தது என்பதை உணர்ந்தார்.

நரசிம்மரைத் துதித்து லக்ஷ்மி ந்ருஸிம்ஹ பஞ்ச ரத்னம் என்ற ஸ்தோத்திரத்தைச் செய்தார்.

சங்கரரின் பயணம் தொடர்ந்தது.







அத்தியாயம் - 18

# பேசாத சீடன்

சங்கரர் தமது பயணத்தில் அடுத்துச் சென்ற இடம் கோகர்ண க்ஷேத்திரம். இந்த க்ஷேத்திரத்தில் எழுந்தருளி யுள்ள சிவ ஸ்வரூபம் ஸ்ரீ மஹா பலேச்வரர்.

பாரத தேசத்தின் மேற்குக் கடற்கரை ஓரத்தில் ராவணன் ஸ்தாபித்த சிவலிங்கம் ஆகும் இது. வினாயகப் பெருமானே தனது திருவிளையாடலாக ராவணன் இலங்கைக்கு எடுத்துச் செல்வதற்காக கயிலாயத்திலிருந்து கொண்டு வந்த லிங்கத்தை இங்கேயே எழுந்து அருளும்படி அனுக்ரஹித்தார் என்பது ஸ்தல புராணக் கூற்று.

அவர் கோகர்ண க்ஷேத்திரத்திற்கு வந்த ஒரு சில நாட்களில் மஹா சிவராத்திரி தினம் வந்தது. அன்று இரவு முழுவதும் இத்திருக்கோயிலில் எழுந்தருளியிருந்த சிவபெருமானுக்கு வில்வார்ச்சனை செய்தார்.

ஹரதத்தர் என்ற சைவர் தமது ஆசார்யரிடம் கோகர்ணத்திற்கு சங்கரர் வந்திருப்பதைக் கூறினார்.

சைவ மத ஆசார்யரான நீலகண்டர் சங்கரரோடு வாதிட்டு அவரை வெல்ல முயன்றார். ஆனால், இறுதியில் தோற்றுப் போய் சங்கரரின் சீடர் ஆனார். அவரோடு ஹரதத்தரும் மற்றவர்களும் கூட சங்கரரின் சிஷ்யர்கள் ஆனார்கள்.

அங்கிருந்து அவர் சென்றது ஹரிஹர க்ஷேத்திர மாகும்.

தெய்வத் திருவுருவங்களிடையே பேதம் இல்லை என்பதை அவ்வப்போது நமக்கு யாராவது உணர்த்திக் கொண்டேயிருக்க வேண்டியிருக்கிறது.

இஷ்ட தெய்வம் என்று வருகிறபோது ஏகாக்ர சிந்தையோடு ஒரே ரூபத்திலேயே மனதை லயிக்கச் செய்ய வேண்டும் என்பது முக்கியம்தான்.

"அன்யதா சரணம் நாஸ்தி; த்வமேவ சரணம் மம" என்பது அவசியம் தான். ஆனாலும் நமது இஷ்ட தெய்வத்தை எல்லா மூர்த்தங்களிலும் காணும் மனப்பக்குவமும் நமக்கு வர வேண்டும்.

இங்கு ஹரியும், ஹரனும் ஒன்றே என்பதை நிரூபிக்கும் விதமாக இறைவன் ஹரியும், ஹரனுமாக அர்த்த நாரீசுவரர் போல (சிவன் பாதி; பார்வதி பாதி) எழுந்தருளி அருள்பாலிக்கிறார்.

தமிழ் நாட்டில் கூட சங்கரன் கோயிலில் சங்கர நாராயண மூர்த்தியாகக் காட்சியளிக்கிறார்.

மனிதன் தன்னை உயர்த்திக் கொள்கிறபோது மூர்த்தி பேதம் நீங்கிவிடும்.

இத்தலத்தில் தரிசித்த பின்னர் சங்கரர் மூகாம்பி க்ஷேத்ரத்தை சென்றடைந்தார். மூகாம்பிகா எழுந்தருளி யுள்ள இத்தலத்திற்கு கொல்லூர் என்றும் பெயர் உண்டு.

இத்தலத்திற்கு சங்கரர் வந்தபோது இங்கிருந்த அம்பிகையின் உருவம் உக்ர வடிவத்தில் இருந்ததாம். அந்த

உக்ர ஸ்வரூபத்தை மாற்றும் விதத்தில் ஸ்ரீ சக்ர ப்ரதிஷ்டை செய்து சாந்த ஸ்வரூபிணியாக ஆக்கினாராம்.

இதேபோன்று வேறு சில க்ஷேத்ரங்களிலும் சங்கரர் செய்திருக்கிறார்.

காஞ்சிபுரத்தில் காமாக்ஷியே உக்ரம் நிரம்பியவளாக இருந்திருக்கிறாள். அந்தக் கோயிலிலும் ஸ்ரீ சக்ரம் ஸ்தாபித்து அவளையும் ஸௌம்ய தேவதையாக்கியிருக்கிறார்.

ஜம்புகேச்வரம் எனப்படும் திருவானைக்காவில் அகிலாண்டேசுவரியின் உக்ரத்தை ஸமனப்படுத்த தாடங்கங்களில் ஆகர்ஷித்து அவளுக்கே காதணியாக அணிவித்து அழகு பார்த்திருக்கிறார்.

திருவொற்றியூரில் வட்டப் பாறையம்மனை வடிவுடையம்மனாக்கி ஸௌம்ய மூர்த்தியாக்கி இருக்கிறார். அந்த உக்ர சக்தியை வேறு இடத்தில் வட்டப் பாறையம்மன் என்பதாகவே இன்றும் நாம் வழிபடும் விதத்தில் அமைத்திருக்கிறார்.

## ஹஸ்தாமலகர்

தேச ஸஞ்சாரத்தில் ஸ்ரீ சங்கரர் மேற்குக் கடற்கரைப் பகுதியில் அமைந்துள்ள ஸ்ரீபலி க்ஷேத்திரத்திற்கு விஜயம் செய்தார்.

அந்த ஊரில் ச்ரேயஸுடன் வாழ்ந்து வந்த ப்ரபாகர பட்டர் என்கிற அந்தணரை சங்கரர் சந்தித்தார். செல்வமும், புகழும், வேத நூல் விழுமிய வாழ்வும் கொண்டு வாழ்ந்து வந்த ப்ரபாகர பட்டருக்கு மனமகிழ்ச்சி இல்லாதது கண்ட சங்கரர் அதற்கான காரணத்தையும் விரைவில் கேட்டறிந்தார்.

ஸ்ரீபலி கிராமத்தில் மிகச் சிறந்த பண்டிதரான ப்ரபாகரரை வருத்தி வந்த விஷயம் இதுதான். அவரது பதிமூன்று வயது மகன் ஏதோ பிரமை பிடித்தவன் போல யாருடனும் பேசாமலும் எதிலும் பட்டுக் கொள்ளாமலும் இருந்தான். தானாகவே சாப்பிடுவதும் கிடையாது. யாராவது படுக்க வைத்தாலொழிய படுப்பதும் இல்லை. தானாகவே எதுவும் செய்வதில்லை அவன்.

10

தன்னுடைய மகனின் நிலையைக் கண்டு மனம் வருந்திக் கொண்டிருந்தார் ப்ரபாகரர்.

சங்கரர் சில அற்புதச் செயல்களைச் செய்ய வல்லவர் என்பதைப் பராபரியாகக் கேள்விப்பட்டிருந்தார் ப்ரபாகரர்.

கௌசாம்பியில் இறந்து போய் விட்ட சிறுவனை உயிர் எழுப்பித் தந்திருக்கிறார் என்ற தகவலும் அவருக்குத் தெரிந்திருந்தது.

தன் மகன் இருந்த உன்மத்த நிலையிலிருந்து அவனை மீட்டுத் தர வேண்டும் என்று சங்கரரிடம் விண்ணப்பித்தார்.

பையனை அழைத்து வரும்படி சொல்லி அனுப்பினார் சங்கரர்.

மகனை அழைத்து வந்தார் ப்ரபாகரர். மகன் அந்த மஹானின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினான். வீழ்ந்தவன் எழுந்திருக்கவேயில்லை.

சங்கரர் அவனை அன்போடு தட்டிக் கொடுத்து எழுப்பி, "குழந்தாய் நீ யார்? உன் பெயர் என்ன? நீ எங்கிருந்து வந்தாய்? உன் ஊர் எது?" என்று கேட்டார்.

அவ்வளவுதான் இதுவரை வாய் திறந்து பேசியே இராத அச்சிறுவன் மடை திறந்த வெள்ளமாகத் தத்துவ ரீதியில் பேசிக் கொண்டே போனான்.

''நான் மனிதன் அல்லன்; நான் தேவனல்லன்; நான் யக்ஷனல்லன்; நான் ப்ராம்மணனும் அல்லன்; நான் ப்ரும்மச்சாரியும் அல்லன்; க்ருஹஸ்தனும் அல்லன்; நான் நிஜபோத ரூபம் அதாவது ஆத்ம ஞான ஸ்வரூபம்'' என்றிப்படி யாவரும் வியக்கும் வண்ணம் வேதாந்த ஸாரத்தைப் பிழிந்து தந்தாற்போல பன்னிரண்டு சுலோகங்களைப் பொழிந்து தள்ளி விட்டான். பாடி முடித்ததும் ஆசார்யரின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினான்.



பேசாத தன் மகன் பேசியதைக் கேட்ட ப்ரபாகரர் அளவற்ற மகிழ்ச்சியுடன் தமது இல்லத்துக்கு அழைத்துச் சென்றார்.

ஊராரிடம் தன் மகன் பேசுவதாகப் பெருமையோடு சொன்னார். ஆனால், சிறுவனோ பழையபடி பரப்ரம்ம ஸ்வரூபியாக வாய் பேசாது எங்கோ வெறித்துப் பார்த்துக் கொண்டு இருந்தான்.

தந்தை மீண்டும் தனயனை அழைத்துக் கொண்டு சங்கரரிடம் வந்தார்.

"நீங்கள் இச்சிறுவனை உலக வாழ்வில் ஈடுபடச் செய்ய முடியாது. ப்ரும்ம ஞானம் பெற்றவன் இவன். ஞானிகள் யாவருக்கும் ஆதர்சமானவன். தன்னுடைய ப்ராரப்த கர்மாவை தீர்க்கவே இப்பிறவி எடுத்துள்ளான். உங்களுக்கு இவனாலே லௌகிக பலன் ஏதும் கிட்டாது. ஆகையால் இவனை எனக்குத் தந்து விடுங்கள்."

சங்கரரின் வார்த்தைகளைக் கேட்டு ப்ரபாகரர் சங்கடப்பட்டார். முதலில் மகனைப் பிரிவதற்குச் சம்மதிக்கவில்லை.

சங்கரர் அவரிடம் அச்சிறுவன் இரண்டு வயது குழந்தையாக இருந்தபோது நடந்த சம்பவம் ஒன்றை ஞாகப்படுத்தினார்.

ப்ரபாகரரும் அவருடைய மனைவியும் தீர்த்த யாத்திரை சென்றிருந்தபோது தங்கள் இரண்டு வயது குழந்தையை கங்கைக் கரையில் தியானத்தில் ஆழ்ந்திருந்த மஹாத்மா ஒருவரின் அருகே விட்டு விட்டு ஆற்றில் இறங்கி நீராடினர்.

நீராடிவிட்டுத் திரும்பியவர்கள் தங்கள் குழந்தை ஆற்றை நோக்கித் தவழ்ந்து போய் ஆற்றில் விழுந்ததைக் கண்டு அதிர்ச்சியுற்று ஓடினர். ஆனால், அதற்குள் மூச்சுத் திணறி குழந்தை இறந்து விட்டது.

இறந்த குழந்தையை எடுத்து வந்து அம்மஹாத்மாவின் காலடியில் கிடத்திக் கதறினர். குழந்தையின் உயிரை மீட்டுத் தருமாறு வேண்டினர். கருணைமிக்க அம்மஹாத்மா குழந்தை உயிர் பெற்றெழச் செய்தார்.

இவ்விஷயத்தை அவர்களுக்கு விவரித்துவிட்டு,

"உண்மையில் அம்மஹாத்மா தன் உடலை விட்டு விட்டு இறந்த குழந்தையின் உடலில் புகுந்து விட்டார். எனவே தான் உங்கள் குழந்தை ஞானியைப் போல பற்றற்று இருக்கிறான்," என்று சங்கரர் சொன்னவுடன் ப்ரபாகரரும் அவரது மனைவியும் முழு சம்மதத்துடன் தங்கள் மகனை சங்கரருக்குத் தந்து விட்டனர்.

உள்ளங்கை நெல்லிக்கனி போல ஆன்மிக அத்வைத நிலையை அச்சிறுவன் பாடிய சுலோகங்கள் விளக்கிய படியால் அவனுக்கு ஹஸ்தாமலகர் என்று பெயர் சூட்டி மகிழ்ந்தார் சங்கரர்.

அவரது சுலோகங்களுக்கு ஹஸ்தாமலக ஸ்தோத்ரம் என்றே பெயர்.

ஆதிசங்கரரே அப்பாடல்களுக்கு பாஷ்யம் எழுதிச் சிறப்பித்தார். அது ஹஸ்தாமலகீயம் என்று பெயர் பெற்றுள்ளது.

ஹஸ்தாமலகர் தமது குருவுடன் நாடெங்கும் சுற்றுப்பயணம் செய்தபோது கூட அவர் அதிகம் பேசவும் இல்லை; எழுதவும் இல்லை.

அவரே பின்னாளில் துவாரகையில் சங்கரர் ஸ்தாபித்த காளிகா பீடத்தின் முதல் பீடாதிபதி ஆனார்.



முறையான கர்ம அனுஷ்டானத்தினால் காம க்ரோதாதிகள் நீங்குகின்றன. தானத்தினால் லோபம் நீங்குகிறது. சாஸ்திரத்தை நன்கு கற்பதால் மோஹம் நீங்குகிறது. தத்துவ சாஸ்த்ரங்களைக் கற்பதால் நித்ய அநித்ய விவேகம் ஏற்படுகிறது. அதன்பிறகு ஆத்ம அநாத்ம விவேகம் உண்டாகிறது. பணிவினால் தான் கர்வத்தை நீக்க முடியும்.



அத்தியாயம் - 19

# தோடகாஷ்டகம்

ஆசார்யர் ச்ருங்க கிரியில் தங்கியிருந்தபோது ஆனந்தகிரி என்ற பெயர் பூண்ட ஏழை அந்தணச் சிறுவன் சங்கரரை வந்தடைந்தான். ஆசார்யருக்கு ஸதா ஸர்வ காலமும் பார்த்துப் பார்த்துக் கைங்கர்யம் பண்ணிக் கொண்டிருப்பான். ரொம்பவும் ஸாது. பார்த்தால் அசடு போன்று தெரியும். அவனுக்கு கல்வி ஞானம் ஏதும் கிடையாதென்று அனைவரும் கருதினர்.

அவன் ஆசிரமத்தில் பாத்திரங்களைக் கழுவுவது, இடத்தைப் பெருக்கி சுத்தம் செய்வது, குருவின் துணிகளைத் தோய்ப்பது போன்ற சிறு சிறு வேலைகளைச் செய்து வந்தான்.

தனது வேலைகள் முடிந்த பிறகு சங்கரர் பாடம் நடத்துகையில் எட்ட நின்று கூர்ந்து கவனிப்பது அவன் வழக்கம்.

சங்கரரின் உபதேசத்தைப் புரிந்து கொண்ட சீடர்களின் முகமலர்ச்சியைக் கண்டு வியப்பது அவன் வழக்கம். தனக்கு இவ்வுபதேசங்களைப் புரிந்து கொள்ளும் அறிவு இல்லையே என்று அவன் வருந்துவான். ஆனால், அதை யாரிடமும் அவன் வெளிக் காட்டிக் கொள்ள மாட்டான்.

'ஒண்ணும் புரிஞ்சுக்க முடியாத அசடு' என்று மற்றவர்கள் நினைத்தார்கள்.

ஒரு நாள் வழக்கம்போல பாடம் தொடங்க வேண்டிய நேரம் சங்கரர் பாடம் தொடங்காமல் மௌனமாக இருந்தார். பேசா அழகுடன் தக்ஷிணாமூர்த்தி யாக சங்கரர் அமர்ந்திருந்தது சிஷ்யர்களுக்கு ஏன் என்று விளங்கவில்லை.

எல்லாச் சீடர்களும் வந்துவிட்ட பின்னரும் கூட சங்கரர் பாஷ்ய பாடத்தைத் தொடங்கவில்லை. பொறுமை இழந்த பத்மபாதர் தனது ஆசார்யரிடம், ''பாஷ்ய பாடத்தைக் கேட்க ஆவலாய் அமர்ந்திருக்கின்றோம்,'' என்றார்.

''கிரியும் வந்து விடட்டுமே'' என்று சொல்லி மௌனமானார் சங்கரர்.

ஆச்சரியமடைந்தனர் சீடர்கள்.

"கிரிக்கு எப்படியும் ஒன்றும் புரியப் போவதில்லை. ஆகவே, அவனுக்காக காத்திருக்க வேண்டிய அவசியம் என்ன?" என்று இளக்காரமாகக் கேட்டனர்.

சிஷ்யர்களின் வித்யா கர்வம் கண்டு அதிர்ந்து போனார் சங்கரர். விநயத்தை உண்டு பண்ண வேண்டிய கல்வி இப்படி இவர்களுக்கு சக மாணவன் ஒருவனை இளக்காரமாகப் பேசும் அளவுக்கு கர்வத்தை உண்டு பண்ணியிருக்கிறதே என்று மனம் வருந்தினார்.

"ஆனந்த கிரிக்கு ச்ரவண சக்தி ஜாஸ்தி. எதையும் உன்னிப்பாகக் கேட்பவன்" என்று அமைதியாக பதில் சொன்னார். ஆனாலும், ஆசார்யர் சொன்னதன் உட்பொருளை யாரும் உணரவில்லை.

தனது மனதில் பரம கருணையோடு சிஷ்யன் ஆனந்த கிரியை நினைத்தார் சங்கரர்.

அருகிலிருந்த துங்கை ஆற்றில் கிரி அப்போது ஆசார்யரின் உடைகளைத் துவைத்துக் கொண்டிருந்தான். ஆசார்யரின் அருள் அவன் இதயம் முழுவதையும் வியாபிக்கும் புதிய அனுபவம் ஒன்றை கிரி உணர்ந்தான்.

அவனது ச்ரத்தையும், ஆசார்யரின் அருளும் இணைந்து அவன் தன் பூரணத்துவத்தை அனுபவிக்கத் தொடங்கினான். துவைத்த துணிகளை எடுத்துக் கொண்டு திரும்பும்போது ஒரே ஆனந்த நிலை.

அதி அத்புதமான இசை நயத்தோடு ஆழமான தத்துவார்த்தத்தைக் கொண்ட சுலோகங்களைப் பாடியவண்ணம் ஆசார்யர் திருவடிகளில் வந்து வீழ்ந்து வணங்கினான் கிரி.

சில நிமிடங்களுக்கு முன் வரை ஸம்ஸ்க்ருதத்தில் ஒரு வார்த்தை கூட அவன் சரியாகப் பேசிப் பார்த்தறியாத மற்ற சிஷ்யர்கள், கிரி மிகவும், ஆழமான அத்வைதப் பொருளுடன் கூடிய ஸ்தோத்திரங்களை, அதுவும் மிகவும் கடினமாக தோடக சந்தஸில் பாடியதும் அசந்து போய் விட்டனர்.

ஆசார்யரின் அனுக்ரஹத்தை நினைத்து உள்ளம் நெகிழ்ந்தனர்.

ஆசார்யர் சிஷ்யர்கள் அனைவருக்கும் கிரியின் சிரத்தையை பற்றிப் பெருமையோடு கூறினார்.

தோடக சந்தஸில் அவர் பாடிய சுலோகங்கள் எட்டும் தோடகாஷ்டகம் என்ற பெயரிலேயே ப்ரஸித்தி பெற்று விட்டது.

ஆசார்யரைப் பற்றிய ஸ்துதிகளில் தோடகாஷ்டகமே மணிமுடியாகத் திகழ்கிறது.

இந்த எட்டு சுலோகங்களில் இரண்டே இரண்டு சுலோகங்களை இங்கு பார்ப்போம்.

### 2வது சுலோகம்

கருணா வருணாலய பாலய மாம்
பவஸாகர துக்க விதூன ஹ்ருதம் |
ரசயாகில தர்சன தத்துவவிதம்
பவ சங்கர தேசிக மே சரணம் ||

"கருணைக் கடலே! கடல் போன்ற இந்த ஸம்ஸார பந்தத்திலிருந்து மிகுந்த துன்பமடைந்த நெஞ்சையுடைய என்னைக் காப்பாற்ற வேண்டும். எல்லா தத்துவங்களின்

உண்மையான ஸாரத்தை உணர்ந்தவனாக என்னை ஆக்க வேண்டும். சங்கர குருவே நீரே எனக்குப் புகலிடம்"

**6வது பாடல்:**

ஜகதீம் அவிதும் கலிதா க்ருதயோ
விசரந்தி மஹா மஹஸச் சலத: |
அஹிமாம்சு – ரிவாத்ர விமாஸி டீரோ
பவ சங்கர தேசிக மே சரணம் ||

அருட்பெரும் ஜோதியாக இருக்கிற பரமாத்மா ஜனங்களையெல்லாம் அவர்கள் தவறான பாதையில் செல்லாமல் கடைத்தேற்றுவதற்காக பல மஹான்களின் வடிவங்களில் உலவிக் கொண்டிருக்கிறார்கள். அப்படிப் பல மஹான்கள் நக்ஷத்திரங்களாக ப்ரகாசித்தாலும் தாங்கள் ஒருவரே அவர்களது ப்ரகாசமெல்லாம் மங்கும்படியான ஸெளர்ய ப்ரகாசமாக விளங்குகிறீர்கள். சங்கர குருவே தாங்களே எனக்குப் புகலிடம்.

இந்த எட்டு சுலோகங்களிலுமே கடைசி வரி 'பவ சங்கர தேசிக மே சரணம்' என்றே முடிகிறது.

தோடகாஷ்டகத்தின் பெருமையாலே இவருக்கு ஸந்நியாஸ தீக்ஷை தந்தபோது சங்கரர் தோடகாசார்யாள் என்றே நாமகரணம் செய்தார்.

'ச்ருதி ஸார ஸமுத்தரணம்" என்ற அத்வைத க்ரந்தம் தோடகாசார்யர் இயற்றியதாகும். இந்த நூலும் தோடக சந்தஸிலேயே அமைந்துள்ளது.

தேசத்தின் வடகோடியில் பத்ரிநாத் க்ஷேத்திரத்தில் சங்கரர் ஏற்படுத்திய ஜ்யோஷி மடத்தில் தோடகா சார்யரையே முதல் பீடாதிபதியாக சங்கரர் நியமித்தார்.



## அத்தியாயம் - 20



# பஞ்சபாதிகா

சுரேச்வராச்சாரியார் ஒரு முறை சங்கரரிடம் அவரது ப்ரம்ம ஸூத்ர பாஷ்யத்திற்குத் தாம் வார்த்திகம் செய்ய விரும்புவதாக தெரிவித்தார்.

சங்கரரும் அவரே வார்த்திகம் எழுத சரியான நபர் என்று முடிவு செய்து அவரிடத்தில் அப்பொறுப்பை ஒப்படைத்தார்.

முன்னாளில் கர்மவாதியாக இருந்து இல்லற வாழ்வினின்றும் துறவறம் புகுந்த சுரேச்வரர் நைஷ்காம்ய சித்தியின் அனுபவம் இல்லாதவர்.

எனவே அவரை விட பத்மபாதரோ அல்லது ஹஸ்தாமலகரோ தான் வார்த்திகம் செய்ய வேண்டும்

என்று சீடர்கள் பலர் கருதினர். அவர்கள் சங்கரரிடம் சென்று, "சுரேச்வரர் இந்தப் பெரும் பணிக்கு ஏற்றவர் அல்ல. ஞானமுணர்ந்த பத்மபாதரே இப்பணியைச் செய்ய தாங்கள் பணிக்க வேண்டும்" என்றனர்.

சுரேச்வரரிடம் மற்ற சீடர்கள் காட்டிய வெறுப்புணர்வைக் கண்டு சங்கரர் மனம் வருந்தினார்.

எனவே தமது சீடர்களிடம் "பலரும் விரும்பாதபோது இந்த வார்த்திகத்தை சுரேச்வரர்தான் செய்ய வேண்டும் என்று நான் சொல்ல மாட்டேன். தற்போது இந்த வார்த்திக ப்ரச்சினையை இதோடு விட்டு விடுவது நல்லது," என்றார்.

சில நாட்கள் சென்ற பின் பத்மபாதர் தமது குருவிடம் "தங்களது ப்ரம்ம ஸூத்ர பாஷ்யத்திற்கு வார்த்திகம் செய்ய ஹஸ்தாமலகரே ஏற்றவர். அவரைச் செய்யச் சொல்லலாமே," என்று மீண்டும் வார்த்திகப் பிரச்னையைக் கிளப்பினார்.

"ஹஸ்தாமலகர் அந்தர்முக திருஷ்டியுடையவர். எனவே, சாஸ்திராதிகார விவகாரத்திற்கு அவர் ஏற்றவரல்லர். நீங்கள் கேட்பதைப் பார்த்தால் தாங்களே வார்த்திகம் எழுத விரும்புகிறீர்கள் என்று தெரிகிறது. நீங்கள் வார்த்திகம் எழுத விரும்பினால் செய்யலாம்."

பிறகு சுரேச்வரரிடம் நிலைமையை விளக்கிச் சொல்லி வேறு பணிகளைச் செய்யுமாறு ஏவினார்.

சுரேச்வரர் தமது அத்வைத ஞானநிலையை விளக்கும் நைஷ்கர்ம்ய சித்தி, சங்கேஷ்ப சாரீரகம் என்ற இரு பெரும் ஞான நூல்களை இயற்றினார்.

இதனிடையே பத்மபாதர் வார்த்திகம் எழுதும் பணியைத் தொடங்கி விட்டார்.

வார்த்திகத்தை முடித்ததும் ஸ்தல யாத்திரை செய்ய வேண்டும் என்ற அவா அவர் மனதில் எழுந்தது.

சங்கரரிடம் அனுமதி பெற்று சில சக சிஷ்யர்களோடு தென் பாரதத்தில் உள்ள க்ஷேத்திரங்களை தரிசிக்கப் புறப்பட்டார்.

காளஹஸ்தி, காஞ்சிபுரம், ஸ்ரீரங்கம் முதலிய க்ஷேத்திரங்களை தரிசித்துக் கொண்டு இராமேஸ்வரம் நோக்கிப் பயணமானார்.

வழியில் திருவானைக்காவில் இருந்த தம் பூர்வாசிரமத் தாய்மாமன் வீட்டில் தங்கினார்.

அங்குதான் வந்தது ஆபத்து.

மிகவும் பெருமையோடு தனது தாய்மாமனிடம் தான் எழுதியிருந்த வார்த்திகத்தைப் படித்துக் காட்டினார் பத்மபாதர். அவரது பூர்வாசிரமத்துத் தாய்மாமனோ ஒரு பூர்வ மீமாம்ஸகர்.

இவரது நூலில் கர்ம மார்க்கம் கண்டிக்கப் பட்டிருப்பதை அவர் விரும்பவில்லை.

ராமேஸ்வரத்திற்குப் புறப்படும் சமயத்தில் பத்மபாதரிடம் அவரது தாய் மாமன் அவரது வார்த்திகத்தைத் தாம் ஆழ்ந்து படிக்க விரும்புவதாகவும், யாத்திரை முடிந்து திரும்பும் வழியில் நூலைத் திரும்பப் பெற்றுக் கொள்ளலாம் எனவும் கூறினார்.

பத்மபாதரும் தனது மாமனிடத்தில் அந்தச் சுவடிகளைத் தந்து விட்டு யாத்திரை கிளம்பினார்.

யாத்திரை முடிந்து பத்மபாதர் திரும்பி வந்தபோது ஓர் அதிர்ச்சி காத்திருந்தது. தற்செயலாக பூஜை அறையில் இருந்த விளக்குக் கீழே விழுந்து அந்தச் சுவடியும் வேறு சில சுவடிகளும் தீக்கிரையாகி விட்டன என்ற தகவலைத் தாய்மாமன் சொன்னபோது தலை சுற்றியது பத்மபாதருக்கு.

''விஜய டிண்டிம'' என்று சங்கரரே வியந்து பாராட்டிய வார்த்திகம் அது.

எத்தனை முறை யோசித்தாலும் மீண்டும் உரை செய்ய பத்மபாதரால் இயலவில்லை.

ஆம்! அவரது தாய்மாமன் பத்மபாதருக்கு மறதி ஏற்படும் படியாக அபிசார ஹோமம் ஒன்றைச் செய்து விட்டிருந்தார்.

மிகவும் வருந்திய நிலையில் ச்ருங்கேரியில் தங்கியிருந்த தமது குருநாதரிடம் திரும்ப வந்தார் பத்மபாதர்.

இதற்கிடையில் ஆசார்யர் அருகில் இருந்த சுரேச்வரர் ஸூத்ர பாஷ்யத்திற்குத் தம்மால் வார்த்திகம் செய்ய இயலாமற் போயிற்றே என்று வருந்தினார்.

வார்த்திகம் செய்யும் பாக்கியம் பெற்ற பத்மபாதர் மீது பொறாமையுணர்வும் கொண்டார்.

பத்மபாதரின் வார்த்திகம் அழிந்து போக வேண்டுமென்று மானஸீகமாக சபித்தும் விட்டார்.

சுரேச்வரரைத் தன்னருகில் அழைத்த சங்கரர், "வார்த்திகம் செய்து பத்மபாதர் புகழ் அடைந்து விடுவாரே என்று மனதிற்குள் நீர் சபித்தது உமது நிலைக்குத் தகுதியானதல்ல. துறப்பதற்கு அரிதானது இந்தப் புகழ் ஆசை. உமக்கு வர வேண்டிய புகழ் பத்மபாதருக்குப் போவதா? என்ற கெட்ட எண்ணத்தில் நீர் செய்த இச்செயல் ஒரு நல்ல நூல் தேசத்திற்குக் கிடைக்காமல் செய்து விட்டது.

இதில் உமது குற்றம் மட்டும் இல்லை. பத்மபாதரும் உம்மீது கொண்டிருந்த த்வேஷம், தனது தாய்மாமனிடம் கொண்டிருந்த பாசம் ஆகியவற்றால் இந்நூலுக்கு அழிவைத் தேடியுள்ளார்," என்று கூறினார்.

"நீர் செய்த வார்த்திகத்தை ஒரு முறை என்னிடம் படித்துக் காட்டினீர்கள். அந்தப் பகுதிகள் எனது ஞாபகத்தில் உள்ளன. நான் சொல்லச் சொல்ல நீர் எழுதிக் கொள்ளும்,'' என்று பத்மபாதருக்கு ஆறுதல் தந்தார் சங்கரர்.

அந்தப் பகுதி மட்டும் இன்றும் பத்மபாதரின் பஞ்சபாதிகா என்ற பெயரோடு வார்த்திக நூலாக விளங்குகிறது.





அத்தியாயம் - 21

# தாயின் தாளில்

சிறுவயதிலேயே தனது தாயாரைப் பிரிந்து துறவியாகிவிட்ட போதிலும் அவ்வப்போது அம்மாவை நினைத்துக் கொள்வார் சங்கரர்.

எதனையும் துறக்க வல்லவன் கூட தாயினிடத்து வைக்கும் பாசத்தைத் துறப்பதற்கில்லையல்லவா!

சங்கரர் சிருங்கேரியில் தங்கி இருந்தபோது ஒரு நாள் தன் அன்னையின் நினைவு அவருக்கு வந்தது. தாயின் அந்திமக் காலம் நெருங்கி விட்டதை உணர்ந்தார்.

தான் தாய்க்கு ஏற்கெனவே செய்து கொடுத்திருந்த வாக்குறுதியை நிறைவேற்றத் தன் தாயின் அருகில் இருக்க விரும்பி சீடர்களிடம் விடை பெற்றுக் காலடியை நோக்கி விரைந்தார்.

சற்று நினைவு இழந்திருந்த தாயின் அருகில் வந்து, "அம்மா உன் சங்கரன் வந்திருக்கேன். பார்," என்று சொன்னதும் தாயின் கண்கள் மெல்லத் திறந்தன.

பார்வையில் பட்டது அவள் என்றோ பார்த்திருந்த எட்டு வயது பாலகன் சங்கரன் அல்ல.

ஏறத்தாழ முப்பது வயதை நெருங்கிவிட்டிருந்த இளைஞன் சங்கரன்.

மழிக்கப்பட்டிருந்த தலை, இடையில் காவி உடை; கழுத்திலோ ருத்ராக்ஷம்; கையில் த்ரிதண்டம்; சாந்தம் மிகுந்த முகத் தோற்றம்.

ஆர்யாம்பாள் கண்கள் அகலத் திறந்தன. ஆனந்தத்தால் அவள் உள்ளம் நிரம்பி வழிந்தது. தன் மகன் சொன்ன சொல் தவறாமல் வந்து விட்டான். அவன் மடியில்தான் தன் உடல் முடியப் போகிறது.

எட்டு வயதில் ஊர் அறியாச் சிறுவனாக வீட்டை விட்டு வெளியேறியவன் இன்று உலகம் புகழும் ஞானியாகத் திரும்பி வந்திருக்கிறான்.

அந்திம நேரத்தில் அத்வைத உபதேசம் செய்தார் சங்கரர். அவளுக்கு எதுவுமே பிடிபடவில்லை.

அறிவு தெளிவாக இருக்கும் ஒருவராலேயே புரிந்து கொள்ள முடியாத அத்வைதம் அந்திமக் காலத்தில் அறிவு மயங்கிய நிலையில் புரிபடுமா? என்ன?

நிர்க்குண உபாஸனை நிர்யாண ஸமயத்தில் கை கொடுக்காது. ஸகுண உபாஸனைதான ஸாதாரண மானவர்களுக்கு சாகும் நேரத்தில் கை கொடுக்கும்.

சங்கரரின் தாயாக இருந்தாலும் ஆர்யாம்பா அஞ்ஞானமிக்க ஸாதாரணப் பெண்மணிதானே.

சங்கரர் சிவபெருமானின் உருவத்தை தியானித்து உபதேசம் செய்தார். மரண பயம் யாரை விட்டது?

சிவனது பூத கணங்கள் தன்னை அழைத்துச் செல்ல வந்தபோது ஆர்யாம்பாள் அலறினாள்.

ம்ருத்யுஞ்ஜயனான பரமேச்வரன் அவளது மனதுக்குப் பிடித்தமான உருவத்தில் தான் காட்சியளிக்க விரும்பினான்.

அவள் காலமெல்லாம் காலடியில் எழுந்தருளியிருந்த கிருஷ்ணனையே வழிபட்டு வந்தவள் அல்லவா?

எனவே அந்திம நேரத்தில் அவனது ஸ்மரணைதான் அவளுக்குக் கை கொடுக்கும்.

சங்கரரும் தாயின் அந்திம ஆசையைப் புரிந்து கொண்டு ஸ்ரீமத் அச்யுதாஷ்டகம் பாடினார்.

மகனின் இனிமையான கானத்தில் லயித்துப் போனாள் ஆர்யாம்பா. அவள் ஆன்மாவோ அச்யுதனின் திருவடிகளில் லயிக்கத் தொடங்கியது.

அச்யுதாச்யுத ஹரே பரமாத்மன்
ராம கிருஷ்ண புருஷோத்தம விஷ்ணோ |
வாஸுதேவ பகவன் அநிருத்த
ஸ்ரீபதே சமய துக்கம் அசேஷம் ||

என்று தொடங்கி

அச்யுதாஷ்டகம் இதம் ரமணீயம்
நிர்மிதம் பவபயம் விநிஹந்தும் |
ய: படேத் விஷய வ்ருத்தி நிவ்ருத்தி
ஜன்ம துக்கம் அகிலம் ஸ ஜஹாதி ||

என்று முடிகிறது இந்த சுலோகம்.



ஸ்ரீகிருஷ்ணஸகுணஉபாஸனையில் மனம் லயித்துப் போய் அவள் அவ்வினிய அனுபவத்தில் கொஞ்சம் கொஞ்சமாக கரைந்து கொண்டிருந்தாள்.

அவளை வைகுந்தத்திற்கு கொண்டு செல்ல விஷ்ணு தூதர்கள் வந்தனர்.

அவளது ஆன்மா பரம் பொருளோடு இரண்டறக் கலக்கவும், பூதவுடல் அசைவற்றுக் கிடந்தது சங்கரரது மடியில்.

தாயின் மறைவில் ஆன்ம ஞானியான சங்கரரும் சிறிது கலங்கினார்.

தாயாருக்கு எட்டு வயதில் தான் தந்த வாக்குப்படி அவளது சரீரத்திற்கு தஹன ஸம்ஸ்காரம் செய்ய விரும்பினார்.

அன்னையின் அந்திமக் கிரியைகளைச் செய்ய அக்கம் பக்கத்தவரின் உதவியை நாடினார் சங்கரர். பிள்ளையில்லாத சொத்துக்கு சொந்தம் கொண்டாட எண்ணியிருந்த உற்றார் உறவினர் ஆர்யாம்பாளின் கடைசி காலத்தில் சங்கரர் வந்தது தாயின் சொத்து தனக்கே என்று உரிமை கொண்டாடவே என்று எண்ணினர் அந்த அல்பர்கள். தங்கள் எண்ணத்தில் எங்கே சங்கரர் மண்ணைப் போட்டு விடுவாரோ என்று உலகாயத நோக்கில் கருதி அவருக்கு உதவி செய்ய மறுத்து விட்டனர்.

யார் உடலை தஹனம் செய்கிறார்களோ அவர்களுக்கே இறந்தவரின் சொத்து என்ற நியதி இருந்ததால் தாயாதிகள் எல்லோரும் தாங்கள்தாம் நெருப்பு போடுவோம் என்று ஒருவரோடு ஒருவர் போட்டி போட்டனர்.

ஆனால், சங்கரரோ தாம் ஏற்கெனவே அன்னைக்கு வாக்குத் தந்திருந்தபடி தானே உடலை தஹனம் செய்யப் போவதாகக் கூறினார்.

ஸந்நியாஸிக்குத் தாயாருக்கு தஹன ஸம்ஸ்காரம் செய்யும் உரிமை கிடையாது என்று சாஸ்திர வாதம் புரிந்தனர். ஆனால், சங்கரரோ தமது தாயின் கடைசி ஆசை அது என்றும் தாம் ஏற்கெனவே அதனை நிறைவேற்ற வாக்குத் தந்திருப்பதாகவும் வாதாடினார்.

மிகவும் பிடிவாதமாக தான்தான் அந்திமக் கிரியைகளைச் செய்வேன் என்று உறுதியாக இருந்த சங்கரருக்கு, தாயாரின் தஹன ஸம்ஸ்காரம் நடைபெற யாரும் எவ்வித உதவியும் செய்யக் கூடாது என்று ஊர் மக்கள் முடிவெடுத்தனர். அந்திம ஸம்ஸ்காரங்கள் செய்ய ஊர் புரோஹிதர்கள் யாரும் முன்வரவில்லை.

மனந்தளராத சங்கரர் அவர்கள் உதவி இன்றி தாமே தமது வீட்டுத் தோட்டத்திலேயே அன்னைக்கு ஈமக்கிரியைகள் செய்ய முடிவெடுத்தார்.

ஆசார்யாளின் ப்ரார்த்தனையை ஏற்று அக்னி பகவான் ஆர்யாம்பாவின் சரீரத்தை ஆஹுதியாக ஏற்றுக் கொண்டார்.

அன்னையின் அந்திமக் கிரியைகள் முறையாக முடிந்த பின்னர் தனக்கு உதவாத தனது ஊராரை சபித்தார்.

அவர்கள் வேதம் கற்கும் தகுதியை இழப்பார்கள் என்று ஒரு சாபம்.

ஸந்நியாஸிகள் யாரும் அவ்வூராரிடம் பிக்ஷை கேட்டு வர மாட்டார்கள். அதாவது ஸந்நியாஸிகளுக்கு பிக்ஷையிடும் பாக்யம் அவர்களுக்குக் கிடையாது.

அவர்கள் இல்லங்களில் யாரேனும் இறந்து போனால் அவர்களது உடல்கள் அவரரவர் வீட்டுக் கொல்லைப் புறத்திலேயே வைக்கப்பட்டு தஹனம் நடைபெற வேண்டும்.

**பரம ஞானியான சங்கரர் இங்ஙனம் சபித்தது முறையா?**

சங்கரர் நம்மைப் போன்ற ஒரு மனிதர் என்பது இந்நிகழ்ச்சியினின்று புலப்படுகிறது.

நல்லது, கெட்டது இவை இரண்டிற்கும் அப்பாற் பட்ட அத்வைதியான சங்கரர், ஆன்ம ஞானியரை விரோதிக்கும் சமுதாயம் விரைவில் ஞானமற்றுப் போகும் என்பதை எடுத்துக் காட்டவே இதனைச் செய்தார்.

இந்தச் சாபம் சிருங்கேரி மடத்தின் முப்பத்து மூன்றாம் தலைமுறையில் பீடாதிபதியாக இருந்த சிவ அபிநவ நரசிம்மபாரதி என்பவரால் விமோசனம் ஆயிற்று என்பர்.

ஊரே பஹிஷ்கரித்த ஆர்யாம்பாவின் தஹன ஸம்ஸ்காரத்தில் இரண்டே இரண்டு குடும்பத்தினர் மட்டும் பங்கேற்றனராம். சங்கரர் தனது தாயின் சரீரத்தைக் கொல்லைப் புறத்திற்குத் தூக்கிச் செல்கையில் சரீரத்தின் தலைமாட்டில் கைலாகு கொடுத்து தூக்கியவர்கள் குடும்பம், ''தலையாற்றுப் பள்ளி'' என்றும், கால் மாட்டில் கைலாகு கொடுத்துத் தூக்கியவர்கள் குடும்பம் ''காப்பள்ளி'' என்றும் இன்றும் அறியப்படுகிறார்கள்.

நம்பூதிரிகளிடையே இறந்தோரை வீட்டுத் தோட்டத்திலேயே வைத்து எரிக்கும் வழக்கம் பல குடும்பங்களில் அண்மைக் காலம் வரை இருந்திருக்கிறது.

*அன்னையின் அந்திமக் கிரியைகளைச் செய்ய அக்கம் பக்கத்தவரின் உதவியை நாடினார் சங்கரர். பிள்ளையில்லாத சொத்துக்கு சொந்தம் கொண்டாட எண்ணியிருந்த உற்றார் உறவினர் ஆர்யாம்பாளின் கடைசி காலத்தில் சங்கரர் வந்தது தாயின் சொத்து தனக்கே என்று உரிமை கொண்டாடவே என்று எண்ணினர் அந்த அல்பர்கள். தங்கள் எண்ணத்தில் எங்கே சங்கரர் மண்ணைப் போட்டு விடுவாரோ என்று உலகாயத நோக்கில் கருதி அவருக்கு உதவி செய்ய மறுத்து விட்டனர்.*

*யார் உடலை தஹனம் செய்கிறார்களோ அவர்களுக்கே இறந்தவரின் சொத்து என்ற நியதி இருந்ததால் தாயாதிகள் எல்லோரும் தாங்கள்தாம் நெருப்பு போடுவோம் என்று ஒருவரோடு ஒருவர் போட்டி போட்டனர்.*

*ஆனால், சங்கரரோ தாம் ஏற்கெனவே அன்னைக்கு வாக்குத் தந்திருந்தபடி தானே உடலை தஹனம் செய்யப் போவதாகக் கூறினார்.*

*ஸந்நியாஸிக்குத் தாயாருக்கு தஹன ஸம்ஸ்காரம் செய்யும் உரிமை கிடையாது என்று சாஸ்திர வாதம் புரிந்தனர். ஆனால், சங்கரரோ தமது தாயின் கடைசி ஆசை அது என்றும் தாம் ஏற்கெனவே அதனை நிறைவேற்ற வாக்குத் தந்திருப்பதாகவும் வாதாடினார்.*

*மிகவும் பிடிவாதமாக தான்தான் அந்திமக் கிரியைகளைச் செய்வேன் என்று உறுதியாக இருந்த சங்கரருக்கு, தாயாரின் தஹன ஸம்ஸ்காரம் நடைபெற யாரும் எவ்வித உதவியும் செய்யக் கூடாது என்று ஊர் மக்கள் முடிவெடுத்தனர். அந்திம ஸம்ஸ்காரங்கள் செய்ய ஊர் புரோஹிதர்கள் யாரும் முன்வரவில்லை.*

*மனந்தளராத சங்கரர் அவர்கள் உதவி இன்றி தாமே தமது வீட்டுத் தோட்டத்திலேயே அன்னைக்கு ஈமக்கிரியைகள் செய்ய முடிவெடுத்தார்.*

*ஆசார்யாளின் ப்ரார்த்தனையை ஏற்று அக்னி பகவான் ஆர்யாம்பாவின் சரீரத்தை ஆஹுதியாக ஏற்றுக் கொண்டார்.*

அன்னையின் அந்திமக் கிரியைகள் முறையாக முடிந்த பின்னர் தனக்கு உதவாத தனது ஊராரை சபித்தார்.

அவர்கள் வேதம் கற்கும் தகுதியை இழப்பார்கள் என்று ஒரு சாபம்.

ஸந்நியாஸிகள் யாரும் அவ்வூராரிடம் பிக்ஷை கேட்டு வர மாட்டார்கள். அதாவது ஸந்நியாஸிகளுக்கு பிக்ஷையிடும் பாக்யம் அவர்களுக்குக் கிடையாது.

அவர்கள் இல்லங்களில் யாரேனும் இறந்து போனால் அவர்களது உடல்கள் அவரரவர் வீட்டுக் கொல்லைப் புறத்திலேயே வைக்கப்பட்டு தஹனம் நடைபெற வேண்டும்.

**பரம ஞானியான சங்கரர் இங்ஙனம் சபித்தது முறையா?**

சங்கரர் நம்மைப் போன்ற ஒரு மனிதர் என்பது இந்நிகழ்ச்சியினின்று புலப்படுகிறது.

நல்லது, கெட்டது இவை இரண்டிற்கும் அப்பாற் பட்ட அத்வைதியான சங்கரர், ஆன்ம ஞானியரை விரோதிக்கும் சமுதாயம் விரைவில் ஞானமற்றுப் போகும் என்பதை எடுத்துக் காட்டவே இதனைச் செய்தார்.

இந்தச் சாபம் சிருங்கேரி மடத்தின் முப்பத்து மூன்றாம் தலைமுறையில் பீடாதிபதியாக இருந்த சிவ அபிநவ நரசிம்மபாரதி என்பவரால் விமோசனம் ஆயிற்று என்பர்.

ஊரே பஹிஷ்கரித்த ஆர்யாம்பாவின் தஹன ஸம்ஸ்காரத்தில் இரண்டே இரண்டு குடும்பத்தினர் மட்டும் பங்கேற்றனராம். சங்கரர் தனது தாயின் சரீரத்தைக் கொல்லைப் புறத்திற்குத் தூக்கிச் செல்கையில் சரீரத்தின் தலைமாட்டில் கைலாகு கொடுத்து தூக்கியவர்கள் குடும்பம், ''தலையாற்றுப் பள்ளி'' என்றும், கால் மாட்டில் கைலாகு கொடுத்துத் தூக்கியவர்கள் குடும்பம் ''காப்பள்ளி'' என்றும் இன்றும் அறியப்படுகிறார்கள்.

நம்பூதிரிகளிடையே இறந்தோரை வீட்டுத் தோட்டத்திலேயே வைத்து எரிக்கும் வழக்கம் பல குடும்பங்களில் அண்மைக் காலம் வரை இருந்திருக்கிறது.



அத்தியாயம் - 22

# சங்கரரின் திக்விஜயம்

அன்னைக்குத் தான் ஆற்ற வேண்டிய அந்திமக் கிரியைகளைச் செய்து திரும்பிய சங்கரர் நாடு முழுவதும் யாத்திரை செய்யும் நோக்குடன் திக்விஜய யாத்திரை ஒன்றை மேற்கொண்டார்.

ராமேச்வரத்திலிருந்து தொடங்கிய அவரது யாத்திரையில் ஏராளமான துறவிச் சீடர்களும், இல்லறச் சீடர்களும் மற்றும் மன்னர்களும், வியாபாரிகளும் கலந்து கொண்டனர்.

ஒவ்வொரு கிராமத்திலும் நகரத்திலும் அவருக்கு மாபெரும் வரவேற்பு அளிக்கப்பட்டது.

அவரது திக்விஜயத்தைப் பற்றி வெவ்வேறு நூல்கள் வெவ்வேறு விதமாகக் குறிக்கின்றன.

திக்விஜய யாத்திரையில் ராமேச்வரத்தில் சங்கரர் ஓர் அற்புதமான செயலைச் செய்தார். ஆன்மிக தேசிய

ஒருமைப்பாட்டை மனதில் கொண்டு அவர் செய்த செயல் இது.

ராமேச்வரம் ஆலயத்தில் பூஜை செய்யும் உரிமை மஹராஷ்ட்ர ப்ராம்மணர்களுக்கே என்ற நிலையை ஏற்படுத்தினார். அதற்கென ஒரு சில மராத்தி பேசும் ப்ராம்மணக் குடும்பங்களை ராமேசுவரத்தில் குடியேறச் செய்தார்.

இந்த முறை தஞ்சை மராட்டியர் வசம் ஆன பின்னரே ஏற்பட்டது என்பது ஒரு வாதம்.

ஆனால், தஞ்சையை ஆண்ட மராட்டியர்கள் தஞ்சை ப்ரஹதீசுவரர் கோவிலிலேயே அந்த முறையை மாற்றாத போது ராமசேுவரத்தில் செய்திருக்க வாய்ப்பில்லை.

எனவே அது ஆதிசங்கரர் ஏற்படுத்திய மரபுதான் என்பதில் சந்தேகம் இல்லை.

அது மட்டுமல்ல. மராத்திய அர்ச்சகர்களைத் தவிர நேபாள மஹாராஜாவும், ச்ருங்கேரி பீடாதிபதி ஆகிய இருவர் மட்டுமே கர்ப்பக்ருஹத்தில் உள்ள சிவலிங்கத்தைத் தொட்டுப் பூஜை செய்ய உரிமை உண்டு என்றதொரு நிலையையும் ஏற்படுத்தினார்.

மஹாராஷ்ட்ரத்திலிருந்து வந்த அர்ச்சகர்கள் கோயிலில் பூஜை செய்ய ச்ருங்கேரி பீடாதிபதியினிடத்தில் தான் தீக்ஷை பெற வேண்டும் என்ற நியதியை ஏற்படுத்தினார்.

இது இன்று வரை தொடர்கிறது.

தமது யாத்திரையில் ஸ்ரீரங்கத்தில் ஜன ஆகர்ஷண யந்த்ரத்தை ப்ரதிஷ்டை செய்ததாகச் சொல்வார்கள். இதனை வைணவர்கள் யாரும் ஏற்பதில்லை.

அதுபோலவே திருமலையில் எழுந்தருளியுள்ள வேங்கடவன் ஸந்நிதியிலும் தன ஆகர்ஷண யந்த்ரத்தை ப்ரதிஷ்டை செய்ததாகவும் ஒரு தகவல் உண்டு.

ஆனால், இதுவும் வைணவர்கள் ஏற்கிற விஷயம் அல்ல.

காஞ்சிபுரத்தில் தாந்த்ரீக சம்பிராதாயம் தலைதூக்கி நின்றது. வாமசார வழிபாட்டு முறைகளும் பெருகி யிருந்தன.

காமாக்ஷி தேவி உக்ர கலைகளோடு வாமாசார வழிபாட்டுக்குரிய தேவதையாக இருந்தாள்.

சக்தி க்ஷேத்ரங்களின் கேந்திர ஸ்தானத்தில் உள்ள தேவியை சாந்த ஸ்வரூபிணியாக மாற்றினார்.

பத்ரிநாத க்ஷேத்திரத்தில் நாராயண மூர்த்தியை ப்ரதிஷ்டை செய்தார். அலகநந்தா நதியில் புதைந்திருந்த அந்த மூர்த்தியை சங்கரரர் ப்ரதிஷ்டை செய்ததோடு கேரளத்து நம்பூதிரி ஒருவரே அங்கு பூஜை செய்ய வேண்டும் என்ற நியதியை ஏற்படுத்தினார்.

இன்றும் ராவல் என்று அழைக்கப்படும் அந்த அர்ச்சகர் கேரள நம்பூதிரி குடும்பத்திலிருந்தே நியமிக்கப் படுகிறார்.

பாரத தேசத்தில் சங்கரர் போகாத இடமே இல்லை என்று கூறலாம்.

அவர் ஆங்காங்கு பக்தி ஸ்தோத்திரங்களையும் செய்தார்.

புரியில் ஜகன்னாதரை தரிசித்த சங்கரர் ஜகந்நா தாஷ்டகம் என்கிற பக்தி ஸ்தோத்திரத்தையும், பண்டரீபுரத்துக்கு விஜயம் செய்தபோது பாண்டுரங் காஷ்டகம் என்ற பக்தி ஸ்தோத்திரத்தையும் அருளினார்.

திருச்செந்தூரில் தான் ஸுப்ரமண்ய புஜங்கம் பாடினார் என்று தெரிகிறது.

ஹரித்துவாரில் கங்காஷ்டகத்தையும், காசியில் அன்னபூரணி ஸ்தோத்திரத்தையும், மணிகர்ணிகாஷ்டகத்தையும் பாடியிருக்கிறார்.

மதுரையில் மீனாக்ஷி பஞ்சரத்தனம் பாடினார்.

பத்ரிநாத்தில் தமது குரு கோவிந்த பகவத் பாதரையும், பரமகுரு கௌட பாதரையும் தரிசித்து மகிழ்ந்தார். அப்போதுதான் தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்திரத்தைப்

பாடினாராம். அது பத்தொன்பது சுலோகங்களைக் கொண்டது.

சிவஸ்தலங்கள் நாடு முழுவதும் விரவிக் கிடக்கின்றன. தமிழகத்தில் பஞ்சபூத ஸ்தலங்கள் என்பதாக விஷேசித்து சில சிவஸ்தலங்களைக் குறிப்பிடுவதுபோல ஜ்யோதிர்லிங்க க்ஷேத்திரங்கள் என்பதாக சில சிவ க்ஷேத்திரங்கள் ப்ரக்யாதி பெற்றுள்ளன. இவற்றின் எண்ணிக்கை பன்னிரண்டு ஆகும்.

ஸோமநாதம், ஸ்ரீசைலம், மஹாகாளம், ஓங்காரம், பரலி, நாகேசம், காசி, பீமசங்கரம், ராமேச்வரம், த்ரயம்பகம், கேதாரம், குஸ்ருணேச்வரம் என்ற இந்த எல்லா ஸ்தலங்களுக்கும் சங்கரர் நேரில் சென்று, "த்வாதச லிங்க ஸ்தோத்ரம்" என்பதாகவும் பாடியிருக்கிறார்.





அத்தியாயம் - 23



# பஜகோவிந்தம்

மீண்டும் காசியில் தங்கும் வாய்ப்பு சங்கரருக்கு கிட்டியது. அப்போது ஒருநாள் வழக்கம்போல கங்கையில் நீராடிவிட்டு, விசுவநாதரை தரிசித்து விட்டுத் தனது இருப்பிடம் நோக்கி விரைந்து கொண்டிருந்தார் சங்கரர். பல சீடர்களும் உடன் வந்து கொண்டிருந்தனர்.

ஒரு வீட்டின் திண்ணையில் அமர்ந்து கொண்டு தொண்டுக் கிழவரான ஒருவர் "டுக்ருங் கரணே, டுக்ருங் கரணே" என்ற தாது பாடத்தைத் திரும்பத் திரும்பச் சொல்லி மனப்பாடம் செய்து கொண்டிருந்தார். இந்த வயதில் இவர் ஏன் இந்த இலக்கண பாடத்தை

உருப்போட்டுக் கொண்டிருக்கிறார் என்பது சங்கரருக்குப் புரியவில்லை.

சங்கரருக்கு அக்கிழவரிடத்தில் மிகுந்த அனுதாபம் ஏற்பட்டது.

டுக்ருண் என்பது தாது. கரணே என்பது அதன் பொருள். டுக்ருண் என்றால் கரணே, டுக்ருண் என்றால் கரணே என்று திரும்பத் திரும்பச் சொல்லி இவர் அடையப் போகும் பயன் என்ன?

சாகிற காலத்தில் கூட வாழ்வின் லக்ஷியமாகிய ஆண்டவனை அடைவதற்கு வழி தேடுவதை விட்டு விட்டு இலக்கண பாடத்தைப் படித்துக் கொண்டிருந்த அந்த மனிதரைக் கண்டு இரக்கப்படாமல் என்ன செய்வது?

கருணையினால் அம்மூட மனிதனுக்கு ஆண்டவனை நாடும்படி உபதேசிக்கும் வகையில் பாடத் தொடங்கினார்.

பஜ கோவிந்தம் பஜ கோவிந்தம்
கோவிந்தம் பஜ மூடமதே! |
ஸம்ப்ராப்தே ஸந்நிஹிதே காலே
நஹி நஹி ரக்ஷதி டுக்ருங்கரணே ||

*கோவிந்தனை அறிவாய்*
*கோவிந்தனைப் பணிவாய்*
*மரணம் வந்து முன் நிற்கும்போது*
*முன்வந்து காக்குமோ இலக்கணப் பாடம்*

கோவிந்தம் பஜ என்பதற்கு "கோவிந்தனை வழிபடு" என்றும் ஓர் அர்த்தம் உண்டு. பக்திப்பூர்வமான பார்வையில் இதுவே பொருத்தமும் ஆகும்.

டுக்ருண் என்ற தாது செயல்படு என்ற அர்த்தத்தில் அமைந்துள்ளது. கர்மாக்கள் ஏதும் காலன் வந்து அழைக்கும் கடைசி நேரத்தில் கை கொடுக்க மாட்டா.

எனவே பக்தியும் ஞானமுமே மனிதன் மரண காலத்தில் கைக்கொள்ள வேண்டியது என்பதை அறிவுறுத்தும் பன்னிரண்டு பாடல்கள் சங்கரரின் திருவாயிலிருந்து வெளிவந்தன.

இந்தப் பன்னிரண்டு பாடல்களும் த்வாதச மஞ்ஜரிகா ஸ்தோத்ரம் என்ற பெயரில் வழங்கப்பட்டன.

சங்கரர் பாடியது 12 சுலோகங்கள் மட்டுமே என்பதை மெய்ப்பிப்பது போல 13வது சுலோகம் ஒன்று உள்ளது.

த்வாதச – மஜ்ஜரிகாபி: அசேஷ:
கதிதோ வையாகரணஸ்யைஷ: |
உபதேசோ யூத் வித்யா நிபுணை:
ஸ்ரீமத் சங்கர பகவத் சரணை: ||

## இதன் பொருள்:

பூங்கொத்துப் போன்ற இப்பன்னிரண்டு சுலோகங்களால் ஒரு வியாகரண பண்டிதருக்குப் பரிபூர்ணமான உபதேசம் வித்யைகளில் பூரண அறிவு பெற்ற ஸ்ரீ சங்கர பகவத் பாதரால் கூறியருளப்பட்டது.

அப்போது சங்கரருடன் கூட வந்த சிஷ்யர்களில் ஹஸ்தாமலகர் என்பவர் அங்கம் கலிதம் பலிதம் முண்டம் என்று தொடங்கும் பாடலைப் பாடினார்.

அதனைத் தொடர்ந்து ஸுபோதர், வார்த்திகக்காரர், நித்யானந்தர், ஆனந்த கிரி, த்ருட பக்தர், நித்யநாதர், யோகானந்தர், ஸுரேந்திரர், மேதாநிதி, பாரதீவம்சர், ஸுமதி ஆகியோர் பதினேழு பாடல்களைப் பாடினர்.

இந்தப் பாடல்கள் சர்ப்பட பஞ்ஜரிகா ஸ்தோத்ரம் என்ற பெயரில் வழங்கப்பட்டன.

இதற்கு சாக்ஷியாக விளங்கும் பாடல் ஒன்று உள்ளது.

மூடக கச்சன வையாகரணோ
டுக்ருண் கரணாத் அத்யயன துரீண |
ஸ்ரீமத் சங்கர பகவத் சிஷ்யைர்
போதித ஆஸீத் சோதித கரண: ||

## இதன் பொருளாவது:

"டுக்ருங்கரணே" என்ற வியாகரண தாது பாடங்களை அத்தியயனம் செய்வதையே பெரிய காரியமாகக் கொண்டிருந்த ஒரு மூடன், ஸ்ரீ சங்கர பகவத்பாதருடைய

சீடர்களால் இவ்வாறு ஞானோபதேசம் செய்யப் பெற்றுத் தெளிந்த அந்தக் கரணம் உடையவனானான்.

நிறைவாக இன்னுமொரு பாடலும் உள்ளது.

பஜகோவிந்தம் பஜகோவிந்தம்
பஜகோவிந்தம் மூடமதே |
நாம ஸ்மரணாத் அன்யம் உபாயம்
நஹி பச்யாமோ பவதரணே ||

## இதன் பொருளாவது:

விவேகமற்றவனே! கோவிந்தனை வழிபடு. கோவிந்தனை வழிபடு. கோவிந்தனையே துதிப்பாயாக. பிறவிக் கடலைக் கடப்பதற்கு நாம ஸ்மரணையைத் தவிர வேறு உபாயத்தை நாங்கள் காணவில்லை.

பகவான் ஸ்ரீ கிருஷ்ணர் தனது கீதோபதேசத்தில் அர்ஜுனனிடம் ஒரு விஷயத்தைத் தெளிவுப்படுத்துகிறார்.

யம் யம் வாபி ஸ்மரன்பாவம்
த்யஜத்யந்தே கலேவரம் |
தம் தமேவைதி கௌந் தேய
ஸதா தத்பாவ பாவித: ||

தஸ்மாத் ஸர்வேஷு காலேஷு
மாம் அனுஸ்மர யுத்ய ச |
மய்யர்ப்பித மனோபுத்திர்
மாமேவைஷ்யஸ்ய ஸம்சயம் ||

எந்தப் பொருளை நினைத்த வண்ணம் ஒருவன் தன் உடலை உகுக்குகிறானோ அந்தப் பொருளையே அவன் அடைவான்.

ஆகையால் எல்லாக் காலத்திலும் நீ என்னையே நினைத்துக் கொண்டு போரிடுவாயாக. மனதையும் புத்தியையும் என்னிடத்தில் அர்ப்பணித்து நீ செயலாற்றினால் என்னையே அடைவாய் என்பதில் எவ்வித சந்தேகமும் இல்லை.

சிஷ்யர்கள் பாடிய பாடல்களின் தொகுப்பிற்கு சர்ப்பட பஞ்சரிகா என்று பெயர். சர்ப்பட என்பதற்கு ஓங்கி அறைதல் என்று பெயர். கை நீட்டி அடிப்பது.

இதுவும் அறியாமையை அறைந்து விரட்டுவது என்ற பொருளிலேயே பயன்படுத்தப்பட்டுள்ளது.

ஒரு காலத்தில் இந்த 34 பாடல்களின் தொகுப்பிற்கும் **மோஹ முத்கரம்:** என்று பெயர் இருந்திருக்கிறது.

மோஹ என்றால் அறிவில் ஏற்படும் குழப்பம். அதாவது எதையும் பகுத்து அறியும் தெளிந்த அறிவு இன்மை. புத்தி மயக்கம் என்றும் அர்த்தம் பண்ணிக் கொள்ளலாம்.

முத்கர: என்றால் சம்மட்டி.

இந்த நூலில் தரப்பட்டுள்ள உபதேசங்கள் மோஹத்தை அடித்துத் தூள் தூளாக்கும் சம்மட்டி போன்றவை.

அதனாலேயே இந்த நூல் மோஹ முத்கர: என்று அழைக்கப்பட்டது.

ஆனால் காலப்போக்கில் இந்த நூல் முதல் சுலோகத்தில் வரும் **பஜகோவிந்தம்** என்ற சொற்றொடரின் பெயரிலேயே அறியலாயிற்று.

நிறைவுப் பாடலிலும் அதாவது 34வது பாடலிலும் **பஜகோவிந்தம்** என்ற சொற்றொடரே பயன்படுத்தப் பட்டுள்ளது.

கோவிந்தனை அறிவாய்; கோவிந்தனைத் துதிப்பாய்; கோவிந்தனையே நினைப்பாய்; நிறைவாக நீயே கோவிந்தனாகவே அவனில் கரைந்து போவாய் என்பதுதான் இந்த 34 பாடல்களின் சாரம் என்பதால் பஜகோவிந்தம் என்று இந்த நூலுக்கு அமைந்த பெயர் மிக மிகப் பொருத்தமானதே.

ஆழ்ந்த அத்வைத கருத்தை விளக்கும் மிக அற்புதமான எளிய பாடல்களோடு கூடிய இந்த பஜ கோவிந்தத்தைக் குழந்தைகளுக்கு மனப்பாடம் செய்து வைப்பது நல்லது.

ஒரு காலத்தில் 34 பாடல்களைக் கொண்டிருந்த இப்பாடல் தொகுதி தற்போது பரவலாக 31 பாடல்களை மட்டுமே கொண்டுள்ளது.



அத்தியாயம் - 24

# சர்வக்ஞ பீடம்

காஷ்மீரத்திற்கு சங்கரர் விஜயம் செய்ததை இன்றும் நினைவுப்படுத்தும் வகையில் ஸ்ரீநகரில் 'சங்கராசார்ய கிரி' என்றே ஒரு குன்று இருக்கிறது.

காஷ்மீரத்திற்கு சங்கரர் விஜயம் செய்த காலத்தில் சாரதா பீடம் என்றொரு அற்புதமான அறிவு திருக்கோயில் அமைந்திருந்தது. இந்தக் கோயிலுக்கு நான்கு புறங்களிலும் வாயில்கள் உண்டு. சிற்ப அழகுகள் பொருந்தி நேர்த்தியாக அமைக்கப்பட்டிருந்த இக்கலைக் கோயிலின் உள்ளே உயர்ந்ததொரு அரியணையும் இருந்தது.

பல படிகள் அமைத்துக் கட்டப்பட்டதாகும் இந்த அரியணை.

இதனை சர்வக்ஞ பீடம் என்று பெருமையோடு அழைத்து வந்தனர். நாட்டின் எந்தப் பகுதியிலிருந்து உயர்ந்த மேதைகள் யாராவது வந்தால் அவர்கள் இந்த ஆலயத்தில் இருந்த அறிஞர்கள் கேட்கும் கேள்விகளுக்கு

சரியான பதில் அளித்தால் அவர்களை சர்வக்ஞ பீடத்தில் அமர்த்தி கௌரவம் செய்யும் பழக்கமும் இருந்தது.

அந்தக் கலைக் கோயிலின் தென்புறத்து வாயில் நீங்கலாக மற்ற வாயில்கள் திறந்தே இருந்தன.

அந்தந்த திசையிலிருந்து அறிஞர்கள் வந்து அந்தந்த வாயில் வழியாக உள்ளே சென்று சர்வக்ஞ பீடம் ஏறியதற்கான அறிகுறியாக அந்த வாயில்கள் திறந்து கிடந்தன.

ஆனால், தென்னகத்திலிருந்து எந்த ஒரு அறிஞரும் அதுவரை அங்கு செல்லாததால் தெற்கு வாசல் மூடியே கிடந்தது.

சங்கரர் தெற்கு வாசலை நெருங்கியதும் பல அறிஞர்கள் பல்வேறு துறைகளில் நிபுணத்துவம் பெற்றிருந்தவர்கள் சங்கரரிடத்தில் பல நுணுக்கமான கேள்விகளைக் கேட்டனர். எல்லாக் கேள்விகளுக்கும் சரியான பதில் தந்ததும் தெற்கு வாயில் கதவுகள் திறந்தன.

உள்ளே சாங்கியம், வைசேஷிகம், யோகம், முதலான ஆறு விதமான தத்துவங்களில் பலர் பல கேள்விகளைக் கேட்டனர்.

ஷட் தரிசன விற்பன்னர்கள் அனைவரும் வாயடைத்துப் போகும் வண்ணம் அவர்களது கேள்வி களுக்கு பதிலளித்த சங்கரரை சகல மரியாதைகளோடும் அவர்கள் அழைத்துச் சென்று சர்வக்ஞ பீடத்தில் அமர்த்தி கௌரவித்தனர்.

இந்த பீடத்திற்கு அதிதேவதையான சாரதையும் சங்கரரை சோதிக்கத் தவறவில்லை.

பத்மபாதரும், சுரேச்வரரும் இருபுறமும் நிற்க சங்கரர் சாரதா சர்வக்ஞ பீடத்தில் அமர்ந்து கம்பீரமாக காட்சி தந்ததைக் கண்ட காஷ்மீர பண்டிதர்கள் மனம் மகிழ்ந்தனர்.

சங்கரர் ஸர்வக்ஞ பீடம் ஏறும் முன் நடந்த இன்னொரு சம்பவத்தை இங்கு குறிப்பிட்டாக வேண்டும்.

அமரஸிம்ஹன் என்ற ஜைனமத ஆசார்யர் ஒருவர். சங்கரரோடு வாது செய்ய வந்தார். தனக்கும் சங்கரருக்கும்

நடுவில் திரை ஒன்றைக் கட்டி விட்டுத் திரைக்குப் பின்னிருந்து வாதம் புரிந்தார்.

ஈடு இணையற்ற புலமையுடன் அமரஸிம்ஹன் வாதிடுவதைக் கண்டு சங்கரர் அதிர்ச்சி அடைந்தார். ஞானக் கண் கொண்டு பார்த்தபோது ஒரு விஷயம் புரிந்தது. ஒரு பொற்கலசத்தில் வாக்தேவியை ஆவாஹனம் செய்து அவள் மூலம அவர் வாதம் புரிகிறார் என்பதை சங்கரர் புரிந்து கொண்டார்.

சங்கரரும் வாக்தேவியைத் துதித்தார். இப்போது வாதத்தில் சங்கரர் உயர்ந்து நின்றார். இடையே கட்டப்பட்டிருந்த திரையும் கீழே விழுந்தது. அமரஸிம்ஹன் தான் தோற்று விட்டதை ஏற்றுக் கொண்டான்.

தான் எழுதிய நூல்களைத் தானே தீயிட்டுக் கொளுத்தினான். அவனது செயலைத் தடுத்த சங்கரரால் அமரஸிம்ஹனது ஒப்பற்ற நூல்களில் ஒன்றே ஒன்றை மட்டும்தான் காப்பாற்ற முடிந்தது. அதுதான் அமரகோசம் என்னும் நிகண்டு. பாரபக்ஷமின்றி எல்லாச் சொற்டொர் களுக்கும் சரியான பொருளைத் தருகிறது இந்தச் சொல்லகராதி.

சங்கரர் காஷ்மீருக்கு விஜயம் செய்தபோது அங்கு சாக்த ஸம்ப்ரதாயம் நிலை பெற்றிருந்தது. சாக்தர்களின் தலைவராக அபிநவகுப்தர் என்பவர் விளங்கி வந்தார்.

அவர் ப்ரம்ம ஸூத்திரமே ஒரு சாக்த நூல்தான் என்பதாக வாதிட்டார்.

ஆனால், சங்கரரோ வேத வியாஸரின் ப்ரம்ம ஸூத்ரத்தின் உள்ளார்ந்த தத்துவங்களை விளக்கி வாதத்தில் அபிநவ குப்தரைத் தோற்கடித்தார்.

மனதார தோல்வியை ஏற்றுக் கொண்டு விட்ட பின்னரும் சாக்தம் தோற்றதை அவரால் ஏற்க இயல வில்லை.

வாதத்தால் சங்கரரை வெற்றி பெற முடியாமை யினால் வேறு வழியில் அவரை அழிக்க முயன்றார்.

ஆதிசங்கரரின் சீடர் குழாத்தில் சேர்ந்து கொண்டார். தமக்கிருந்த தந்திர சித்தி ஆற்றலைப் பயன்படுத்தி

மாந்த்ரீகம் செய்து சங்கரருக்குத் தீவிரமான மூலநோயும் அதனால் மரணமும் சம்பவிக்கும்படி துர்தேவதையை ஏவி விட்டார்.

இவரது மந்த்ர தந்த்ர ப்ரயோகம் சங்கருக்குப் பெரிதாக எந்த பாதிப்பையும் ஏற்படுத்த இயலாதபோதும் மூல நோயினால் தினசரி ரத்தப் போக்கு ஏற்படத் தொடங்கியது.

நாள்தோறும் குருவின் ஆடைகளை துவைத்துக் காய வைக்கும் பொறுப்பை ஏற்றிருந்த சங்கரரின் சீடர்களில் ஒருவரான ஆனந்தகிரி என்பவர் ஆசார்யரது உடையில் ரத்தக்கறை படிந்திருப்பதைக் கண்டு மனம் வருந்தி ஆசார்யரிடம் சென்று அவரது மூலநோய்க்கு காரணம் யாது என வினவினார்.

சங்கரர், கர்ம வசத்தாலோ அன்றி தேஹ தோஷத்தாலோ வந்ததல்ல அந்நோய் என்று சொன்னார்.

“வந்தது வந்தபடியே செல்லும். கவலைப்படாதே. சரீர உபாதையை ஞானியாக உள்ளவன் பெரிதாக பாராட்டக் கூடாது. ஆன்மா ஆனந்தத்தில் திளைத்திருக்கும்போது, உடல் வேதனை ஒரு பொருட்டே அல்ல,” என்றார்.

ஆனந்தகிரி சங்கரர் சொன்னதைப் பொருட் படுத்தாமல் நல்ல வைத்தியர்களை அழைத்து வந்து நோயை குணப்படுத்த முனைந்தார்.

வைத்தியர்கள் பலரும் முயன்றும் எவ்விதப் பலனும் இல்லை.

பத்மபாதர் தம் யோக சித்தியால் இது அபிநவ குப்தரால் ஏவப்பட்ட நோய் என்பதைப் புரிந்து கொண்டார்.

ப்ரணவாகார மந்த்ர ப்ரயோகம் மூலம் ஆசார்யரது நோயை குணப்படுத்திவிட்டார்.

அபிநவகுப்தர் ஏவிய நோய் இப்போது திரும்பிச் சென்று அவரையே தாக்கியது.

நோய்க்கு ஆளான அபிநவ குப்தர் நோயின் கடுமையினால் இறந்து போனார். தன் வினை தன்னையேச் சுட்டு விட்டது.

காஷ்மீரத்திலிருந்து சங்கரர் பத்ரிகாசிரமம் சென்று சில நாள் அங்கே தங்கினார்.

ஹிமயத்தில் பனிக்குன்றுகளைக் கடந்து அவர் பத்ரிநாதம் சென்றார். ஹரித்வாரத்திலிருந்து 185 மைல் தொலைவில் மலையின் உச்சியில் உள்ளது பத்ரிகாசிரமம்.

அது கடல் மட்டத்திலிருந்து 10,250 அடி உயரத்தில் ஹிமயமலைத் தொடரில் அமைந்துள்ளது.

பத்ரியில் அவர் ஏற்கெனவே அமைத்திருந்த நாராயணர் ஆலயத்தில் முறைப்படி வழிபாடு நடப்பதைக் கண்டு மகிழ்ச்சி கொண்டார்.







அத்தியாயம் - 25

# கயிலையில் சங்கரர்

சங்கரர் கயிலாயம் சென்றார் என்று சொல்கிறபோது சிவன் உறையும் சிவலோகம் சென்று வந்தார் என்பதுதான் பரவலான நம்பிக்கை.

ஆனால், பூவுலகில் உள்ள கயிலாயம் சென்று வர இன்றும் பல ஆன்மிக அன்பர்களிடையே அவா உள்ளது. அந்தக் கயிலாய தரிசனத்திற்காகவே அப்பர் பெருமான் முயன்றார். நிறைவில் இறைவன் அவருக்குத் திருவையாற்றில் கயிலாய தரிசனம் தந்தார். ஆகவேதான் திருவையாறு ஸ்தலமே தென் கயிலாயம் என்று போற்றப்படுகிறது.

யோக ஸித்தியால் சிவலோகமே சென்று மீண்டார் என்பவர்களின் நம்பிக்கையை நாம் சந்தேகிக்காத அதே சமயத்தில் அவர் பூலோக கயிலாயம் சென்று தவமிருந்து சிவதரிசனம் பெற்றார் என்றே நாம் இங்கு குறிப்பிடுவோம்.

ஹிமய மலை உச்சியில் அமைந்துள்ள கயிலாய பர்வதம் பத்ரிகாசிரமத்திலிருந்து ஏறத்தாழ முன்னூறு மைல் தூரத்தில் உள்ளது.

இது மேற்கு திபெத்தில் அமைந்துள்ளது. தற்போது சீன அரசின் கட்டுப்பாட்டில் உள்ளது.

இன்று கயிலாயம் சென்று வருவது எளிதாகிவிட்டது. ஆனால், சங்கரர் வாழ்ந்த காலத்தில் இங்கு சென்று வருவது என்பதே அமானுஷ்ய சக்தியால் மட்டுமே ஆகக்கூடிய காரியமாக இருந்தது.

இந்த மலைச் சிகரங்களுக்கு இடையே ஏறத்தாழ ஐம்பது மைல் சுற்றளவில் மானஸரோவர் என்ற ஸ்படிக நீர்த் தடாகம் அமைந்துள்ளது. இங்கிருந்தே சிந்து, ப்ரம்மபுத்ரா ஆகிய நதிகள் உற்பத்தியாகின்றன.

இனி கயிலாயத்தில் சங்கரருக்கு ஏற்பட்ட அநுபவங்களைக் காண்போம்.

சங்கரருக்குக் காட்சி தந்த சிவபெருமான் அவரிடம் ஐந்து ஸ்படிக லிங்கங்களைத் தந்தார். இந்த விஷயம் 'சிவ – ரஹஸ்யம்', 'மார்க்கண்டேய ஸம்ஹிதை' ஆகிய இரண்டு நூல்களிலுமே குறிப்பிடப்பட்டுள்ளது.

இந்த இரண்டு நூல்களிலுமே இந்த லிங்கங்களுக்கான பெயர்களும் தரப்பட்டிருக்கின்றன. இந்தப் பெயர்களும் இரண்டு நூல்களிலுமே ஒரே மாதிரியாகத் தரப்பட்டிருக் கின்றன.

யோக லிங்கத்தைக் காஞ்சிபுரத்திலும், போக லிங்கத்தை ச்ருங்கேரியிலும், வரலிங்கத்தை நேபாளத்தில் நீலகண்ட க்ஷேத்திரத்திலும், முக்தி லிங்கத்தை கேதாரி நாத்திலும், மோக்ஷ லிங்கத்தைச் சிதம்பரத்திலும் ப்ரதிஷ்டை செய்தார்.

சிவபெருமான் சங்கரருக்கு ஸ்படிக லிங்கங்களை அருளியது போலவே அம்பிகையும் உலகத்தவர் நன்மைக்காக ஸ்தோத்திர நூலாகிய ஸௌந்தர்ய லஹரியை வழங்கினாள்.

இந்த நூலுக்குப் பின்னாளில் தான் ஸௌந்தர்ய லஹரி என்ற பெயர் ஏற்பட்டிருக்க வேண்டும்.

'அம்பிகா ஸ்தவ ஸாரம்' என்பது தான் இந்தப் பாடல் தொகுதிக்கு ஆனந்த கிரீயம் என்ற சங்கரர் வரலாற்று நூலில் குறிப்பிடப்பட்டுள்ள பெயராகும்.

இந்த நூலைப் பெற்றுக் கொண்டுத் திரும்பி வரும் பாதையில் தூலி நதி தீரம் வழியாக நடந்து அந்நதி அலெக்நந்தாவுடன் கலக்கும் இடத்தைக் கடக்கும்போது ஏறத்தாழ பாதி ஓலைச் சுவடிகளை பறி கொடுத்தார்.

நூறு பாடல்களைக் கொண்டிருந்த அந்தத் தொகுதியில் பின் ஐம்பத்தொன்பது பாடல்கள் காணாமல் போயிருந்தன.

அவரது அகத்தில் உறையும் அம்பிகையும் "நீயே காணாமல் போன சுலோகங்களைப் பூர்த்தி செய்வாயாக" என்று கட்டளையிட்டாள்.

சங்கரரும் அங்ஙனமே செய்தார்.

ஆசார்யாள் செய்த பக்தி க்ரந்தங்களில் தலையாயது ஸௌந்தர்ய லஹரி. அவரது கவித்துவ ஆற்றலுக்கும் ஸௌந்தர்ய லஹரிதான் எடுத்துக்காட்டாய் திகழ்கிறது.

இந்தப் பாடல்கள் எல்லாமே சிகரிணி என்ற சந்தஸில் அமைந்துள்ளன. வரிக்குப் பதினேழு அக்ஷரங்கள் கொண்டது ஸௌந்தர்ய லஹரி.

தற்போது இந்தப் பாடல் தொகுப்பிற்கே ஸௌந்தர்ய லஹரி என்ற பெயர் வழங்கிக் கொண்டிருந்தாலும், சங்கரர் பத்ரமாக பாதுகாத்துக் கொண்டு வந்த நாற்பத்தோரு பாடல்களுக்கும் ஆனந்த லஹரீ என்று பெயர். சங்கரர் பறிகொடுத்து விட்ட ஐம்பத்து ஒன்பது பாடல்கள் & பின்னாளில் அவரே இயற்றிப் பூர்த்தி செய்தது & அந்தப் பகுதிக்கு ஸௌந்தர்ய லஹரி என்று பெயர்.

'ஸௌந்தர்ய லஹரி' என்றால் அழகின் அலைகள். அம்பிகை அழகின் ஆழ்கடல். அதனை வர்ணிக்கும் ஒவ்வொரு ச்லோகமும் ஒரு அலை மாதிரி.

முதல் நாற்பத்தியொரு ச்லோகங்கள் மந்த்ர சாஸ்த்ர ச்லோகங்கள் மந்த்ர சாஸ்த்ர நுணுக்கங்கள், குண்டலிநீ யோக தத்துவங்கள், ஸ்ரீ வித்யா உபாஸகர்களுக்கான ஆராதனை ரஹஸ்யங்களைச் சொல்கின்றன.

ஆசார்யாளே இயற்றிய பின்னால் வரும் 59 ச்லோகங்களும் சொல்லழகு பொருளழகு இரண்டிலும் ஈடினை இல்லாமல் இருப்பவை.

மொத்தமாக நூறு சுலோகங்களையும் சேர்த்துப் படிக்கும்போது இந்த நூல் சாஸ்த்ரத்திற்கு சாஸ்திரம், ஸ்தோத்ரத்திற்கு ஸ்தோத்ரம், கவிதைக்குக் கவிதை என்று 3 இன் 1 ஆக நமக்குக் கிடைத்து இருக்கிறது.

அம்பிகை பற்றிய மூன்று ஸ்தோத்ர நூல்கள் மிக உயர்ந்தவை என்று கருதப்படுகின்றன. அவை முறையே துர்வாஸர் இயற்றிய 'ஆர்யா த்விசதி', சங்கரர் இயற்றிய 'ஸௌந்தர்ய லஹரி', மூகர் இயற்றிய 'பஞ்சசதி'

இந்த மூன்று நூல்களுக்கும் நடுநாயகமாக விளங்கும் நூல் 'ஸௌந்தர்ய லஹரி'யாகும்.

இந்த ஸௌந்தர்ய லஹரிக்கு அநேக பாஷ்யங்கள் உள்ளன. லக்ஷ்மீதரர் என்பவர் ஒரு உரை செய்திருக்கிறார். இது தவிர ஸௌபாக்யவர்த்தினி, அருணா மோதினி, ஆனந்த கிரி பாஷ்யம், கோபால ஸுந்தரீ என்ற பெயர்களில் பல உரைகள் உள்ளன.

யு.எஸ்.ஸில் ஃபிலடெல்ஃபியா மியூஸியம் ஆஃப் ஆர்ட் என்ற கலைக்கூடத்தில் ஒரு ஏட்டுச் சுவடிக் கட்டு உள்ளது. ஒவ்வொரு ஏட்டிலும் மூன்று சுலோகங்கள், மூன்று ஓவியங்கள் என்று 36 ஏடுகள் உள்ளன.

இதன் ஒரு பிரதி பரோடா மியூஸியத்தில் இருக்கிறது.

திருச்சியில் மலைக்கோட்டையில் தாயுமானவர் கோயிலில் மட்டுவார்குழலி எனும் சுகந்த குந்தளாம்பாள் ஸந்நிதியின் சுற்றுச் சுவரில் ஸௌந்தர்ய லஹரி பொறிக்கப்பட்டுள்ளது.

ஸௌந்தர்ய லஹரீ பற்றிய வேறு சில செய்திகளையும் இங்கு தெரிந்து கொள்வது நல்லது.

ஸௌந்தர்ய லஹரீ என்னும் நூல் சிறந்த மந்திர சாஸ்திரமாக இந்நாடெங்கும் போற்றப்படுவது.

லிங்க புராணத்தில் விநாயகர் வாழ்த்தில் இது மஹாமேரு மலையில் விநாயகரால் எழுதப்பட்டதென்று கூறப்பட்டுள்ளது.

பிறை தவழும் எழில் தோன்றப்
பிறங்கு கதிர் வெண்கோட்டான்

செறிகதிர்செய் தடங்குடுமிச்
செம்பொன் மால்வரை வாய்ப்ப
மறைபுகழும் ஸௌந்தர்ய
லஹரியினை வகுத்தெழுதும்
விறல்கெழுமு வேழமுகன்
விரைமலர்த் தாளிணைத் தொழுவாம்.

மேரு மலையில் எழுதி வைத்தவர் புஷ்பதந்தர் என்றும் ஆனால் அதற்கு முன்பே அது கைலாச மலையில் சிவாலயத்தின் மதிற்சுவரில் எழுதப்பட்டிருந்தென்றும் ஒரு வரலாறு உண்டு.

மேரு மலையில் இருந்ததை கௌடபாதர் க்ரஹித்துப் பின்பு ஆதிசங்கரருக்கு அதை உபதேசம் செய்ததாக ஸௌந்தர்ய லஹரியைத் தமிழ் பாடலாக்கிய வீரை கவிராஜ பண்டிதர் கூறுகிறார்.

அரன்கயிலைப் புறந்தெழுதப்
படுநூலை அருந்தவத்து
புட்ப தந்தன் பரந்தவடவரை
யழுத்த அதைக்
கவுட பாத ருளம் பதித்து
முற்றுந் தரம்பெறு சொல்
அமுதெனப் பின் சங்கரமாமுனிக்கு
அருள அந்த மேகம் சுரந்து
உலகில் வாழும் உயிர்ப்
பயிர் தழைப்பச் சொரிந்ததெனச்
சொல்வர் நல்லோர்.

பொதுவாக ஸௌந்தர்ய லஹரீ என்னும் நூலின் பெரும் பகுதி சங்கராச்சாரியாரால் எழுதப்பட்டது என்பதிலும் முதன் முதலில் அவராலேயே அது உலகிற்கு அளிக்கப்பட்டது என்பதிலும் ஐயமில்லை.

சங்கரர் நமக்காக அருளியிருக்கும் ஸௌந்தர்ய லஹரியின் பயன், நாம் எப்போதும் அம்பாளை ஸ்தோத்ரம் செய்து கொண்டு ஸௌந்தர்யமான தேவி ரூபம் எடுத்து அருள் புரியும் அந்த ஸச்சிதானந்த ஸ்வரூபத்தில் நம்மையேக் கரைத்துக் கொண்டு ஆனந்தமயமாவதுதான்.

## அத்தியாயம் - 26



# ஷண்மத ஸ்தாபகர்

வேதத்தின் அடிப்படையில் அமைந்த பல்வேறு இஷ்ட தெய்வ வழிபாடுகளையெல்லாம் ஒன்றுபடுத்தி அறு சமயங்களை மிகவும் பலமான அஸ்திவாரத்தில் அமைத்தார்.

அதனால் அவரை ஷண்மத ஸ்தாபகாசார்யர் என்று நாம் புகழ்கிறோம்.

வேதத்தில் பல சிவ ஸம்பந்தமாகவும்; பல விஷ்ணு ஸம்பந்தமாகவும் உண்டு. பின்னாளில் ராமானுஜர், மத்வர் போன்றவர்கள் வைஷ்ணவ பரமாக உள்ளவற்றை ஏற்றுக் கொண்டு பிறவற்றை விட்டு விட்டனர்.

சித்தாந்த சைவர்களோ சிவபரமாக உள்ளவற்றை ஏற்றுக் கொண்டு பிறவற்றை விட்டு விட்டனர்.

ஆனால், ஆசார்யாள் மட்டும்தான் வேதம் முழுவதையும் அப்படியே எடுத்துக் கொண்டது.

அதனால்தான் சங்கரரைப் பின்பற்றும் ஸ்மார்த்தர்கள் தெய்வ பேதமின்றி சிவனையும், விஷ்ணுவையும் ஆராதனை செய்கின்றனர்.

சிவனையே முழுமுதற் கடவுளாகப் பார்க்கும் சைவம், விஷ்ணுவையே முழுமுதற் கடவுளாகப் பார்க்கும் வைணவம், சக்தியையே முழுமுதற் கடவுளாகப் பார்க்கும் சாக்தம், கணபதியையே முழுமுதற் கடவுளாகப் பார்க்கும் காணாபத்யம், முருகப் பெருமானாகிய குமரனையே முழுமுதற் கடவுளாகப் பார்க்கும் கௌமாரம், சூர்யனையே முழுமுதற கடவுளாகப் பார்க்கும் ஸௌரம் என ஆறு சமயங்கள் ஏற்கனவே இருந்தன.

இவற்றை வைதிக சமயங்களாக அறிவித்து & அவ்வவற்றுக்குரிய வழிபாட்டு முறைகளை ஒழுங்குபடுத்தி புனரமைத்தார்.

ஸ்மார்த்தர்கள் தங்கள் இல்லங்களில் தெய்வ பேதம் பாராட்டமல் பூஜை செய்ய பஞ்சாயதன பூஜை முறையை ஏற்படுத்தினார்.

ஈசுவரன், அம்பாள், விஷ்ணு, கணேசர், ஸுர்யன் ஆகிய ஐந்து தெய்வங்களின் மூர்த்தங்களை வைத்து பூஜிப்பதே பஞ்சாயதன பூஜை ஆகும்.

ஒவ்வொரு தெய்வத்திற்கும் முழுமையான ரூபம் கொடுத்துப் பூஜை செய்வதுகூட சிரமமாகி விடுமோ என்று ரூப அரூபமாக சில சிலாக்களை (கற்களை) ஒவ்வொரு தெய்வ ரூபத்திற்கும் அவரே தேர்ந்தெடுத்து அவற்றை ஒரு சிறு சம்புடத்திலேயே வைத்து எங்கு வேண்டுமானாலும் எடுத்துச் சென்று பூஜை செய்ய எளிமையான முறையை ஏற்படுத்தினார்.

அப்படிச் சில கற்களைத் தேர்ந்து எடுத்ததில் தேசிய ஐக்யம் வெளிப்படும்படி செய்தார்.

விஷ்ணு மூர்த்தத்திற்கு ஸாளக்ராமத்தைத் தேர்ந்தெடுத்தார். இந்த ஸாளக்ராமம் நேபாளத்தில் கண்டகி நதியில் கிடைப்பது.

அம்பாள் மூர்த்தத்திற்கு அவர் தேர்ந்தெடுத்த ஸ்வர்ண ரேகா சிலா இன்றைய ஆந்திராவில் ஸ்வர்ணமுகி ஆற்றின் கரையில் கிடைக்கிறது.

இன்றைய பாட்னா நகருக்கு இருபது மைல் மேற்கே கங்கையில் கலக்கும் ஸோனபத்ரா நதியில் கிடைக்கும் ஒரு

வகை சிவப்புக் கல் விநாயக மூர்த்தமாகப் பயன் படுத்தப்படுகிறது. இந்தக் கல்லையே ஸோன பத்ரம் என்பர்.

ஸூர்ய மூர்த்தமாக ஸ்படிகக் கல் பயன்படுத்தப் படுகிறது. பல ஊர்களில் பல நீர்நிலைகளில் ஸ்படிகம் கிடைக்கிறது.

சிவனின் மூர்த்தமான லிங்கமாக பாணலிங்கம் பயன்படுத்தப்படுகிறது. இது நமது தேசத்தின் ஹ்ருதய ஸ்தானத்தில் ஓடும் நர்மதை நதியில் கிடைக்கிறது.

இந்த ஐந்தில் பூஜை செய்பவர் தனது இஷ்ட தெய்வத்திற்கான மூர்த்தத்தை நடுவில் வைத்து மற்ற நான்கு மூலைகளில் மற்ற தெய்வ மூர்த்தங்களை வைத்து பூஜிப்பர். எது மத்தியில் இருந்தால் எதெது எந்த மூலையில் இருக்க வேண்டும் என்ற நியதியும் இருக்கிறது.

சங்கரர் செய்த இன்னொரு அருஞ்செயல் கும்ப மேளாவை சமயங்களின் ஒருங்கிணைப்பு மாநாடாக நடத்தும்படி செய்தது.

காலங்காலமாக ஹிந்துக்கள் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை கும்பமேளா என்ற தீர்த்தாடன நிகழ்ச்சியை ஹரித்துவாரிலும், ப்ரயாகையிலும் நடத்தி வருவது நமக்குத் தெரிந்திருக்கும்.

இந்த கும்பமேளாவின்போது பல கோடி மக்கள் கங்கையில் நீராட வருவது வழக்கம்.

சங்கரர் ஏற்படுத்திய தசநாமி ஸம்பிரதாயங்களைச் சேர்ந்த துறவிகள் எல்லோருமே பிரயாகைக்கும், ஹரித்வாருக்கும் வருவது வழக்கம்.

இந்த நாட்டின் எல்லாத் துறவிகளுமே கும்பமேளாவின் போது ஹரித்வாரிலும் ப்ரயாகையிலும் கூடுவர்.

நம் நாட்டில் இன்று அண்மைக் காலத்தில் தோன்றியிருக்கும் துறவியர்கள் அமைப்புகள் உட்பட எல்லா ஸந்நியாஸிகளும் சங்கரர் வகுத்த தசநாமி ஸம்பிரதாயத்திற்குள்தான் வருகிறார்கள்.

துறவிகள் தாங்கள் மேற்கொள்ளும் ஸந்நியாஸ தீக்ஷா நாமத்தின் இறுதியில் ஏதாவது ஒரு பெயரைச் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

அப்படிப் பத்து நாமங்களை சங்கரர் வழங்கியிருக்கிறார்.

அவை வருமாறு:

1. ஸரஸ்வதி, 2. பாரதி, 3. புரி, 4. தீர்த்தர், 5. ஆச்ரமி, 6. கிரி, 7. பர்வத, 8. ஸாகர, 9. வன, 10. ஆரண்ய

இதுபோன்ற ப்ரும்மச்சர்ய ஆசிரமத்தின்போது அதாவது துறவிகளாக முடிவு செய்து ப்ரம்மச்சாரிகளாகப் போகிறவர்கள் 1. சைதன்யர், 2. ஸ்வரூபர், 3. ஆனந்தர், 4. ப்ரகாசர் என்பதாக அறியப்படுகின்றனர்.

இதுவும் சங்கரர் ஏற்படுத்தியதே.

இந்த தசநாமி ஸம்பிரதாயத் துறவிகள் எல்லோரும் கும்பமேளாவில் கூடுகின்றனர்.

இந்தக் கும்பமேளாவில் கூடுகிற துறவிகள், மஹான்கள், ஆசார்யர்கள் எல்லோரும் சமய சமுதாய, கலாச்சாரப் பிரச்னைகளை விவாதித்து அவற்றுக்குத் தீர்வு காணும் மாநாடு ஒன்றை நடத்தும் ஏற்பாட்டினைச் செய்தவர் சங்கரர்.

அதுமட்டுமல்ல.

இவ்விழாவை ஹிந்து சமுதாய வலிவைக் காட்டும் சமுதாய எழுச்சி விழாவாகவும் மாற்றினார்.

இன்றும்கூட எவ்வித முயற்சியும் விளம்பரமும் இன்றி நாட்டின் பல்வேறு திசைகளிலிருந்தும் கோடிக்கணக்கான ஹிந்துக்கள் கும்பமேளாவின்போது கூடுவது சங்கரரின் சாதனைக்கு எடுத்துக்காட்டு.

உலக அளவில் பல்வேறு தொலைக்காட்சிகளில் The most spectacular event என்று வர்ணிக்கப்படும் ஒரு அரிய சமய நிகழ்வு இந்த கும்பமேளா.





## அத்தியாயம் - 27

# சங்கரர் ஏற்படுத்திய மடங்கள்

வைதிக தர்மத்தில் நமது மத நம்பிக்கையை ஒழுங்குபடுத்த சாஸ்திரங்களை வகுத்த நம் முன்னோர் இயக்க ரீதியாக இதனைக் கட்டுப்படுத்த முனைவது தனி மனிதனின் ஆன்மிக முன்னேற்றத்திற்குத் தடையாக அமையும் என்று கருதி எந்தவிதமான இயக்க அமைப்பையும் உருவாக்கவில்லை.

ஆனால், பௌத்த மதம் இயக்க ரீதியாக செயல்பட்டு வேத தர்மத்தை அழிக்க முனைந்தபோது சங்கரர் நமது வேத தர்மிகளுக்காகவும், ஓர் ஆன்மிக அமைப்பை உருவாக்குவது அவசியம் என்று உணர்ந்தார். அத்தகைய அவரது சிந்தனையின் செயலாக்கமே அவர் ஏற்படுத்திய மடங்கள்.

ஜவஹர்லால் நேரு அவர்கள் தமது Discovery of India என்ற நூலில் சங்கரரைப் பற்றிக் குறிப்பிடுகையில் ஒரு விஷயம் சொல்லியிருக்கிறார்.

"தத்வவாதி, இறைஞானி, கவி என்று எல்லாமாயிருந்தவர், ப்ரபஞ்சத்தை மாயை என்று கூறிய அந்த மஹான், உலகத்தோடு ஒட்டாமல் எங்கேயோ ஒதுங்கி நிற்காமல் சமுதாயத்தை நடைமுறையில் எப்படி சீர் பண்ணுவது என்று செயல் வடிவிலேயே ஸ்தாபன ரீதியில் ஆர்கனைஸ் பண்ணிக் காட்டிய அதி சதுரராக வாழ்ந்தவர் சங்கரர்."

மடங்கள் என்று ஏற்படுத்தி வைத்து நமது மதத்தை சாச்வதமாக காப்பாற்ற அவர் செய்த அரும் பணியைத் தான் நேரு சங்கரரின் ஆர்கனைஸிங் ஸாமர்த்தியம் என்கிறார்.

சங்கரருக்கு முன்பு ஹிந்து மதத்தில் மடங்கள் என்பதாக எதுவும் கிடையாது. தனி மனிதர்களின் தவ வலிமை யிலும், மக்களின் தனிப்பட்ட அனுஷ்டான நியமத்திலுமே மதம் வளர்ச்சியடைந்தது.

பௌத்தமும், சமணமும் தங்களை ஸ்தாபன ரீதியாக நன்றாக கட்டுக் கோப்புப் பண்ணிக் கொண்டு அரசர் களின் ஆதரவைப் பெற்று நமது வைதிக தர்மத்தை எதிர்க்கத் தொடங்கின.

அப்படிப்பட்ட காலத்தில் இந்தப் போக்கை எதிர்த்துச் சமாளிப்பதற்காக நம் மதத்தில் இருந்தவர்களை நெல்லிக்காய் மூட்டையாகச் சிதறிப் போகாமல் புளிப்பானையாக நன்றாகக் கிட்டித்து, ஒட்டிக் கொண்டு இருக்குமாறு செய்தே தீர வேண்டிய கட்டாயம் இருந்தது.

இதற்காகத்தான் ஸ்தாபன ரீதியில் ஒரு கட்டுக் கோப்பில் கொண்டு வரும் ஸாதிப்பை சங்கரர் மேற் கொள்ள வேண்டியிருந்தது. இதுவும் கூட ஒரு பெரிய தீமையை விலக்குவதற்கு அத்யாவச்யமாக செய்ய வேண்டியிருந்த ஒரு சின்ன தீமைதான்.

ஸ்தாபன ரீதியான மடங்களின் நிர்வாகப் பொறுப்பை ஏற்கும் ஆசார்யர்கள் தங்களது ஆன்ம

அபிவிருத்திக்கு நேரம் ஒதுக்க இயலாது. எனவேதான் அவர்கள் பெரும்பாலும் ஆன்ம பலம் குறைந்தவர்களாகவே இருக்கிறார்கள். ஒரு சிலர் மட்டுமே இதற்கு விதி விலக்கு.

சங்கரர் ஸ்தாபித்த மடங்களுக்கு அவர் நிர்ணயித்த லக்ஷியமாவது.

1. மக்களிடையே கர்மானுஷ்டானத்தையும், பக்தியையும், வேத சாஸ்திர நம்பிக்கையையும் வளர்த்துக் கொடுக்க வேண்டும்.

2. சாஸ்திர விஷயமாக ஜனங்களுக்கு ஏற்படும் ஸந்தேஹங்களை நிவர்த்தி செய்ய வேண்டும்.

3. அத்வைத பரமான வேதாந்த நூல்களை மக்களிடையே ப்ரச்சாரம் செய்ய வேண்டும்.

பின்னாளில் வந்த ஸ்ரீராமகிருஷ்ண மடம், சின்மயா மிஷன், ஆர்ஷ வித்யா பீடம் ஆகியவை வேதாந்த நூல்களை ப்ரச்சாரம் செய்யும் பணியில் ஈடுபட்டுள்ளன.

சமீப காலத்தில் இந்த விஷயத்தில் சங்கர மடங்களின் பங்களிப்பு இல்லவே இல்லை; இருந்தாலும் அது மிக மிகக் குறைவு.

சங்கர மடங்கள் வெளியிட்டுள்ள உபநிஷத நூல்கள், கீதை பாஷ்யங்கள் மிக மிகக் குறைவே. ஞானத்தை வளர்க்க வேண்டிய இந்த மடங்களே வெறும் கர்மடர்களின் மடங்களாக பூஜை, புனஸ்காரம், தீர்த்த ப்ரஸாதம், பிக்ஷாவந்தனம் என்று தங்களைக் குறுக்கிக் கொண்டுவிட்டது நமது துரதிருஷ்டமே.

தேசத்தின் நான்கு மூலைகளில் நான்கு மடங்களை நிறுவிய சங்கரர், நிறைவாக தாமே ஒரு மடத்தைக் காஞ்சிபுரத்தில் நிறுவி அங்கேயே தங்கினார் என்பது சிலரது அபிப்பிராயம். பலர் இதனை ஏற்க மறுக்கின்றனர்.

தாமே ஒரு மடத்தைத் தலைமையேற்று நடத்த அவர் முடிவு செய்திருந்தால் தேசத்தின் மையத்தில் நர்மதா நதி தீரத்தில் கோவிந்த பகவத்பாதரை அவர் தரிசித்த இடத்தில் தான் நிறுவியிருப்பார். அங்கே அப்படி ஓங்காரேச்வரிலோ, மஹாகாலேச்வரிலோ ஒரு மடம் அமையாத காரணத்தால்

தென்னகத்திலேயே இரண்டு மடங்களை அவர் தோற்றுவித்திருக்க வாய்ப்பில்லை என்பது அவர்களது வாதம்.

சங்கரர் நான்கு திசைகளிலும் நிறுவிய நான்கு மடங்களைப் பற்றிக் காண்போம்.

நாட்டின் கிழக்கு திசையில் ஜகன்னாதம் என்று அழைக்கப்படும் புரியில் மடம் ஒன்று நிறுவப்பட்டது. அதன் ஆசார்யர்கள் வனர், ஆரண்யர் எனவும், ப்ரம்மச்சாரிகள் ப்ரகாசர் எனவும் வழங்கப்பட்டனர்.

இம்மடத்திற்குரிய வேதம் ரிக் வேதம் மஹாவாக்யம்: ப்ரக்ஞானம் ப்ரஹ்ம. இதனை கோவர்த்தன பீடம் என்பர். இதன் முதல் ஆசார்யர் பத்மபாதர் ஆவார்.

நாட்டின் மேற்கு திசையில் துவாரகையில் நிறுவப்பட்டது காளிகா பீடம் ஆகும். இதன் ஆசார்யர்கள் தீர்த்தர், ஆச்ரமி என வழங்கப்படுகின்றனர். ப்ரமச்சாரிகள் ஸ்வரூபர் என அழைக்கப்படுவர்.

இம்மடத்துக்குரிய வேதம்; ஸாம வேதம்; மஹாவாக்யம்: தத் த்வம் அஸி.

இதன் முதல் ஆசார்யர் ஹஸ்தாமலகர்.

நாட்டின் வடதிசையில் ஜோஷி மடத்தில் ஜயோதிர் பீடம் நிறுவப்பட்டது. இதன் ஆசார்யர்கள் கிரி, பர்வத, ஸாகர என வழங்கப்பட்டனர். ப்ரம்மச்சாரிகள் ஆனந்தர் எனப்பட்டனர். இந்த மடத்துக்குரிய வேதம் அதர்வணம்; மஹா வாக்யம்: "அயம் ஆத்மா ப்ரஹ்ம"

இதன் முதல் ஆசார்யர் தோடகாசார்யர்.

நாட்டின் தெற்கு திசையில் ச்ருங்கேரியில் (ச்ருங்க கிரி) நிறுவப்பட்டது சாரதா பீடம்.

அதன் ஆசார்யர்கள் ஸரஸ்வதி, பாரதி, புரி என அழைக்கப்பட்டனர். ப்ரம்மச்சாரிகள் சைதன்யர் என வழங்கப்படுவர்.

இதன் வேதம்: யஜுர் வேதம்; மஹா வாக்யம்: "அஹம் ப்ரம்ம அஸ்மி".

இதன் முதல் ஆசார்யர் சுரேச்வராச்சார்யர்.

சங்கரர் காஞ்சியில் தனது வாழ்நாளின் நிறைவுப் பகுதியைக் கழித்திருக்க வேண்டும் என்பது சிலரது அபிப்பிராயம்.

மாதவீய சங்கர விஜயம் சங்கரர் கேதார்நாத்தில்தான் விதேஹ முக்தி அடைந்தார் என்று கூறுகிறது.

காஞ்சிபுரத்திற்கு சங்கரர் வந்திருந்தபோது அங்கேயும் ஒரு மடம் ஸ்தாபிதம் ஆகியிருக்கலாம்.

அதுபோலவே காசியிலேயே சங்கரர் ஐந்து மடங்களை ஸ்தாபித்ததாகவும் தெரிகிறது. கேரள மாநிலம் திருச்சூரில் கூட ஐந்து சிறிய மடங்களைப் பற்றிச் சொல்லும்போது இவையும் சங்கரரே ஸ்தாபித்ததாகக் கூறப்படுகிறது.

ஆம்நாய பீடங்கள் என்று பார்க்கும்போது நான்கு மடங்கள் மட்டுமே ஆம்நாய பீடங்களாக ஸ்தாபிக்கப்பட்டிருக்க வேண்டும்.

தமிழகத்தில் பின்னாளில் கோயிலூர் ஆதீனம் என்பதாக ஒன்று உருவாகி அதன் கீழ் சில மடங்கள் உருவாயின. இவை அத்வைத வேதாந்த மடங்களாகும்.

இவர்கள் தங்களுக்கு ஆசார்ய பீடமாகக் கருதுவது ச்ருங்கேரியில் உள்ள சாரதா பீடத்தைத் தான்.

எந்த மடத்தை சங்கரரே ஸ்தாபித்தார் என்ற ஆராய்ச்சியில் ஈடுபடுவதை விட்டு விட்டு எந்த மடம் தனது மடத்திற்கு விதித்த நியதியைப் பின்பற்றி முறையாக வேதாந்த ப்ரச்சாரத்திற்கும், வேத கர்மானுஷ்டமான ப்ரச்சாரத்திற்கும் சிறப்பாக பணியாற்றி வருகிறது என்பதைத்தான் பார்க்க வேண்டும்.

இன்று சங்கரர் பெயரில் எந்த மடம் இருந்தாலும் அது அத்வைத வேதாந்த குருபீடம் என்று நாம் கருதுவதில் தவறு இருக்க முடியாது.





அத்தியாயம் - 28

# சங்கரர் மறைந்தார்

தமது யாத்திரையை கேதாரத்தில் நிறைவு செய்தார் சங்கரர்.

தமது பாரத திக் விஜய யாத்திரையை மட்டுமல்ல; தமது சரீர யாத்திரையையே கேதாரத்தில் நிறைவு செய்து கொள்ள சங்கரர் விரும்பினார்.

முப்பத்திரண்டு ஆண்டுகள் நிறைவு பெற்றிருந்த நேரம் அது. தமது பூத உடலை நீக்கும் தருணம் வந்து விட்டதை உணர்ந்தார்.

தமக்குப் பின்னால் தமது ப்ரதான சீடர்கள் நால்வரும் பணியைத் தொடர்ந்து செய்யும் ஏற்பாட்டைச் செய்துவிட்ட திருப்தியில் 'மடானு சாஸனம்' என்னும் நூலை இயற்றி முடித்தார். இந்த நூலில் தாம் நிறுவிய மடங்களின் செயல்பாடுகளும், அவற்றுக்கான விதிமுறைகளும் விளக்கப்பட்டிருந்தன.

அன்று ஏகாதசி தினம். ரக்தாக்ஷி வருஷம் வைசாக சுக்ல ஏகாதசி.

சங்கரர் விதேஹ முக்தி அடைய இந்த நாளையே தேர்ந்து எடுத்திருந்தார். சரீர பரித்யாகத்திற்கு முன்னால் தங்களுக்குக் கடைசியாக அனுக்ரஹிக்க விரும்பும் உபதேசம் யாது என்று சிஷ்யர்கள் கேட்க,

சங்கரர் "வேதோ நித்யம்", "அதீயதாம், ததுதிதம் கர்ம ஸ்வனுஷ்டீய தாம்" என்று தொடங்கி "ப்ராரப்தம் து இஹ புஜ்யதாம் அத பரப்ரஹ்மாத்மநா ஸ்தீயதாம்" என்று முடியும் ஐந்து சுலோகங்களில் உபதேசம் ஒன்றைச் செய்தார்.

இது ஸோபான பஞ்சகம் என்றும், உபதேச பஞ்சகம் என்றும் அழைக்கப்படுகிறது.

இந்த உபதேசம் சங்கரர் முன்னால் அமர்ந்திருந்த அவரது துறவிச் சீடர்களுக்காகக் கொடுக்கப்பட்டது என்பதைவிட, நம் எல்லோருக்குமாக, நாம் எப்படி படிப்படியாக ஆன்மிகப் பயணத்தில் முன்னேறி இறுதியில் பரம்பொருளோடு கரைந்து போவது என்பதற்கான உபதேசம் என்பதாகத்தான் எடுத்துக் கொள்ள வேண்டும்.

அந்த உபதேசம் என்ன என்பதைப் பார்ப்போமே!

''வேதம் விதித்துள்ள கர்மாக்களைச் செய்ய வேண்டும். கர்மாக்களைச் செய்கிறபோதும், கர்ம பலனில் பற்று இல்லாமல் இறை ஆராதனமாக அவற்றைச் செய்ய வேண்டும்.

ஜீவனின் பாப தோஷங்கள் இந்தக் கர்மயோகத்தால் கரைந்து போகும். அப்போது சித்தம் தெளிவாகும். தெளிவான சித்தம் ஸம்ஸார பந்தத்தின் தோஷங்களைத் தெரிந்து கொள்ள உதவும்.

நம்மையே நாம் தெரிந்து கொள்ள ஆத்ம ஞானம் பெற அவா உண்டாகும்.

உற்றார், உறவினர் பந்தத்திலிருந்து விலகி ஞானிகள் மஹான்களின் ஸத்ஸங்கத்தை நாடுவோம்.

நல்ல ஞானி ஒருவரை குருவாக ஏற்று அவருக்கு எல்லாவிதமான பணிவிடைகளையும் செய்து அவரிடம் மந்த்ரோபதேசம் பெற வேண்டும்.

ச்ரவண, மனன, நிதித்யாஸனம் ஆகியவற்றைப் பயில வேண்டும்.

கொஞ்சம் கொஞ்சமாக நான் இந்த உடலல்ல; நான் இந்த மனமல்ல; நான் இந்த அறிவல்ல என்று அறிந்து 'நான் ப்ரஹ்மம்' என்ற பாவத்தோடு இரு.

சரீரம் ப்ராரப்தம் இருக்கும் வரை இருந்தே தீரும். அந்தச் சரீர போஷனை மிகக் குறைந்த அளவில் இருந்தால் போதும்.

உடல் போஷணைக்கான உணவில் ஈடுபாடு காட்டாதே. உடலை வாட்டும் குளிர், வெப்பம் ஆகிய வற்றைப் பொருட்படுத்தாமல் இருக்கப் பழகு. மௌனமாக, இருந்து பழகு. ஏகாந்தத்தில் இரு.

ஸஞ்சித கர்மா, ஆகாமி கர்மா என்ற முன்வினை, பின்வினை ஆகியவற்றின் பலன் ஏதும் ஒட்டாமல் வாழ்ந்து பார்.

ப்ராரப்த வினை தீருகிறவரை சரீரத்தில் ஜீவித்து அதுவும் தீர்ந்தவுடன் பரப்ரஹமமாகவே நிலைத்துவிடு.

'பரப்ரஹ்மாத் மநாஸ்தீயதாம்.'

உபதேசத்தை முடித்து எல்லா சிஷ்யர்களையும் தமது அருட்பார்வையால் ஆசீர்வசித்தார் சங்கரர்.

தாம் குருவை முதன் முதலில் சந்தித்தபோது பாடிய ''தச ச்லோகீ''யை எல்லோரும் பாட அவரது உதடுகளும் உச்சரித்த வண்ணம் இருக்க கண்கள் மூடிக் கொண்டன.

ஆழ்ந்த ஸமாதியில் மூழ்கிப் போனார் சங்கரர்.

ஸ்தூல சரீரத்தை, ஸூக்ஷ்ம சரீரத்தில் கரைத்து, ஸூக்ஷ்ம சரீரத்தைக் காரண சரீரத்தில் கரைத்துக் கொண்டு அகண்ட சைதன்யமாகி விட்டார் சங்கரர்.

சங்கரர் பரம்பொருளில் கரைந்து விட்டதை உணர்ந்து சீடர்கள் அனைவரும் ஓங்கார ஜபம் செய்தனர்.

ப்ரணவ மந்திரம் ஹிமாலயம் எங்கும் எதிரொலித்துக் கொண்டிருந்தது.

ஓங்கார நாதத்தின் நிலை பெற்றுத் தம்மை மறந்திருந்த சீடர்கள் ஆசார்யரின் அன்புக் கட்டளைகள் நினைவு வர அவற்றை நிறைவேற்ற தத்தம் பணியில் ஈடுபட வேண்டி உலகாயத நிலைக்குத் திரும்பி வந்தனர்.

அவர் தனது பூத உடலை உகுத்தது காஞ்சியில்தான் என்று சிவரஹஸ்யம், மார்க்கண்டேய ஸம்ஹிதை, பல சங்கர விஜயங்கள் ஆகியவை கூறுகின்றன.

எது எப்படியோ!

அவர் தனது சுயசரிதையை எழுதி வைக்கவில்லை. அவர் மறைந்து பல நூறு ஆண்டுகளுக்குப் பின்னால் பலர் தங்களுக்குக் கிடைத்த செய்திகளின் ஆதாரத்தில் அவரவர் கோணத்தில் பல விஷயங்களை எழுதிச் சென்றிருக்கிறார்கள்.

அல்ப விஷயங்களுக்காக ஆராய்ச்சி என்ற பெயரில் நாம் ஒருவருக்கொருவர் கருத்து வேறுபாடு கொண்டு மோதிக் கொள்வது எந்த விதத்திலும் நம்மை அத்வைத நிலைக்கு உயர்த்தப் போவதில்லை.

நம்மை அத்வைத ஞான மார்க்கத்தில் உயர்த்த வந்தவர் சங்கரர்.

ஆசார்ய பக்தி, அத்வைத ஞானம் ஆகிய இரண்டும் ஒருங்கிணைந்து நம்மை உயர்த்த வேண்டும்.

எந்த மடத்தின் சிஷ்யர்கள் ஆனாலும், நாம் அனைவரும், ஏன், எந்த மடத்தையும் சாராதவர்களாயினும் நாம் எல்லோரும் ஆதி சங்கரர் தம் பக்தர்கள், சிஷ்யர்கள், குழந்தைகள்.

பரஸ்பர அன்பும், சங்கரர் நம்மிடம் எதிர்பார்த்த சமுதாய ஒற்றுமையில் அக்கறையும் கொண்டு நாம் எல்லோரும் ஆன்மீகத்தில் உயர அந்த ஆதிசங்கரர்தாம் அருள்புரிய வேண்டும்.

நாட்டின் அரசியல் சமய கலாச்சார துறைகளில் தற்போது சகிப்புத்தன்மை மறைந்து காழ்ப்புணர்வு

அதிகரித்து வரும் இந்நாளில் சங்கரரது அன்பும் அரவணைப்பும் நமக்கு வழிகாட்டும் என்பதில் ஐயமில்லை.

இன்றும்கூட ஹிந்து சமுதாய மறுமலர்ச்சிப் பணியில் ஈடுபட்டுள்ள யாவர்க்கும் சங்கரரது பணிமுறை கலங்கரை விளக்கமாக உள்ளது.

தாம் அத்வைதியாக இருந்தும்கூட ஆலய வழிபாட்டை அவர் ஆதரித்து அதனை நமக்காக செம்மைப்படுத்தினார்.

தாம் ஞானியாக இருந்தும்கூட பக்தியைப் பரப்பும் பணியில் அவர் பெருந்தொண்டாற்றினார்.

தாம் ஆன்மிகவாதியாக இருந்தபோதிலும் சமுதாய கலாசாரப் பிரச்சினைகளுக்குத் தீர்வு காண்பதில் தீவிரம் காட்டினார்.

தமக்கென்று தனிக் கொள்கையிருந்தும் கூட மாற்றார் கொள்கைகளை மதித்து அவற்றில் உள்ள முரண்பாடுகளை நீக்கி அவற்றைச் செம்மைப்படுத்திச் செழிக்கச் செய்தார்.

அவர் காட்டிய வழியில் சென்று ஆன்மீக கலாசார சமுதாய மறுமலர்ச்சிக்குத் தொண்டாற்றுவோமாக.





அத்தியாயம் - 29

# இரண்டாவது சங்கரர்

சங்கர பாரம்பரியத்தில் இரண்டாவது சங்கரர் என போற்றப்பட்டவர் வித்யாரண்யர் ஆவார்.

ஸ்ரீ வித்யாரண்ய மஹாஸ்வாமிகள் ஸ்ரீ சிருங்கேரி சாரதா பீடத்தை (1380&1386) பதினாறாவது பீடாதிபதியாக அலங்கரித்தவர். அத்வைத ஆசார்யர்களிலே தலை சிறந்தவர். வியாகரணம், மீமாம்ஸம், ஸ்ம்ருதி, புராணம், வானசாஸ்திரம், ஜோதிடம் முதலிய ஸகல சாஸ்திரங் களிலும் விற்பன்னராக இருந்தவர்.

இவர் இவற்றிய பல அரிய க்ரந்தங்களில் பஞ்சதசியும், ஜீவன் முக்தி விவேகமும் மிகவும் பிரஸித்திப் பெற்றவை.

ஆதி சங்கரர் வாழ்க்கை வரலாற்றை சங்கர திக் விஜயம் என்ற பெயரில் எழுதியவர்.

விஜய நகர ஸாம்ராஜ்ய ஸ்தாபிதம் இவரது அனுக்ரஹமே.

வித்யாரண்யர் விஜயநகர ஸாம்ராஜ்யத்தை ஸ்தாபித்த விவரம் ஸ்ரீ குரு வம்ச காவியத்தில் தரப்பட்டுள்ளது.

மதங்க பர்வதத்தின் அருகே பம்பா க்ஷேத்திரத்தில் ஸ்ரீ விருபாக்ஷேசுவரரின் சந்நிதியில் தவம் செய்து கொண்டிருந்த காலக்கட்டம் அது.

அப்போது ஒரு நாள் ச்ருங்கி என்ற ப்ரம்ம ராக்ஷஸ் வித்யாரண்யரிடத்தில் ஒரு தகவல் தந்தது.

அந்தப் பகுதியில் புராதனமான ராஜஸிம்மாஸனம் ஒன்று புதையுண்டு கிடப்பதாகவும், அந்த ஸிம்மாஸனத்தை வெளியே கொணர்ந்து அப்பகுதியில் ஒரு ராஜதானி அமைய வேண்டும் என்பது தனது விருப்பம் என்று அந்த ப்ரம்ம ராக்ஷஸ் கூறியது.

ப்ரம்மராக்ஷஸின் விருப்பம் நிறைவேறும் காலம் விரைவில் வரும் என்று வித்யாரண்யர் கூறிவிட்டு தமது தவத்தைத் தொடர்ந்தார்.

ஒரு நாள் அவர் கண் விழித்துப் பார்த்தபோது ராஜகுமாரர்கள் போன்று தோன்றிய இரு இளைஞர்கள் அவரைக் காண்பதற்காகக் காத்திருந்ததைக் கண்டார்.

"சகோதரர்கள் போலத் தோற்றமளிக்கும் நீங்கள் இருவரும் யார்? இவ்விடத்திற்கு வந்த காரணம் என்ன?" என்று கேட்டார்.

அவ்விருவரில் மூத்தவராக இருந்தவர் பதிலளித்தார்.

"சுவாமிகளே! என் பெயர் ஹரிஹரன். எனது இளைய சகோதரனான இவனுடைய பெயர் புக்கன்.

நாங்கள் யாதவ குலத்தைச் சார்ந்த லிங்கமரின் புதல்வர்கள். அவர் மங்கள நிலையம் என்ற ஊரில் ஒரு சிற்றரசராக இருந்தார்.

ஆனால், எங்களுக்கு ஒரு பெரிய ஸாம்ராஜ்யத்தை நிறுவி ஆக வேண்டும் என்ற விருப்பம் சிறு வயது முதல் உண்டு.

அதை நிறைவேற்றிக் கொள்வதற்காக காகதீய மன்னரான ப்ரதாப ருத்ரரிடம் பொக்கிஷக்

காப்பாளர்களாகத் தற்காலிகமாக வேலைக்குச் சேர்ந்தோம்.

காகதீய மன்னரை டில்லி சுல்தான் படை வெற்றி கொண்டபோது நாங்கள் இருவரும் கைதிகளாக்கப்பட்டு தில்லிக்கு இழுத்துச் செல்லப்பட்டோம்.

சுல்தானின் நம்பிக்கைக்குப் பாத்திரர்கள் ஆனதால் எங்களைப் பெரும் பதவிகளில் அமர்த்தினான் அந்த சுல்தான்.

தெற்கில் ஏற்கெனவே சுல்தானால் தோற்கடிக்கப் பட்டிருந்த வல்லாள அரச வம்சத்தினர் தங்களை சுதந்திர நாடாக ப்ரகடனம் செய்தனர். அவர்களை ஒடுக்குவதற் காக தில்லி சுல்தான் ஒரு பெரும் படையுடன் எங்களை அனுப்பினான்.

வல்லாள அரசனை எங்களால் கொல்ல இயல வில்லை. எங்கள் படையும் சிதறிப் போயிற்று. நாங்கள் தற்போது தலைமறைவாக காடுகளில் திரிந்து கொண்டு இருக்கிறோம்.

சுல்தானின் நம்பிக்கையை பெறுவதற்காக நாங்கள் நிர்ப்பந்தமாக முஸ்லீம்களாக மாற வேண்டி வந்தது.

இஸ்லாமிய ஆட்சி பரவினால் நம்முடைய திருக்கோயில்கள், நமது பண்பாடு, நமது தர்மம் அழிந்து போய்விடும். இதைத் தடுத்து நிறுத்த எங்களால் என்ன செய்ய முடியும் என்றே தெரியவில்லை.

இந்தக் கவலையுடன் நாங்கள் உறக்கம் இல்லாமல் திரிந்தோம். ஒரு நாள் அயர்ந்து ஒரு மரத்தடியில் உறங்கிய போது நான் ஒரு கனவு கண்டேன்.

சிவபக்தர் ஒருவர் எனக்குக் கனவில் காட்சியளித்தார்.

"அப்பா ஹரிஹரா! இனி உனக்கு நல்ல காலம் பிறக்கப் போகிறது. நீ ஒரு ஹிந்து ஸாம்ராஜ்யத்தை உருவாக்கும் காலம் கனிந்து வருகிறது.

பம்பா க்ஷேத்திரத்தில் விருபாக்ஷேசுவரரின் ஸந்நிதியில் ஸ்ரீ வித்யாரண்யர் என்ற மஹானை நீ தரிசிப்பாய்.

அவருடைய அனுக்ரஹத்தால் நீ ஸாம்ராஜ்யத்திற்கு அதிபதி ஆவாய்" என்று கூறினார்.

"என் கனவில் தோன்றி ஆசியளித்த சிவயோகி குறிப்பிட்ட மஹா புருஷர் தாங்களாகத்தான் இருக்க வேண்டும். தங்கள் வழிகாட்டுதலுக்காக நாங்கள் வந்திருக்கிறோம்."

ஹரிஹரனும், புக்கனும் வித்யாரண்யரை சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தனர்.

"க்ஷத்ரிய இளைஞர்களே! உங்களுடைய வரவிற்காகவே நான் காத்திருந்தேன். நீங்கள் உடனே ஆனேகுந்திக்குச் செல்லுங்கள். உங்கள் படைவீரர்கள் உங்களைச் சந்திப்பார்கள். நீங்கள் யாரிடம் தோல்வியடைந்தீர்களோ அவர்களோடு மீண்டும் யுத்தம் செய்யுங்கள். இம்முறை வெற்றி உறுதி.

துங்கபத்ரா நதிக்குத் தென்புறத்தில் ஒரு புதிய நகரத்தை நிர்மாணம் செய்யும் காலம் விரைவில் கூடிவரும் விருபாக்ஷேசுவரரின் அனுக்ரஹம் உங்களுக்குப் பூரணமாக இருக்கிறது."

இப்படிக் கூறிய வித்யாசரண்யர் "நீங்கள் எனக்கு ஒரு வாக்குறுதி செய்து தர வேண்டும். செய்வீர்களா?" என்று கேட்டார்.

"தங்களையே எங்கள் குரு நாதராக நாங்கள் ஏற்றுக் கொண்டு உள்ளோம். தங்கள் உத்தரவு என்ன என்பதை மட்டும் கூறுங்கள். அதை நிச்சயம் நிறைவேற்றுவோம்," என இரு சகோதரர்களும் ஒருமித்த குரலில் உறுதி தந்தனர்.

"நீங்கள் இருவரும் காலச் சூழலால், நிர்பந்தத்தினால் மிலேச்ச மதத்தை ஏற்றுக் கொண்டு விட்டீர்கள். இப்போது நீங்கள் மனப்பூர்வமான தாபத்துடன் உங்கள் தாய் தர்மத்தை மீண்டும் க்ரஹித்துக் கொள்ளுங்கள்."

"ஆம்! சுவாமிஜீ! பலவந்தத்தினால் நாங்கள் நமது தர்மானுஷ்டானங்களை விட்டு மிலேச்சர்களாக வாழ்ந்தோம். அதற்காக மிகவும் வருந்துகிறோம். இதற்குப் ப்ராயஸ்சித்தமாகவே ஒரு தர்மஸாம்ராஜ்யத்தை ஸ்தாபிக்க உறுதியளிக்கிறோம்.

அவர்களது உறுதியான நிலை கண்டு வித்யாரண்யர் மகிழ்ந்தார்.

மேலே கண்ட சம்பவத்துக்கு அகச்சான்றாக பஞ்சதசீ க்ரந்தத்தில் 'திருப்தி தீபம்' என்ற அத்யாயத்தில் உள்ள இந்த சுலோகம் அமைகிறது.

க்ருஹீதோ ப்ரஹ்மண: ம்லேச்சை:
ப்ராயச்சித்தம் சரந்புனை: |
ம்லேச்சை: ஸம்கீர்யதே நைவ
ததாபாஸ: சரீரகை: || (7–239)

"ஒரு ப்ராம்மணன் மிலேச்சர்களிடம் சிக்கிக் கொண்டு பலவந்தமாக மத மாற்றம் செய்யப்படுகிறான். அப்போது தன் ஆசார அனுஷ்டானங்களை எல்லாம் கைவிட நேருகிறது.

அந்த நிலையில் பலவிதமான கஷ்டங்களை மனத்தினாலும் சரீரத்தாலும் அனுபவித்துக் கொண்டிருக்கிறான். பிறகு எப்படியோ அவர்களிடமிருந்து தப்பிச் சென்றுவிட்டால், தான் ஆசாரப்ரஷ்டனாக இருக்க நேர்ந்ததை நினைந்து வருந்தி வருந்தி பல ப்ராயஸ்சித்தங்களைச் செய்து கொண்டு சுத்தமடைந்து முன்போல தூய்மையான வாழ்க்கையைத் தொடங்கி விடுவான்.

அதேசமயம் மறுபடியும் மிலேச்சர்களிடம் அகப்பட்டுக் கொண்டு விடாதபடி மிகவும் ஜாக்கிரதையாகவும் இருப்பான்."

சரீராதி ப்ராந்திகளில் சிக்கிக் கொண்டு கஷ்டப்படும் முமுக்ஷுவான ஜீவனுக்கு அந்த ப்ராம்மணனை த்ருஷ்டாந்தமாகக் காட்டியிருக்கிறார் ஸ்ரீ வித்யாரண்யர்.

இதன் மூலம் ஒரு சமுதாய ரீதியான உயர்ந்த கருத்தையும் கூறுகிறார்.

அறியாமையாலோ, கஷ்டத்தாலோ, ஏதோ ஒரு கட்டாயத்தாலோ ஆசாரத்தை அனுஷ்டிக்காமல் இருந்துவிட்டவர்கள், மனம் வருந்தி, திருந்தி மனப்பூர்வமான தாபத்துடன் வந்து சரணடைந்தால் அப்போது அவர்கள் அன்புடன் ஏற்றுக் கொள்ளப்பட வேண்டும்.

ஸ்ரீ வித்யாரண்யர் ஆழ்ந்து சிந்தித்து ஒரு முடிவுக்கு வந்தார்.

துங்க பத்ரா நதிக்குத் தென்புறத்தில் புதிய ராஜதானி நகரம் உருவாக்கப்பட வேண்டும். அவ்விடத்தில் நடந்த ஒரு சம்பவமே இதற்குக் காரணம் ஹரிஹரரும் புக்கரும் நதியைக் கடந்து தென்புறம் வந்து வேட்டையாடியபோது அவர்களுடைய வேட்டை நாய்கள் ஒரு முயலைத் துரத்தின.

ஒரு குறிப்பிட்ட இடம் வரை பயந்து ஓடிய முயல் அந்த இடத்தை அடைந்தவுடன் தன் பயத்தை விட்டுத் திரும்பி நின்று நாய்களை எதிர்த்தது. வேட்டை நாய்கள் பயந்து ஓடி விட்டன.

அந்த இடத்தில் ராஜதானி அமைந்தால் அங்கு அமர்ந்து ஆள்பவர்கள் வீரமுள்ளவர்களாக இருப்பார்கள்.

பிறகு அவர் க்ரஹ ஸஞ்சாரங்களை ஆராய்ந்து தாது வருடம் வைசாக மாதம் சுக்ல பக்ஷம் ஸப்தமி மக நஷத்திரம் கூடிய பானு வாரத்தைப் புதிய நகர நிர்மாணத் திற்குத் தொடக்க நாளாக குறித்தார். இது நடந்தது 1336ல்.

ஹரிஹரர், புக்கர் ஆகிய இருவரும் படைகளைத் திரட்டவும், போர்த் தளவாடங்களை வாங்கவும் தேவையான குதிரைப்படை, யானைப்படை ஆகியவற்றை அமைக்கவும் வித்யாரண்யரே பொருட்செல்வம் தந்தார் என்பது வரலாறு.

அவருக்கு இந்தப் பொருட்செல்வம் கிடைத்த வரலாறும் சுவையானது.

வித்யாரண்யர் பூர்வாசிரமத்தில் ஓர் ஏழை அந்தணர் குடும்பத்தில் பிறந்தவர். தனது குடும்பத்து வறுமையைப் போக்க மஹாலஷ்மியைக் குறித்துத் தவம் செய்தார்.

அவரது தவத்தின் பயனாய் மஹாலஷ்மி அவர் முன் தோன்றினாள். "பூர்வ ஜன்ம கர்ம பலன் காரணமாக உனக்கு இந்த ஜன்மாவில் பொருட்செல்வம் பெறும் வாய்ப்பு இல்லை. அடுத்த ஜன்மாவில் உனக்கு நான் அளவற்ற செல்வத்தை அருள்வேன்" என்றாள்.

வித்யாரண்யருக்கு ஒரு யோசனை தோன்றியது.

ஸந்நியாஸம் மேற்கொண்டால் அது மறுஜன்மா என்று சொல்வார்களே. எனவே, இப்போதே ஸந்நியாசம் பெற்றுக் கொண்டு விட்டால் மஹாலக்ஷ்மி அருள் புரிந்துதானே ஆகவேண்டும்.

உடனே துறவு பூண்ட வித்யாரண்யர், "அம்மா! ஸந்நியாஸம் என்பது மறுஜன்மாதானே. எனவே எனக்கு மறு ஜன்மா வந்து விட்டது. இப்போது நீ செல்வத்தை அருளலாமே" என்று மஹாலக்ஷ்மியிடம் ப்ரார்த்தித்தார்.

அவளும் அளவற்ற தங்கம், வைரம், வைடூர்யம், முத்து, மாணிக்கம் என்ற ஸகல நவநிதிகளையும் வர்ஷித்து விட்டாள்.

சகல செல்வமும் கிடைத்த பின்னர்தான் வித்யாரண்யருக்கு தனது அறியாமையால் தான் செய்த தவறு புரிந்தது.

ஸந்நியாஸிக்குப் பணத்தால் என்ன பயன்?

தனக்கு மஹாலக்ஷ்மி அருளிய செல்வத்தைக் கொண்டு சமுதாயத்திற்கும் தர்மத்திற்கும் ஏதோ நல்லது நடக்க இருக்கிறது என்பது மட்டும் அவருக்குப் புரிந்தது.

இப்போது ஹரிஹரர் புக்கர் ஆகிய இருவரும் தன்னிடம் வந்து சரண் அடைந்தவுடன் அந்த செல்வத்தை கொண்டு அவர்களை தர்ம ராஜ்ய ஸ்தாபனம் செய்ய ஏற்பாடு செய்தார்.

ஹரிஹரர் புக்கர் ஆகியோர் ஸ்தாபித்த ராஜதானிக்கு வித்யாரண்யரின் பெயராலேயே "வித்யாரண்யநகர்' என்று பெயர் சூட்டினர். அதுவே காலப்போக்கில் வித்யா நகர் ஆகி பின் விஜய நகர் ஆகிவிட்டது.

தலைநகர் பெயராலேயே அந்த ஸாம்ராஜ்யமே விஜய நகர ஸாம்ராஜ்யம் ஆகிவிட்டது.

ஹரிஹரர், புக்கரின் உறவினன் கம்பண்ணன்தான் தமிழகத்தில் இஸ்லாமிய ஆட்சியை முடிவுக்குக் கொண்டு வந்தவன்.

மாலிக்காஃபூரின் படையெடுப்பால் நிர்மூலமாக்கப் பட்டிருந்த மதுரை மீனாக்ஷி கோயிலும், ஸ்ரீரங்கம் ரங்கநாதர்

ஆலயமும் இன்னும் பல ஆலயங்களும் மீண்டும் கம்பண்ணராலேயே புனர்நிர்மாணம் செய்யப் பட்டன. ஏறத்தாழ அறுபதாண்டுக்காலம் இஸ்லாமியர் களால் பாழ்படுத்தப்பட்ட நமது தேசம் மீண்டும் மறுமலர்ச்சி பெற்றது விஜய நகர ஸாம்ராஜ்யத்தாலேயே. அந்த விஜய நகர ஸாம்ராஜ்யத்திற்கு வித்திட்டவர் மஹான். வித்யாரண்யர் ஆவார்.

ஜனங்களின் நல்வாழ்விற்கு சஸ்திரம், சாஸ்திரம் ஆகிய இரண்டுமே தேவைப்படுகின்றன.

மாற்றாரை வேரறுக்க சஸ்திரம் அதாவது ஆயுதம் தேவைப்படுகிறது. மாற்றார் மூலம் ஏற்படும் தீமைகளை அகற்றுவது ஆயுதமே.

நமது ஜீவன் புலன்கள் வழியே சென்று கெட்டுப் போகாமல் ஆத்ம ஸம்ரக்ஷிணத்திற்குத் தேவைப்படுவது சாஸ்திரம்.

**விஜய நகர ஸாம்ராஜ்யத்தின் மூலம் க்ஷத்ரிய தர்மத்தையும், ஸ்ரீ சங்கர மடங்களின் புணருத்தாரணத்தால் ப்ராம்மண தர்மத்தையும் நிலைநாட்டியவர் வித்யாரண்யர்.**

ஆகவேதான் அவரை இரண்டாம் சங்கரர் என்று இன்றும் போற்றுகிறோம்.

ஸ்ரீ வித்யாரண்யர் பூர்வாசிரமத்தில் ஏகசிலா நகரம் என்ற ஊரில் (தற்போது இது வாரங்கல் என்று அறியப்படுகிறது) அந்தணர் குடும்பத்தில் பிறந்தவர். இவருக்கு இளைய சகோதரர் ஒருவரும் இருந்தார்.

வித்யாரண்யரின் பூர்வாசிரமப் பெயர் மாதவர். இவரது தம்பியின் பெயர் ஸாயனர்.

மாதவர் காசி சென்று சாஸ்திரங்களைப் படித்தார். இளையவரான ஸாயனர் ச்ருங்கேரி பீடத்தின் அப்போதைய பீடாதிபதியாக இருந்த ஸ்ரீவித்யா சங்கர தீர்த்தர் (1229&1333) என்பவரிடம் தீக்ஷை பெற்று "ஸ்ரீ பாரதி கிருஷ்ண தீர்த்தர்" என்ற பெயருடன் ஸந்நியாஸியாக ஆனார். இது நடந்தது 1328ல். காசி சென்றிருந்த அண்ணன் ஸ்ரீ மாதவர் தன் படிப்பு முடிந்து ஊர் திரும்பியபோது தம்பி

துறவு மேற்கொள்ள வீட்டை விட்டுச் சென்றுவிட்ட தகவலை பெற்றோரிடமிருந்து அறிந்து கொண்டார்.

உடனே தனது தம்பி ஸந்நியாஸியாக வாழ்ந்து கொண்டிருந்த ச்ருங்கேரிக்குப் பயணமானார்.

வழிநெடுக காட்சிகள் அவருடைய உள்ளத்தில் மிகுந்த பாதிப்பை உண்டு பண்ணின.

புதுமையான அக்ஹாரங்கள் பல அழிக்கப் பட்டிருந்தன. பல அக்ரஹாரங்கள் வெறிச்சோடிக் கிடந்தன. பாமர மக்கள் ஆயிரக்கணக்கில் அன்னிய மதத்திற்கு பலவந்தமாக மாற்றப்பட்டிருந்தனர். ஆலயங்கள் தகர்க்கப்பட்டிருந்தன.

மக்களைப் பாதுகாக்க வேண்டிய மன்னர்கள் தங்களது அரச கடமையை மறந்துவிட்டிருந்தனர். பகைவர்கள் நாட்டையே அழித்துக் கொண்டிருந்த வேளையில் அவர்களை எதிர்த்துப் போரிட வக்கில்லாமல் தங்களுக்குள் சண்டையிட்டுக் கொண்டிருந்தனர்.

உள்ளம் ஏங்கித் துடிக்க ப்ரார்த்தனையாக உதடுகள் முணுமுணுத்தன.

"பகவானே! ஒரு புதிய சாம்ராஜ்யத்தை நிறுவக்கூடிய ஆற்றலும் மன உறுதியும் படைத்த அரசர்களைத் தோற்றுவிக்க மாட்டாயா?"

ச்ருங்கேரியில் தங்கியிருந்த தனது தம்பியின் மூலம் மாதவர் ஸந்நியாஸம் பெற்றார்.

மாதவ வித்யாரண்யர் என்ற நாம கரணம் சூட்டப்பட்டார்.

பின்னாளில் எத்தனையோ க்ரந்தங்களை மாதவ வித்யாரண்யர், ஸாயன பாரதி தீர்த்தருடன் சேர்ந்து இயற்றியதால் எதை யார் எழுதினார்கள் என்பதில் கூட குழப்பம் நீடிக்கிறது.

உதாரணமாக வேத பாஷ்யம் செய்தவர் மாதவ வித்யாரண்யர். ஆனால், அந்த பாஷ்யமோ ஸாயன பாஷ்யமே என்று அறியப்படுகிறது.

ஸ்ரீ வித்யாரண்யரை இரண்டாம் சங்கரர் என்று குறிக்கும் அளவுக்கு அவர் ஏராளமான நூல்களை எழுதியுள்ளார்.

1. ஸர்வதர்சன ஸங்க்ரஹம்
2. விவரனோ – ப்ரமேய ஸங்க்ரஹம்
3. விவரோணாபந்யாஸம்.
4. பஞ்சதசீ
5. ஜீவன் முக்தி விவேகம்
6. த்ருக் த்ருச்ய விவேகம்
7. அபரோக்ஷானுபூதி தீபிகா.
8. ஜைமினி ந்யாயமாலா.
9. ஜைமினி ந்யாயமாலா விஸ்தாரம்.
10. அனுபூதி ப்ரகாசம்.
11. ஐதரேயோபநிஷத் தீபிகா.
12. ந்ருஸிம்ஹ உத்தரதாபணீயோபணிஷத் தீபிகா.
13. கைவல்யோபநிஷத் தீபிகா.
14. தைத்திரீய உபநிஷத் தீபிகா.
15. சாந்தோக்ய உபநிஷத் தீபிகா.
16. பராசர மாதவீயம்
17. காலமாதவா (கால நிர்ணயம்)
18. ப்ரஹ்மவித் ஆசீர்வாத் பத்ததி.
19. ஸ்ரீ வித்யா அர்த்த தீபிகா.
20. ஸங்கீத ஸாரம்.
21. மாதவீய ஜ்யோதிஷம்.
22. மாதவீய தாது வ்ருத்தி.
23. ஸ்ரீ சங்கர திக் விஜயம்.
24. ப்ரஹறதாரண்யக வார்த்திக ஸாரம்.
25. லகுஜாதக காரிகை.
26. ஸூர்ய ஸித்தாந்தம்.
27. வ்யவஹார மாதவம்.
28. வையாஸிக ந்யாயமாலா விஸ்தாரம்.
29. வேத பாஷ்யம்.

*ஸ்ரீ பாரதி கிருஷ்ண தீர்த்தர் 1380ல் விதேஹ முக்தி அடைந்த பிறகு இவர் பீடாதிபதியாக பொறுப்பேற்று 1386 வரை பீடாதிபத்யம் வகித்து இருக்கிறார்.*





அத்தியாயம் - 30

# நிறைவாக ஒரு வார்த்தை

ஜகத்குரு ஆதிசங்கரரைப் பற்றிய சுலோகம் ஒன்று உண்டு.

ச்ருதி–ஸ்ம்ருதி–புராணானாம்
ஆலயம் கருணாலயம் |
நமாமி பகவத் பாத
சங்கரம் லோக சங்கரம் ||

ச்ருதி—ஸ்ம்ருதி, மற்றும் புராணங்களின் ஆலயமாய் விளங்குபவரும், கருணையின் ஆலயமானவரும் பகவத்பாத சங்கருமாகிய வையகத்திற்கு நன்மை செய்பவரை வணங்குகிறேன்.

இந்த உலகிற்கு நன்மை செய்ய விரும்புவதற்கு முதலில் இந்த உலகத்தவர்களது பரிதாப நிலை கண்டு மனதில் ஒரு பரிவுணர்ச்சி வேண்டும்.

யாராவது துன்பத்தில் சிக்கிக் கொண்டிருந்தால் அவரை அதிலிருந்து விடுவித்து அவரது துன்பத்தைப் போக்க வேண்டும் என்ற எண்ணம் யாருக்கு இருந்தாலும் நாம் அவர்களை "தயாளுபாவர்" என்று புகழ்வோம்.

சங்கரருக்கோ உலகத்து மக்கள் யாவருக்கும் ச்ரேயஸ்ஸைத் தரவேண்டும் என்ற தயை உணர்வு மிகவும் அதிகமாகவே இருந்தது. மற்ற எவர்க்கும் இருந்ததைவிட அதிகமாகவே இருந்தது.

அதனாலேயே அவரை கருணையின் உறைவிடம் என்பதாக கருணாலயம் என்றச் சொற்றொடரால் குறிக்கிறோம்.

உலகத்து மக்களை உய்விக்க வேண்டும் என்ற பரிவுணர்ச்சி மட்டும் இருந்தால் போதாதே. அவர்களை உய்விப்பதற்கான வழி முறை தெரிந்திருக்க வேண்டுமே. இந்த வழிமுறைகள் நமது சுருதிகளாகிய வேதங்களிலும், ஸ்ம்ருதிகளாகிய தர்ம சாஸ்திரங்களிலும், புராணங்களிலும் கூறப்பட்டுள்ளன.

யார் ஒருவர் இந்த க்ரந்தங்களின் பொக்கிஷமாக இருக்கிறாரோ அவரால்தான் உலகத்தவர் உய்ய வழிகாட்ட இயலும்.

அத்தகைய தர்ம க்ரந்தங்களின் களஞ்சியமாக விளங்கியவர் சங்கரர் என்பதை 'ச்ருதி—ஸ்ம்ருதி—புராணானாம் ஆலயம்' என்ற சொற்றொடர் குறிக்கிறது.

He was the Repository all Vedic Knowledge

சங்கரரும் நம்மைப் போல ஒரு மனிதராக உலவியவர்தான்.

"நாமும் மனிதர், அவரும் மனிதர். அப்படியிருக்கும் பொழுது" அவருக்கு மட்டும் எப்படி வழிகாட்டத் தெரிந்தது என்ற கேள்விக்குப் பதில் ஒரு வைத்தியர் நோயாளியைப் பார்ப்பதற்கும், வைத்தியர் அல்லாத

ஒருவர் ஒரு நோயாளியைப் பார்ப்பதற்கும் உள்ள வேறுபாடுதான்.

சங்கரர் வைத்தியராக இருந்தவர். நாம் சாதாரண மானவர்கள்.

ச்ருதி, ஸ்ம்ருதி, புராணங்களின் இருப்பிடமாம் சங்கரருக்குக் கருணையும் இருந்ததால், உலகிற்கு அவரால் நன்மை செய்ய முடிந்தது.

வேத நெறி தழைத்தோங்கச் செய்ததோடு, நாம் அனைவரும் அந்த வேதநெறியில் செல்லவேண்டும் என்றும் நமக்கு அறிவுறுத்தியவர்.

ச்ருதி—ஸ்ம்ருதி—புராணங்களில் நாம் வைதீக நெறியில் எங்ஙனம் செல்ல வேண்டும் என்ற வழி முறைகள் காட்டப்பட்டிருக்கின்றன.

நாம் ச்ரேயஸ்ஸை அடைய அவற்றில் கூறப்பட்டுள்ள அறநெறிகளைப் பின்பற்ற வேண்டும். அத்தகைய அறநெறிகளை நமக்குப் புரிகிற விதத்தில் எடுத்துச் சொல்லி வழிகாட்டியவர் சங்கரர்.

அத்தகைய லோக சங்கரரான சங்கரரின் திருவடிகளில் வீழ்ந்து பணிவோமாக.

அவர் அன்றைக்கு வழி காட்டியதால் இன்றளவும் நாம் அந்த வழியில் நடந்து வருகிறோம். இனி வருகின்ற தலைமுறையினரும் இந்தப் பாதையினின்று பிறழ்ந்து போகாமல் நாம் காப்பாற்ற வேண்டும்.

இதற்கு முதலில் தேவைப்படுவது அபிமானம். இந்த வைதிகப் பண்பாடு நம்முடையது என்ற அபிமானம் இருக்க வேண்டும்.

அத்தகைய அபிமானத்தோடும், பிடிமானத்தோடும் நாம் வாழ்வதுதான் சங்கர பகவத்பாதருக்கு நாம் செலுத்தும் அஞ்சலியாகும்.



## சங்கரர் இயற்றிய வேதாந்த ப்ரகரண நூல்கள்

1. விவேக சூடாமணி
2. உபதேச ஸஹஸ்ரி
3. அபரோக்ஷானுபூதி
4. வாக்ய வ்ருத்தி
5. சதசுலோகி
6. தச சுலோகி
7. ஏக சுலோகி
8. ஸர்வ வேதாந்த ஸங்க்ருஹம்
9. ப்ரபஞ்ச ஸாரம்
10. நிர்வாண ஷட்கம்
11. நிர்வாண மஞ்சரி
12. அத்வைதானுபூதி
13. ஸ்வாத்ம ப்ரகாசிகா
14. ப்ரபோத ஸுதாகர
15. ப்ரம்மானுசிந்தனம்
16. ப்ரச்னோத்தர–ரத்ன–மாலிகா
17. யோக தாராவளி
18. உபதேச பஞ்சகம்
19. யதி பஞ்சகம்
20. கௌபீன பஞ்சகம்
21. மாயா பஞ்சகம்
22. தத்துவ உபதேசம் முதலியன

## சங்கரர் எழுதிய பாஷ்ய நூல்கள்

1. ப்ரும்ம ஸூத்ரம்
2. தச உபநிஷத்துகள்
3. பகவத் கீதா
4. லலிதா த்ரிசதி
5. ஸனத்ஸீஜாதீயம்
6. விஷ்ணு ஸஹஸ்ரநாமம்
7. ஹஸ்தாமலகீயம் முதலியன




*இது தவிர 60க்கும் மேற்பட்ட பக்தி ஸ்தோத்திரங்கள்*

